# சு. சமுத்திரம் சிறுகதைகள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்கு (Ph.D.)
ஆய்வின் ஒரு பகுதியாகச் சமர்ப்பிக்கப்பட்ட ஆய்வேடு

*ஆய்வாளர்*

**சு. பழனிமுத்து**

**பதிவு எண். 1415**

*நெறியாளர்*

**முனைவர் மு. பாண்டி**

தமிழ்த்துறை தலைவர்
தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-3.




**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

**காரைக்குடி-630 003.**

**நவம்பர் 2008**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் மு.பாண்டி,**
பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 630 003

**'சு.சமுத்திரம் சிறுகதைகள்'** என்னும் தலைப்பில் **திரு.சு.பழனிமுத்து** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

12/11/2008

(முனைவர் மு.பாண்டி)
நெறியாளர்

முனைவர் மு.பாண்டி, எம்.ஏ.,எம்.ஏ.,எம்.பில்.,பிஎச்.டி.,
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

இடம் : காரைக்குடி
நாள் : 12.11.2008

12/11/2008

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

# ஆய்வாளர் உறுதிமொழி

**சு.பழனிமுத்து,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்.,
முனைவர் பட்ட ஆய்வாளர் (பதிவு எண் 1415)
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 630 003

**'சு.சமுத்திரம் சிறுகதைகள்'** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.) செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேட்டினை நான் அளிக்கவில்லை என்று உறுதி கூறுகின்றேன்.

இடம் : காரைக்குடி

தேதி : 12.11.2008

(சு.பழனிமுத்து)
ஆய்வாளர்

12/11/2008

உறுதிக் கையொப்பம்
**முனைவர் மு.பாண்டி,**
பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்
தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 630 003

# நன்றியுரை

**'சு.சமுத்திரம் சிறுகதைகள்'** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த **அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் துணைவேந்தர்** அவர்களுக்கும், **பதிவாளர்** அவர்களுக்கும், **தமிழ்த்துறைக்கும்** முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வாளராக என்னை ஏற்று இந்த ஆய்வுச் செம்மையாக நிகழ்ந்தேற இன்முகத்துடனும் இனிய சொற்களுடனும் நன்னெறி காட்டி பல்லாறானும் உதவிகள் புரிந்த தமிழ்த்துறைத் தலைவரும் எனது ஆய்வு நெறியாளருமான **முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி பாராட்ட கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்விற்கு உதவி புரிந்த **பேரா.அருணாசலம், பேரா.கலியமூர்த்தி, பேரா.அ.குழந்தைசாமி** ஆகியோருக்கும் அலுவலக உதவியாளர்கள் **திரு.சுப்ரமணியன், திரு.பாலமுருகன், திரு.செந்தில்நாதன்** ஆகியோருக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

மாண்புமிகு **திரு.கே.என்.நேரு,** தமிழ்நாடு அரசு போக்குவரத்துத் துறை அமைச்சர் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்நாடு அரசு போக்குவரத்துக் கழக (கும்பகோண கோட்டம்) மேலாண்மை இயக்குநர் **முனைவர் கே.மூர்த்தி, திரு.எஸ்.முருகன், திரு.ஆர்.இராஜூ, திரு.பி.பி.ராஜேந்திரன்** அவர்களுக்கும், பொது மேலாளர் **திரு.டி.சுப்புராஜ்** அவர்களுக்கும் கிளை மேலாளர் **திரு.கருப்புசாமி** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அமைச்சர் அலுவலகத்தில் பணிபுரியும் உதவியாளர்கள் **திரு.டோல்கேட் சுப்ரமணி, திரு.முத்துச்செல்வம், திரு.அப்பாஸ் மந்திரி, திரு.ராமராஜன், திரு.சரவணன், திரு.வி.ராஜேந்திரன், திரு.அப்துல் ஹமீது, திரு.என்.மதனகோபால்** ஆகியவர்களுக்கு எனது நன்றிகள் உரித்து.

முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்ட காலத்தில் உடனிருந்து ஊக்கமும் ஆக்கமும் அளித்த முனைவர் பட்ட ஆய்வாளர்கள் **அன்பில் க.கண்ணன், திரு.முத்துக்கருப்பன், செல்வி. மணிமேகலை, செல்வி. தமிழ்ச்செல்வி** அவர்களுக்கும் என்னுடன் பணிபுரியும் நண்பர் **திரு.ந.பாலசுப்ரமணியன், திரு.பச்சைமுத்து** ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

மெய்ப்புத்திருத்தம் போன்ற உதவிகளைச் செய்த ராஜ விக்னேஷ் மேல்நிலைப் பள்ளி ஆசிரியர் **திரு.ராஜன் பாபு** அவர்களுக்கும், வெற்றி வித்யாலயா உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் **திரு.பாலசுப்ரமணியன், செல்வி.ஆனந்தி, செல்வி. எழில்மதி, செல்வி. கௌசல்யா** ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வுலகை விட்டு சென்றாலும் என் உள்ளத்தில் என்றும் நீங்காத எனது தந்தையார் **திரு.அ.சுப்ரமணியன்** அவர்களது பாதங்களில் இவ்வாய்வேட்டை காணிக்கையாக்குகின்றேன். எனது ஒவ்வொரு வளர்ச்சியிலும் அக்கறை கொண்டுள்ள எனது **தாயார் சு.முத்துலெஷ்மி** அம்மாவுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட காலத்தில் ஆய்வேட்டைத் தயாரிக்கும் பணியில் எனக்கு உதவிய எனது மனைவி **ப.சந்திரா,** மகன் **ப.சிவா,** மகள் **ப.சுபஸ்ரீ** ஆகியோருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினைக் கணினிவழிச் சிறப்பாக வடிவமைத்துக் கொடுத்த **திருமதி. ப. அமுதா** அவர்களுக்கும் நூல் கட்டமைப்பு செய்த **தி பிரிண்டிங் ஹவுஸ் நிறுவனத்தாருக்கும்** நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சு.பழனிமுத்து
ஆய்வாளர்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| p. | - | Page |
| pp. | - | Pages |

ஓ

# பொருளடக்கம்

# முன்னுரை

கவிதை வடிவிலோ, உரைநடை வடிவிலோ உள்ள இலக்கியங்கள் மொழியின் சிறப்பை உணர்த்துவதோடு அவ்வவ் காலத்தில் வாழும் மக்களின் வாழ்வியலையும் வெளிக்காட்டுவனவாகும். மேலைநாட்டார் வருகையால் தமிழில் புதிய இலக்கியங்கள் தோன்றலாயின.

கவிதையே தமிழ் இலக்கியம் என்ற நிலை பல நூற்றாண்டுகள் நீடித்த நிலையில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உரைநடை இலக்கியம் வளம்பெறத் தொடங்கியது. இவ்வளமையின் அடித்தளத்தில் புதினமும் சிறுகதைகளும் செழித்தன.

பழங்காலத்தில் 'சிறுகதைகள்' என்ற தனித் தொகுப்பு நூல்கள் இல்லை. கதை சொல்லும் பழக்கம் தமிழருக்குண்டு. அது வாய்மொழி இலக்கியமாக வளர்ந்து கொண்டிருந்தது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் சிறுகதை என்ற தனி இலக்கியம் வடிவம் முகிழ்ந்தது. 1930ஆம் ஆண்டிற்கு பிறகு எழுத்தாளர்கள் பல தோன்றி இத்துறையில் தமிழ் இலக்கியத்தை வளர்த்து வருகின்றனர். அப்படிப்பட்ட எழுத்தாளர்களில் ஒருவர் சு.சமுத்திரம்.

## ஆய்வுத் தலைப்பு

'சு.சமுத்திரம் சிறுகதைகள்' என்பது ஆய்வின் தலைப்பாகும்.

## ஆய்வின் நோக்கம்

காலந்தோறும் சமுதாயத்தில் இருபாலருக்கும் வாழ்க்கையில் பல்வேறுவிதமான பிரச்சினைகள் உள்ளன. தக்க வயது வந்தும் திருமணம் நிகழாமை, திருமணத்தில் குழப்பங்கள், உறவு முறைகளின் வகைகள், அதனால் ஏற்படும் சிக்கல்கள், சிக்கலுக்குத் தீர்வு காணப் போராடும் அக, புற நிகழ்வுகள் போன்றனவற்றைச் சு.சமுத்திரம் தம் சிறுகதைகளில் விளக்கிச் சொல்கிறார்.

சிறந்த பாத்திரங்களைக் கொண்டும் சிக்கல்களைக் கதைகளில் இச்சமூகத்திற்குப் புலப்படுத்திக் காட்டுகிறார். கீழ்த்தட்டு மற்றும் ஒடுக்கப்பட்ட மக்களின் சமுதாயப் பிரச்சினைகள் அவர்களது உரிமைகள் போன்றவை இவரது படைப்புகளில் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளன என்பதைக் காண்பது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

தமிழ் இலக்கிய உலகில் இருபதாம் நூற்றாண்டு சிறுகதைகளின் காலம். சிறுகதைகள் காலந்தோறும் உள்ளடக்கத்திலும், உருவத்திலும், வெளிப்பாட்டுத் திறத்திலும் பல்வேறு மாற்றங்களைப் பெற்று வருகின்றன. இத்தகைய சூழலில் படைப்பாளர் சு.சமுத்திரம் சிறுகதைகள் வாயிலாக, கதை, இலக்கிய வளர்ச்சிக்கும், சமுதாய மறுமலர்ச்சிக்கும் குறிப்பிட்டுக் கூறுமளவிற்குத் தொண்டாற்றி உருவத்திலும், உள்ளடக்கத்திலும் தனித்துவம் பெற்றிருக்க வேண்டுமென்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### ஆய்வு எல்லை

சு.சமுத்திரம் பல்வேறு காலகட்டங்களில் ‘பம்பாய்’, ‘தாய்’, ‘குங்குமம்’, ‘மின்மினி’, ‘அமுதசுரபி’, ‘இலட்சியப் பெண்’, ‘இராணி’, ‘இதயம் பேசுகிறது’ போன்ற இதழ்களில் படைத்தளித்த கதைகளைத் தொகுத்துச் சிறுகதைத் தொகுப்பாக வெளியிட்டுள்ளனர். சு.சமுத்திரம் சிறுகதைகள் பகுதி ஒன்று, பகுதி இரண்டு ஆகிய தொகுதிகளில் உள்ள எழுபது சிறுகதைகள் இவ்வாய்விற்கு எல்லையாக அமைகின்றன.

### சான்றாதாரங்கள்

சு.சமுத்திரம் அவர்கள் ‘பம்பாய்’, ‘தாய்’, ‘குங்குமம்’, ‘மின்மினி’, ‘அமுதசுரபி’, ‘இலட்சியப் பெண்’, ‘இராணி’, ‘இதயம் பேசுகிறது’ ஆகிய இதழ்களில் வெளியான சிறுகதைகள் மற்றும் ராசராசன் பதிப்பகத்தில் இரண்டு தொகுதி வெளியீடுகள், பேட்டி ஆகியவை இவ்வாய்வுக்குரிய முதன்மை சான்றாதாரங்களாகும். இவ்வாய்வு தொடர்புடைய திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

### ஆய்வு அணுகுமுறை

ஒடுக்கப்பட்ட விளிம்புநிலை மக்களின் உரிமைகளைச் சிறுகதைகளின் வாயிலாக விளக்குவதால் விளக்கவியல் அணுகுமுறை பயன்படுத்தப் பெற்றுள்ளது. சிறுகதைகள் சுட்டும் சமுதாயச் சிக்கல்களைப் பகுத்தும், தொகுத்தும் காண பகுப்பாய்வு முறையையும் சமுதாய இயங்கு நிலைகளைக் காண சமூகவியல் அணுகுமுறையும் இவ்வாய்வில் கையாளப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

'சு.சமுத்திரம் சிறுகதைகள்' என்ற தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டதாக அமைகின்றன.

இயல் 1 ஆசிரியர் அறிமுகம்

இயல் 2 கதைச்சுருக்கம்

இயல் 3 பாத்திரப்படைப்புகள்

இயல் 4 உத்திமுறைகள்

இயல் 5 சமுதாயச் சிந்தனைகள்

என்பனவாகும்.

## முன்னுரை

ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வு எல்லை, சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வேட்டின் அமைப்பு பற்றிய செய்திகள் முன்னுரையில் விளக்கப்படுகின்றன.

தனிப்பட்ட படைப்பாளர் ஒருவரின் படைப்புகளை ஆய்வு செய்யும்பொழுது அவரைப் பற்றிய புரிதலைத் தருவது ஆய்வின் முதல்நிலையாகும். 'ஆசிரியர் அறிமுகம்' என்னும் முதல் இயலில் ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்களின் பிறப்பு, வளர்ப்பு, கல்வி, பட்டப்படிப்பு, அலுவலகப்பணி, மத நல்லிணக்கம், ஒற்றுமை உணர்வு, ஆசிரியர் பற்றிய பிறரின் மதிப்பீடுகள், அவரது படைப்புகள், அவர் பெற்ற பரிசுகள், சமுதாயத்தைப் பற்றிய அவரின் பார்வை போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

சிறுகதைகள் பற்றிக் காணும்போது ஆய்வுக்குரிய கதைகளின் கருவைப் புலப்படுத்துதல் தேவையான ஒன்று. 'கதைச்சுருக்கம்' என்னும் இரண்டாவது இயலில் சிறுகதைகளின் தோற்றமும் வளர்ச்சி, ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட எழுபது சிறுகதைகளின் மையக் கருத்துக்களின் சுருக்கம் கூறப்பட்டுள்ளன.

'பாத்திரப்படைப்புகள்' என்ற இயலில் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ள பாத்திரங்களின் வகைகள், பண்புநலன்கள், பாத்திரப்படைப்பு பற்றிய பிற அறிஞர்களின கருத்துகள் சுட்டப்பட்டுள்ளன. பாத்திரங்களின் தன்மைக்கேற்ப அறநிலை மாந்தர்கள், இரக்கக் குணம் கொண்ட மாந்தர்கள், பால் உணர்வில் பாதிக்கப்பட்ட மாந்தர்கள், எதிர்நிலை மாந்தர்கள், அஃறிணை மாந்தர்கள், குறிக்கோள் மாந்தர்கள், அதிகார குணம் கொண்ட மாந்தர்கள், பேராசை கொண்ட மாந்தர்கள் போன்றவாறு பிரிக்கப்பட்டு அவரது பண்புநலன்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

நான்காவது இயலில் உத்திமுறையின் இலக்கணம் உத்தி முறைகள் பற்றிய பிற ஆசிரியர்களின் விளக்கங்கள், தமிழ்ச் சிறுகதைளில் காணலாகும் உத்திகள், உத்தியின் வளர்ச்சி, உத்தியின் வகைகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

'சமுதாயச் சிந்தனைகள்' என்னும் ஐந்தாவது இயலில் சமுதாயம் என்ற சொல்லின் பொருள் வரையறை, சமுதாயம் பற்றிய பிற அறிஞர்களின் கருத்துக்கள், படைப்பாளனும் சமுதாயமும், படைப்பாளனது சமுதாய பார்வை விளக்கப் பெற்றுள்ளன. சமுதாய நிறுவனங்கான தனிமனிதன், குடும்பம், சாதி, மதம், அரசியல், தொழில் நிறுவனங்கள் புலப்படுத்தப்

பட்டுள்ளன. சமூக இயங்கு நிலைகளான காதல், தொழிலாளர்களின் நிலை, வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை, அரசியல் நிலை, சாதிய பாகுபாடுகள், பெண்ணியம், வரதட்சணை, மனித நேயம், சமுதாய மாற்றம் போன்ற கருத்துக்கள் இவ்வியலில் தெளிவுபடுத்தப் பெற்றுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கூறப்பட்டுள்ள கருத்துக்களைத் தொகுத்து தொகுப்புரையாகக் கொடுக்கப் பெற்றுள்ளது. ஆய்வில் கண்டறியப் பெற்ற சாரங்கள் ஆய்வு முடிவுகளாக முடிவுரையில் இடம்பெற்றுள்ளன.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குத் துணை செய்த நூற்கள், இதழ்கள், ஆய்வேடுகள் போன்றவை அகர வரிசைப்படுத்தப் பெற்றுத் துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

ఆ

# இயல் - 1

# ஆசிரியர் அறிமுகம்

இலக்கிய ஆராய்ச்சியில் ஆசிரியரையும் அவர் தம் படைப்புகளையும் இணைத்து ஆராய்ச்சி செய்தால் அப்படைப்புகள் வெளிவந்தமைக்கான காரணகாரியங்களையும், அது தொடர்பான செய்திகளையும் அறியமுடியும். படைப்பாளரின் சமூகப்பின்னணி அவருடைய படைப்புகளுக்கு முக்கியமானதொரு மூலக்காரணியாகிறது. படைப்பாளரின் ஊர், இனம், மொழி சார்ந்த வாழ்வியல் செய்திகளைப் பற்றி அறிவது முக்கியமானதாகிறது. படைப்பாளரின் வாழ்வியல், படைப்புகளில் எந்தளவு பிரதிபலிக்கிறது என்பதையும் கண்டறிய வேண்டும். படைப்பிலக்கியம் தோன்றுவதற்குப் பல்வேறுபட்ட சமூகக் காரணிகள் இருக்கும். அந்த வகையில் ஆசிரியர் சு.சமுத்திரத்தின் சிறுகதைகளை ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொண்டு அவரது படைப்புகளின் வாயிலாக ஆசிரியரைப் பற்றிக் கண்டறிவது இவ்ஆய்வின் முக்கிய குறிக்கோளாகும்.

## பிறப்பும் வளர்ப்பும்

சு.சமுத்திரம் தமிழிலக்கியப் படைப்பாளர்கள் வரிசையில் முன்னணியில் திகழ்பவர். இவர் தம் தந்தை சுப்பையா நாடார், தாய் திருமலை ஆச்சி. இவருடன் பிறந்தவர்கள் யாரும் இல்லை. 15.12.1941இல் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திப்பணம்பட்டியில் பிறந்தார். தாயார் கருவுற்றிருந்தபோதே தந்தை

இறந்துவிட்டார். பிறந்து ஐந்து ஆண்டுக்குள் தாயையும் இழந்துவிட்டார். தாயார் இல்லாததால் மாற்றாந்தாயிடம் பால்குடித்துத் தாத்தா, பாட்டி, தாய்மாமா, அத்தை ஆகியோரின் அரவணைப்பில் வளர்ந்தார்.

## இளமைப் பருவம்

சிறுவயதில் இவர் கோயில்களில் நடைபெற்ற விழாக்களில் வில்லுப்பாட்டுப் பாடி மகிழ்வித்தவர். இவரது இளமைப் பருவ அவல வாழ்க்கையைச் சமுத்திரம், “நான் பிறப்பதற்கு ஏழு மாதங்களுக்கு முன்பே, அப்போதுதான் மணமுடித்த என் தந்தை, கேரளத்தில் உள்ள கொல்லத்திற்குக் காய்கறிகளை ஏற்றிக் கொண்டு உயிரோடு சென்றவர், ஓரிரு நாட்களில் ஏதோ நச்சுக் காய்ச்சலால் பிணமாகத் திரும்பியதாகப் பின்னர் அறிந்தேன். அதே சமயம் வண்டி மாட்டில் ஒன்று தளர்ச்சி அடைந்தபோது அந்த மாட்டை வாலைப் பிடித்து கடித்தோ, பிட்டத்தில் தார்க் கம்பால் குத்தியோ கொடுமைப்படுத்தி ஓட்டாமல் அதை அவிழ்த்துப் பின்பக்கம் கட்டிவிட்டு; அந்த மாடு கட்டிய இடத்தில் தன்னை நிறுத்திக் கொண்டு வண்டியை ஓட்டிய பாட்டாளி மனிதநேயர் என் தந்தை என்பதைப் பின்னர் கேள்விப்பட்டதால் அந்த நிகழ்வை இன்றும் மனதில் நிலைநிறுத்திக் கொண்டே இன்றும் ஒரு பாட்டாளி வர்க்கனாக வாழ்ந்து வருவதாக நினைக்கின்றேன். எனக்கு ஐந்து வயது வந்தபோது கம்மங்காட்டில் அல்லாடிய என் சின்ன தாய் காலரா நோயினால் உயிரிழந்தார்”[1] என்கிறார்.

## கல்வி

முதல் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை உள்ளூரிலேயே கல்வி பயின்றார். இளமையில் இவர் சிறுவர்களுடன் சேர்ந்து ஓரிடத்தில் குடிசை போட்டுக் கொண்டு மண்ணெணெய் விளக்கின் வெளிச்சத்தில் பாட நூல்களைப் படித்தார். எட்டாம் வகுப்பில் முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றார். பின்னர் கடையத்தில் உயர்நிலைப் பள்ளியில் இறுதி வகுப்பு வரை படித்தார். அப்பள்ளியில் நடைபெற்ற பேச்சுப் போட்டியில் முதலிடம் பெற்றார். பள்ளி ஆண்டு மலர்களில் கட்டுரைகள் எழுதினார்.

பாட்டனார் - பாட்டியார் பாதுகாப்பில் வளர்ந்த காலத்தில் நலிவடைந்த குடும்பத்தில் ஏற்படும் பிரச்சினைகள் பலவற்றைக் கண்கூடாகக் கண்டார். சிற்றூர்களில் நிலவும் நிலவுடைமையாளர் முறையும் பண்ணையாளர்களின் ஆதிக்கமும் அவரை வெறுப்புக்குள்ளாக்கின.

## கல்லூரிப் படிப்பு

ஆசிரியர் தனது படிப்பைப் பற்றிக் கூறும்போது, **“எனது கல்லூரி பருவத்தில் எனக்குக் கிடைத்த சேரி அனுபவம் புதுமையானது. முப்பத்தாறு குடித்தனங்களுக்கிடையே வாழ்ந்த எனது சித்தப்பா வீட்டில் தங்கிப் படித்தேன். அறைக்குள் படுத்தால் மூட்டைப் பூச்சி. வெளியே படுத்தாலோ கொசுக்கடி”**[2] என்று குறிப்பிட்டுள்ளார்.

சென்னை தியாகராயர் கல்லூரியில் இவருடைய சித்தப்பாவின் துணையினால் இளங்கலை பொருளியல் பயின்றார். அக்காலக்கட்டத்தில் அனைத்துக் கல்லூரிப் பேச்சுப் போட்டிகளில்

பங்கேற்று, பல முதற் பரிசுகள் பெற்றார். கல்லூரி மலர்களில் பேராசிரியர் மா.இராசமாணிக்கத்தின் மேற்பார்வையில் கவிதைகள் பல எழுதினார்.

இளங்கலை பட்டம் பெற்ற பின்னர் சென்னைக்கு அருகில் உள்ள காட்டுக்கரனை என்னும் சிற்றூரில் ஒரு தொடக்கப் பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணியாற்றினார். பிறகு அரக்கோணம் உயர்நிலைப் பள்ளி ஒன்றில் ஆசிரியராகப் பணியாற்றினார். அப்பள்ளியின் நிர்வாகப்போக்குப் பிடிக்காமல் மாவட்டக் கல்வி அதிகாரிக்குப் பதவி விலகல் கடிதம் எழுதி அனுப்பிவிட்டுச் சென்னை திரும்பினார். இந்தக் காலத்தில் நேருதாசனை ஆசிரியராகக் கொண்ட 'ஐக்கிய இந்தியா' என்ற இதழில் 'முட்கலூர் அழகி' என்ற வரலாற்றுத் தொடர்கதையை எழுதினார். சாதாரண வாசகருக்கும் புரியும் விதத்தில் எழுதுவதும், எளிய மொழி நடையிலேயே கதை சொல்லுவதிலும் தேர்ந்த இவர், அதிகாரவர்க்கத்தின் போலித்தனமான வாழ்க்கையைக் கடுமையாக எள்ளுபவர். ஏழைகளின் வாழ்வைத் தாய்மை, உணர்வுடன் நோக்குபவர்.

இவரது எழுத்துக்களில் அன்பும், மனிதநேயமும், சமூக உணர்வும் நிறைந்துள்ளன. அவற்றுக்கு உயிர்த்துடிப்பு அளிக்கும் வகையில் இவருடைய உண்மை நாட்டமும், அறச்சீற்றமும், மெய்த்துணிவும், தன்னம்பிக்கையும் கலந்து மிளிர்கின்றன.

இவர் துணிவுமிக்கவர். இயல்பாகவே இவருக்குப் போர்க் குணமுண்டு. மகாகவி பாரதியாரைக் கோழை என்று எழுதிய தமிழ்வாணனுக்குக் கவிதையிலேயே பதிலடி கொடுத்து 'வளைந்ததெங்கு' என்று ஒரு கவிதை எழுதியுள்ளார். இதுவே

இவர் இயற்றிய முதல் கவிதை. இவருடைய எழுத்தில் சீற்றம் வெளிப்படுவதற்கு இவரது இயல்புணர்வே காரணம் ஆகும்.

சிலர் **"நமது குலத்திலேயே ஒரு கருங்காலி சமுத்திரம் என்பவன் நாடார் சாதியைக் கேவலமாக எழுதியிருக்கான்"**[3] என்று கூறி சமுத்திரத்தின் வீட்டைத் தாக்க முற்பட்டபோது இவர் அஞ்சியதாகவோ, அவலக்குரல் கொடுத்ததாகவோ குறிப்பு இல்லை.

**மத நல்லிணக்கம்**

நம் பாரதநாடு பல்வேறு சமயங்களைக் கொண்ட பழம் பெரும் நாடு. சமயச் சார்பற்ற நாடாக இந்தியா இருந்தபோதிலும் சில சமயங்களில் உட்பூசல்கள் தோன்றுதல் இயல்பு. இலக்கியப் படைப்பாளரான சு.சமுத்திரம் அப்பூசல்களைத் தவிர்க்கும் வண்ணம் சில சிறுகதைகளை எழுதியுள்ளார்.

இவர் அயோத்தி பாபர் மசூதி தகர்க்கப்பட்ட பின்னணியில் 'முட்டம்' என்னும் புதினத்தைப் படைத்துள்ளார். **"அயோத்தி மசூதி தகர்ப்பை அடுத்து ஒவ்வொரு இஸ்லாமிய கிராம மக்கள் சந்தித்த இடர்பாடுகளையும், அவர்களின் மனநிலையும் படம்பிடித்துக் காட்டியுள்ளார். இந்தக் கதையைச் சென்னையில் நடைபெற்ற இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய மாநாட்டில் விடியல் கலைக் குழுவினர் நாடகமாய் நடத்தினர்."**[4] இஸ்லாமிய மக்களைப் பற்றி எழுத முற்படுவது சற்றுக் கடினம். ஆனாலும் ஆசிரியர் சு.சமுத்திரம் இம்முயற்சியில் ஈடுபட்டுள்ளது ஆசிரியரின் மதநல்லிணக்க உணர்வைக் காட்டுகிறது.

**ஒற்றுமை உணர்வு**

ஆசிரியர் தாம் பிறந்த ஊர் மட்டுமல்லாமல் இந்தியா முழுவதும் ஒற்றுமை உணர்வோடு விளங்க வேண்டும் என்று விரும்புகிறார். இதனை, "இங்கே ஒரு பாட்டாளி வர்க்கம் ... இன, மத, மொழி எல்லைகளைக் கடந்து உருவாகி வருகிறது. இந்தி, மலையாளம், கன்னடம், தமிழ் கலந்த ஒரு புதிய பாட்டாளி வர்க்க மொழியை நமது குழந்தைகள் பேசி வருகின்றன. கான்ட்ராக்டர் போடுகிற எட்டு ரூபாய், ஐந்து ரூபாய் கூலியில் நம் வயிறு காய்ந்தாலும் நம் அன்பு மட்டும் காயவில்லை. மொழியறியா மனைவியோடும், இனமில்லாத் துணைவியோடும் குடும்பம் நடத்தும் ஒரு அற்புதப் பாட்டாளி ஜாதியாக நாம் வாழ்கின்றோம். நமக்கு இருக்கும் இந்த அற்புத மகிழ்ச்சி இதுதான். இதைக் கலைக்க யாரையும் அனுமதியோம். இங்கே வாழும் ஒரு குட்டி இந்தியாவை ... நாட்டுக்குச் சொல்லத் துப்பற்றவர்கள் நம்மை பிரிக்க வந்தால் விட முடியாது"[5] என்று கூறுவதில் இருந்து இவர்தம் ஒருமைப்பாட்டுணர்வை அறியலாம்.

கிறித்துவர்கள் பற்றியும் இவர் கதை எழுதியுள்ளார். ஒரு கிறித்துவப் பெண்ணை மணக்க விரும்பியதாக இவரே கூறுகிறார். இவருடைய ஊரில் கிறித்துவர்களும் இந்துக்களும் ஒற்றுமையாக வாழ்ந்து வருவதையும் கிறித்துவர்கள் இந்துக்களின் கோவிலுக்கும் இந்துக்கள் கிறித்துவர்களின் தேவாலயத்திற்குச் செல்வதையும் குறிப்பிட்டுள்ளார்.

"ஒரு எழுத்தாளன் சாதிகளுக்கு அப்பாற்பட்டவன் எந்த சாதிக் கூட்டத்திலும் கலந்து கொள்ளக் கூடாது என்ற

**கருத்துள்ளவன் நான். ஒரு சமயம் திரு.நா.பார்த்தசாரதி தினமணிக்கதிரில் சாதி மலர்களைப் போட்ட போது நாடார் மலர் வந்தபோது என்னிடம் புகைப்படம் கேட்டார். நான் என்னை எந்த சாதிக்குள்ளும் அடைத்துக் கொள்ள விரும்பவில்லை என்றேன்''[6]** என்று கூறுவதிலிருந்து இவருடைய சாதியச் சார்பற்ற நோக்குப் புலனாகிறது.

**அலுவலர்**

அரசு தேர்வாணையம் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டு ஊராட்சி விரிவாக்க அலுவலராக ஸ்ரீபெரும்புதூரில் பணியாற்றினார். செங்குன்றத்தில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றிய பிறகு இவர் மதுரை மாவட்டத்தில் ஆத்தூரில் கூட்டுறவுத் துறை அதிகாரியாகப் பணியாற்றினார்; அவ்வேலை பிடிக்காமல் போகவே அதனின்றும் விலகினார்.

1980இல் 'திட்டம்' இதழில் பொறுப்பாசிரியராகப் பணியாற்றினார். பின்பு மைய அரசில் தகவல் தேர்வாணையம் வாயிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தில்லி வானொலி நிலையத்தில் தமிழர் பிரிவில் துணை ஆசிரியராகப் பணியில் அமர்த்தப் பெற்றார். தில்லி வானொலி நிலையத்தில் பணியாற்றிய இவர் சென்னைக்கு விளம்பர (Publicity) அதிகாரியாக மாற்றலாகி வந்தார். 1982இல் சென்னைத் தொலைக்காட்சி நிலையத்தில் உதவியாசிரியராகப் பணியாற்றியபோது பெங்களூர் தொலைக்காட்சி அலுவலகத்தில் செய்தி விளம்பரத் துறைத் தலைமை அதிகாரியாகப் பணிமாற்றம் செய்யப் பெற்றார். பின்பு சென்னையில் நடுவண் அரசின் கள விளம்பரத்துறை அதிகாரியாகப் பணியாற்றினார்.

## பிறர் மதிப்பீடு

இவருடைய படைப்புகள் பெரும்பாலும் மணிவாசகர் பதிப்பகத்தின் வழி வெளிவந்துள்ளன. அப்பதிப்பக உரிமையாளர் ச.மெய்யப்பன் பின்வருமாறு இவரைக் குறித்து மதிப்பீடு செய்துள்ளார்.

**"எதையும் எப்படியும் எழுதலாம் என எண்ணாமல் எழுத்தில் எதனைக் கொடுத்தால் பயன் மிகும் என்ற சமூகப் பிரக்ஞையுடன், சலிப்புத்தட்டாதவாறு எழுதும் எழுத்து மன்னர். சிறுகதை மன்னர் புதுமைப்பித்தன், சிந்தனையாளர் ஜெயகாந்தன் வரிசையில் என்றும் சிறந்து விளங்கும் படைப்பாளர்"**[7] என்கிறார்.

நா.வானமாமலை, **"தற்கால சமூகப் பிரச்சினைகளை நேரடியாகவோ மறைமுகமாகவோ கலை, அழகியல் உணர்வோடு கலைப் படைப்புகளாக ரசவாதம் செய்திருக்கிறார் சமுத்திரம் என்றும் சமுத்திரத்தின் கதைகள் பொதுவாகத் தற்கால சமுதாய அமைப்பின் முரண்பாடுகளையும் அவற்றின் நியாய அநியாயங்களையும் அலசிப் பார்க்கிற சமுதாய ஆய்வு நிரம்பி உள்ளதாக உள்ளது. இவ்வாய்வின் விளைவுகள் கற்பனை, கலையுணர்வு, கலைத்திறன் ஆகிய ஊடகங்கள் வழியே கலைப் படைப்பு ஆகின்றன என்றும் ஒரு தத்துவார்த்த கண்ணோட்டமாக இருப்பதால் இப்படைப்புகள் கலை உண்மைகளாக மாற்றுவதால் வெற்றி பெறுகின்றன"**[8] என்று கூறுவர்.

கலாநிதி க.கைலாசபதி இவருடைய கதைகளைப் பற்றி கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

**“ஏராளமான கதைகளைப் படைத்து வரும் சமுத்திரம் அவர்கள் தனக்கென ஒரு நடையையும் அணுகுமுறையையும் ஆக்கிக் கொண்டுள்ளார். இவரது நடையில் சொற் சாதுரியம் முனைப்பாயமைந்து காணப்படுகிறது. குறிப்பாக அங்கதப் பாங்கில் ஆக்கப்படும் கதைகளில் சமத்காரமான சொற்பிரயோகங்கள் பளிச்சிடுகின்றன எனவும், பல்வேறு கதைகளில், “தருமத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வுவதைப் படம்பிடித்துக் காட்டுவதில் ஆசிரியர் வெற்றி கண்டுள்ளார். சிற்சில அசைக்கக் காட்சிகள் (Closeup) அமைந்துள்ளது பாராட்டுக்குரிய சாதனையே”[9]** என்று கூறுவார்.

கா.சிவத்தம்பி - சமுத்திரத்தின் சிறுகதைகளில் **“சமூகத்தனத்துக்கும் மனித உணர்வுகளுக்கும், விகற்பங்களுக்கும் உள்ள தொடர்பு அழகாக இலக்கிய ஆதாரங்களுக்குச் சிறிதும் குந்தகமிழைக்காத வகையில் உண்மையில் இலக்கிய மெருகுடன் எடுத்துக் கூறப்படுகிறது”[10]** என்பர்.

வல்லிக்கண்ணன் அவர் தம் கனவுகளைப் பற்றிக் குறிப்பிடுகையில், **“நியாய உணர்வுகளையும், சமூக அநீதிகளுக்கு எதிராக எழுப்பும் குரலையும் அவரது கதைகளில் காண்கின்றோம்”[11]** என்கிறார்.

“சு.சமுத்திரம் என்றாலே அவருடைய ‘சோற்றுப் பட்டாளம்’, ‘ஒரு கோட்டுக்கு வெளியே’ என்ற அருமையான படைப்புகள் இலக்கிய ரசிகர்களின் நினைவுக்கு வரும். அவருடைய சமுதாயநோக்கு, சத்திய வேகம், தார்மீக கோபம், மனிதநேயம், உழைப்பவர்கள் மீதுள்ள பரிவு, அடக்கி

ஒடுக்கப்பட்டவர்களிடம் அனுதாபம், உயர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்களிடம் போலித்தனங்கள், பொய்மைகள் பற்றிய சீற்றமும், பரிகாசமும், நியாயங்களுக்காகவும், உரிமைகளுக்காகவும் குரல் கொடுக்கிற இயல்பு ஆகிய நற்பண்புகளைப் பற்றி எண்ணச் செய்யும்''[12] என்று வல்லிக்கண்ணன் கூறுகிறார்.

ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் முதல்வர் கலைஞர் அவர்களுக்கு ஒரு அழைப்பு இதழைக் கொடுக்கச் சென்றபோது "வாருங்கள் 'அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா' என்று என்னை அழைத்தார். நான் பொருள் புரியாது திகைத்தபோது, உங்கள் கட்டுரையைத் தான் சொல்கின்றேன்''[13] என்றார் என்று குறிப்பிட்டுள்ளார்.

'முட்டம்' புதினத்திற்கு அணிந்துரை எழுதிய இரா.கதிரேசன் சமுத்திரத்தின் படைப்புக் குறித்துப் பின்வருமாறு எழுதுகின்றார்.

"பூக்கடைகளுக்கு விளம்பரம் தேவையில்லை. சு.சமுத்திரத்தின் படைப்புகளுக்கு முன்னுரை, அணிந்துரை எல்லாம் தேவையில்லை. அவருக்கென்று ஒரு வாசகர் கூட்டம் ஏற்கனவே உள்ளது. அந்த எளிமையான நடை, அதற்குள் உள்ளாடிக் கிடக்கும். ஒரு வகை சமூக நையாண்டி. அவரின் படைப்புகளுக்குத்தனிக்கவர்ச்சியைத் தந்து கொண்டிருக்கின்றன. த.மு.எ.ச. மீதுள்ள மதிப்பின் காரணமாகவே இந்த அணிந்துரையைக் கேட்டிருக்கிறார் என நினைக்கின்றேன்''[14] என்னும் அவரது கருத்து சமுத்திரத்தின் படைப்பின் தன்மையை விளக்குகிறது.

“எனது எழுத்து எல்லோருக்கும் புரிய வேண்டும் என்பதற்காக எழுதுகோலை எடுப்பவன்தான் பொதுநல எழுத்தாளன். பாமரனுக்கும் தனது எழுத்து இன்னது எனத் தெரிய வேண்டும் என நினைப்பவனே பயனுடைய எழுத்தாளன். இத்தகைய மதிப்பீடு சமுத்திரத்துக்குச் சரியாகவே பொருந்தும்”[15] என இராமகுருநாதன் அணிந்துரையில் கூறுகிறார்.

கலாநிதி சிவத்தம்பி சமுத்திரத்தின் கதைகளை மதிப்பிடும்போது, “எமது சமூக வாழ்க்கையில் காணப்படும் சராசரி சம்பவங்களில் சம்பந்தப்படும் பாத்திரங்களின் இன்னல் உணர்வை, அவற்றின் சோகத்தை, திருப்தியைச் சித்திரிக்கும் சமுத்திரம் அவர்கள் அவற்றுக்கான சமூக நியாயங்களையும் எடுத்துக்காட்டத் தவறவில்லை. இதுவே சமுத்திரத்தின் கதைகளில் மிக முக்கிய சிறப்பு ஆகும்”[16] என்கிறார்.

அகிலன் ஆசிரியரைப் பற்றிக் கூறுகையில், அவருடைய கதைகள் அவரைப் போலவே, வேகம் மிகுந்து காணப்படுகின்றன என்று கூறியுள்ளார்.

**படைப்புகள்**

“எனது முதல் படைப்பு எது என்று கண்டுபிடிப்பது எனக்கே சற்று சிரமமாக இருந்தது. பத்து வயதில் நானே எழுதி, நானே பாடி, நானே கேட்ட வில்லுப்பாட்டைச் சொல்வதா? அல்லது எஸ்.எஸ்.எல்.சி. படித்துக் கொண்டு இருந்தபோது நான் எழுதி ஆண்வேடம் போட்டு அரங்கம் ஏறிய நாடகத்தைச் சொல்வதா? அல்லது உயர்நிலைப் பள்ளியில் மலர்களிலும் கல்லூரி மலர்களிலும் எழுதிய கவிதைகளைச் சொல்வதா? எது முதல் படைப்பு என்று தெரியவில்லை”[17] என்கிறார்.

சு.சமுத்திரம் தான் எழுத்தாளர் ஆனதற்குக் காரணம் தனது நண்பர் செல்வராஜ் அவர்கள்தான் எனக் கூறுகின்றார். அவர் டெல்லியில் பணியாற்றும்போது "எனது குடும்ப தோழருமான செல்வராஜிடம் ஒரு கதை கூட உருப்படியாக இல்லை என்று அடிக்கடி நான் அலுத்துக் கொள்வது வழக்கம். அவரும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டு பிறகு பொறுமைக்கு எல்லை காட்ட விரும்பாதவர் போல், 'சும்மா குறை சொல்வதில் அர்த்தமில்லை சமுத்திரம்! குறை சொல்வது எளிது. எழுதுவது தான் கடினம். நீங்கள் உண்மையிலே இலக்கிய ஆர்வம் உள்ளவராய் இருந்தால் ஒரு கதை எழுதி பத்திரிகையில் வரவழைத்துக் காட்டுங்கள். அதற்குப் பிறகு பிறத்தியார் கதைகளைப் பற்றி விமர்சியுங்கள்' என்றார். நண்பரின் பேச்சு என்னுள் ஒரு வேகத்தை ஏற்படுத்தியது என்றும் அன்று இரவே காகிதத்தை எடுத்துக் கொண்டேன்"[18] என்றும் கூறியுள்ளார்.

முதலில் இவர் படைத்தது சிறுகதையே ஆகும். இவர் கொடுத்த தலைப்பையே அந்த இதழ் மாற்றிப் பதிப்பித்ததென்பது குறிக்கத்தக்கதாகும். 'சென்னையில் கல்யாணம் குட்டாம்பட்டியில் கலாட்டா' என்ற கதையை இவர் ஆனந்த விகடனுக்கு எழுதி அனுப்பினார். இக்கதையின் தலைப்பை 'அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா' என்று மாற்றி இவ்விதழில் வெளியிடப்பட்டது.

இவருடைய சிறுகதை பற்றி இவர் கூறும்போது "'குற்றம் பார்க்கில்' என்னும் கதைத் தொகுதியில் இடம்பெற்றுள்ள 'எந்நன்றி கொன்றார்க்கும்' சிறுகதை விமர்சனத்திற்குரியதாய் உள்ளது என்றும் இக்கதையைப் படித்த ஆசிரியரின் பங்காளியின் மனைவி ஒருத்தி 'உங்க புத்திக்குத்தான் சமுத்திரம் இப்படி எழுதியிருக்கான்' என்று குறிப்பிட்டுள்ளதாக"[19] கூறியுள்ளார்.

இவருடைய முதல் சிறுகதையான 'அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா' 1975ஆம் ஆண்டு ஆனந்த விகடனில் வெளிவந்தது. முதல் சிறுகதைத் தொகுதி 'குற்றம் பார்க்கில்' என்பதாகும். இத்தொகுதியிலேயே இவரது முதல் சிறுகதையும் அமைந்துள்ளது.

**சிறுகதைத் தொகுதிகள்**

1. குற்றம் பார்க்கில் - 1992
2. காகித உறவு - 1979-1982
3. ஒரு சத்திரத்தின் அழுகை - 1979-1985
4. உறவுக்கு அப்பால் - 1979
5. சமுத்திரத்தின் சிறுகதைகள் - 1983
6. மானுடத்தின் நாணயங்கள் - 1982-1989
7. பிணம் தின்னும் சாஸ்திரங்கள் - 1987
8. ஏவாத கணைகள் - 1990, 1998
9. மண்சுமை - 1991
10. யானைப் பூச்சிகள் - 1994
11. காலில் விழுந்த கவிதைகள் - 1994
12. மனம் கொத்தி மனிதர்கள் - 1992
13. இன்னொரு உரிமை - 1992
14. பூநாகம் - 1992
15. பொய்யாய் புதுக்கனவாய் - 1997
16. ஒரு மாமரமும் மரங்கொத்திப் பறவைகளும் - 1996
17. கோரைப் புற்கள்
18. ஈச்சம் பாய்
19. சிக்கி முக்கிக் கற்கள்
20. ஆகாயமும் பூமியுமாய் - 1998, 1999

## புதினங்கள்

இவருடைய புதினங்கள் ஒவ்வொன்றும் சமுதாயத்தில் நிகழ்ந்த ஒரு கருத்தினை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. அவற்றைப் பற்றிய செய்திகள் பின்வருமாறு:

### 1. ஒரு கோட்டுக்கு வெளியே

கிராமத்தில் ஒரு சாதியினரிடையே நிகழும் வர்க்க போராட்டத்தைச் சித்திரிக்கும் கதை. வானொலியில் ஒலிபரப்பானது. மேலும் இந்த கதை பதினான்கு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுப் பதினான்கு மொழிகளில் வானொலியில் ஒலிபரப்பப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

### 2. இல்லந்தோறும் இதயங்கள்

ஒரு தொழுநோய் பெண்ணின் அவலநிலையும், போராட்டமும் சுட்டப்பட்டுள்ளது.

### 3. சத்திய ஆவேசம்

நீதிமன்றத்தின் நிலையினையும், தனியார் கல்லூரிச் சீரழிவுகளையும், மாணவர்கள் போராட்டத்தையும் சித்திரிக்கும் படைப்பு. இது செம்மலரில் தொடர்கதையாக வந்தது.

### 4. நெருப்புத் தடயங்கள்

சிறுமை கண்டு சீரும் ஒரு பெண்ணியப் போராட்டம்.

### 5. வெளிச்சத்தை நோக்கி

ஒரு மனநோய் இளைஞனைப் பற்றிய சமூகப் பார்வை.

### 6. ஊருக்குள் ஒரு புரட்சி

கிராமிய ஐந்தாண்டு திட்டங்களின் செயல்பாட்டு சித்திரிப்பு. எல்லா சாதி ஏழைகளும் சேரி மக்களுடன் சேர்ந்து போராடுவதைச் சித்திரிக்கிறது.

**7. வளர்ப்பு மகள்**

சொந்தப் பெற்றோருக்கும், வளர்ப்புப் பெற்றோருக்கும் இடையே அல்லாடும் ஓர் இளம்பெண்ணின் கதை தொலைக்காட்சியில் நாடகமாக ஒளிபரப்பப்பட்டது.

**8. நிழல் முகங்கள்**

இரயில்வே தொழிலாளர்கள் ரயிலிலேயே தத்தெடுத்து வளர்க்கும் ஒரு ஊமைச் சிறுவனைப் பற்றிய சித்திரிப்பு.

**9. சாமியாடிகள்**

கிராமபுறங்களில் ஏற்படும் ஆடியோ-வீடியோ தாக்கங்கள்.

**10. தாழம்பூ**

சாராயத் தொழிலில் இருந்து விடுபடும் ஒரு சேரிப் பெண்ணின் சிக்கல்கள். சென்னை வானொலி நிலையத்தில் நாடகமாக ஒலிபரப்பப்பட்டது.

**11. முட்டம்**

அயோத்தியில் பாபர் மசூதி தகர்க்கப்பட்டபொழுது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பாளையம் என்னும் இசுலாமியக் கிராமத்தை இந்துமத வெறியர்கள் சூறையாடிய நிலையைச் சித்திரிக்கும் ஒரு நடப்பியல் புதினம்.

**12. அவளுக்காக**

திரைப்படத் தயாரிப்பு என்ற பெயரில் சீரழிந்தவனின் கதை.

**13. வாடாமல்லி**

அரவாணிகளைப் பற்றிய மனிதநேயச் சித்திரிப்பு. ஆதித்தனார் இலக்கிய பரிசு பெற்றது.

**14. பாலைப்புறா**

சென்னை வானொலி நிலைய வாசிப்பு. ஒரு அப்பாவி எய்ட்ஸ் நோயாளிப் பெண்ணின் போராட்ட கதை.

**15. பிற்பகல்**

'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்' (குறள். 319)

எனும் குறளை மையமாக வைத்து எழுதப்பட்ட புதினம். முற்பகலில் தாய் தன் மகளுக்குக் கொடுமை இழைக்க, பிற்பகலில் மகள் தன் தாய்க்கு இழைக்கும் கொடுமையைக் காட்டுகின்றது.

**16. அபிஸ் மோகினி**

இப்புதினம் மாலைமதி இதழில் வெளிவந்தது. வேசித் தொழிலில் வாழும் தாயின் நடத்தைகெட்ட தன்மையை வெறுத்த மகள், தன் தாய் மரணப்படுக்கையில் இருப்பதைத் தெரிந்தும், பிரிந்து வேதனையுற்று உயிர்விடும் கதை.

**17. சத்தியத்துக்கு கட்டுப்பட்டால்**

சத்தியம் சோதிக்கும். ஆனால் இறுதியில் சாதிக்கும். வெற்றி வாகை சூடும்போது பட்ட துன்பமெல்லாம் பறந்து போகும். சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு நேர்மையாக வாழ்ந்த ஒருவனின் வாழ்வு, சூழ்ச்சியாளர்களால் பழிசுமத்தப்பட்டுச் சிறை வாழ்க்கையாகிறது. சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால் துன்பம்தான் என்பதை இந்தக் கதை விளக்குகிறது.

**குறும்புதினங்கள் - 1. புதிய திரிபுரங்கள்**

ஒன்றுபடாத ஒப்பற்ற தொழிலாளர்கள் காட்டுக்குள் படும் இன்னல்களையும், அவர்களுக்காக ஒரு சாமியார் போராட்டக்காரராக மாறுவதையும் சித்திரிக்கிறது.

**2. வேள்வித்தீ**

தனியார் பள்ளியில் ஆசிரியர் படும் அவலங்களை எடுத்துக் காட்டும் கதையாக இது அமைந்துள்ளது. ‘கல்பனா’ என்னும் திங்கள் இதழில் ஜுன் 1980இல் வெளிவந்தது.

**3. உயரத்தின் தாழ்வுகள்**

மலைவாழ் மக்களின் கொத்தடிமைக் கொடுமைகளையும் அவர்களில் ஒருவன் வழிநடத்துவதாகவும் அமைந்துள்ளது.

**4. காமனை அறிந்த ஈசன்**

பதிபக்தியில் ஈடுபட்டிருந்த ஒரு விதவை, மனம் திருந்தி மறுமணம் செய்ய ஒத்துக் கொள்வது. அடிமன அச்சம் சில சமயம் தவறுதலாகக் காதல் உருவில் வெளிப்படுவதையும் எடுத்துக் கூறுகிறது.

**5. சோற்றுப்பட்டாளம்**

பெண் விடுதலை குறித்து எழுதப்பட்ட புதினம். கிராமத்துப் பெண் தனக்கு இழைக்கப்பட்ட திருமணக் கொடுமைக்கு எதிராகப் போர் குரல்கொடுத்து வெற்றி அடைவது. ஆனந்த விகடனில் தொடர்கதையாக வெளிவந்தது. சென்னைத் தொலைக்காட்சியில் முதன்முதலாக எடுக்கப்பட்ட முழுநீள நாடகம், ‘பாசம் ஒரு வேசம்’ என்னும் திரைப்படமாகவும் வடிவம் பெற்றது.

**6. வேரில் பழுத்த பலா**

அலுவலகத்தில் பணிபுரியும் ஆதிதிராவிடப் பெண்ணை, உடன் பணிபுரியும் ஊழியர்கள் எப்படி நடத்துகிறார்கள் என்பதைச் சித்திரிக்கிறது. சாகித்ய அகாதமி விருது பெற்றது.

**7. ஒரு நாள் போதுமா**

கட்டடத் தொழிலாளர்களின் வாழ்க்கைப் போராட்டம். சென்னைத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பானது.

**கட்டுரை**

இவர் 'வாசுகி' இதழில் பல்வேறு தலைப்புகளில் கட்டுரைகள் வரைந்துள்ளார். எடுத்துக்காட்டாக 'இலக்கிய சர்ச்சை', 'திருக்குறளுக்கு எதிர்ப்பு ஏன்?' 'தமிழிசைக்குத் தாழ்வா?' 'இலக்கிய சந்திப்புக்கள்', 'தலித் இயக்கம் என்றால் என்ன?', 'இலக்கியத்தில் பெண்ணியம்' ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

**கட்டுரை தொகுப்பு**

1. எனது கதைகளின் கதைகள் (ஆசிரியரின் படைப்பிலக்கிய அனுபவப் பின்னணி) ஒவ்வொரு சிறுகதைகளும், ஒவ்வொரு புதினத்திற்கும், பின் தளமாக இருந்த அனுபவங்களைச் சுவையாகக் கூறும் கட்டுரைத் தொகுப்பு.

**2. சமுத்திரம் கட்டுரைகள்**

பல்வேறு கருத்துக்களை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளும் படைப்பு.

**நாடகம்**

இவர் கதை, கட்டுரை, கவிதை, புதினம் ஆகியவற்றை எழுதியுள்ளதுபோல் நாடகமும் படைத்துள்ளார். ரஷ்யப் பேரறிஞரும் உலகம் புகழும் இலக்கியப் படைப்பாளரும், சிறந்த சிந்தனையாளருமான லியோடால்ஸ் டாய், தமது கடைசிக் காலத்தில் குடும்பப் பிரச்சினைக்கும் சமூகப் பிரச்சினைக்கும் இடையே அல்லாடியதை வரலாற்று ஒழுங்கில் நாடகமாக்கி

உள்ளார். இவரது நாடகத் திறமைக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு ஆகும். இது சென்னையில் சோவியத் தூதரகக் கலாச்சார மையத்திலும், கிறித்தவ இலக்கியச் சங்கத்திலும் அரங்கேற்றப் பட்டது. சென்னை வானொலி நிலையத்திலும் ஒலிபரப்பப்பட்டது.

## பெற்ற பரிசுகள்

எழுத்தாளர் சு.சமுத்திரம் திறமையாலும் படைப்பாற்ற லினாலும் பல்வேறு பரிசுகளைப் பெற்றுச் சிறந்து விளங்குகிறார்.

1977ஆம் ஆண்டு எழுத்தாளர் சிதம்பர ரகுநாதனால் 'போதும் உங்க உபகாரம்' என்னும் சிறுகதை இலக்கியம் சிந்தனையின் சிறந்த சிறுகதையாகத் தேர்வு செய்யப்பட்டுப் பரிசளிக்கப் பெற்றது.

1978ஆம் ஆண்டு சரசுவதி ராம்நாத் என்பவர் 'ஒரே ஒரு ரோஜா'வைப் பரிசுக்குரிய சிறந்த சிறுகதையாகத் தேர்வு செய்துள்ளார். இதே ஆண்டில் 'சோற்றுப் பட்டாளம்' ஆனந்த விகடனில் சிறப்புப் பரிசைப் பெற்றது.

1982ஆம் ஆண்டு 'ஊருக்குள் ஒரு புரட்சி', 'குற்றம் பார்க்கில்' என்னும் நூல்களுக்கும் தமிழக அரசின் முதல் பரிசுகள் கிடைத்தன.

தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் இவருடைய படைப்பாற்றலைப் பாராட்டித் தமிழன்னைப் பரிசு வழங்கிச் சிறப்பித்துள்ளது.

'வாடாமல்லி'க்கு அமரர் ஆதித்தனாரின் இலக்கிய விருது கிடைத்தது. விருதில் பெற்ற தொகையில் பத்தாயிரம் ரூபாயை அரவாணிகளின் நலனுக்கு நன்கொடையாக வழங்கியுள்ளார்.

‘மண்சுமை’ என்னும் சிறுகதைத் தொகுப்பிற்குத் தமிழக அரசு பரிசு வழங்கியுள்ளது. ‘வேரில் பழுத்த பலா’வுக்குச் சாகித்ய அகாதமி பரிசு கிடைத்துள்ளது.

## ஆசிரியரின் விருது பெற்ற படைப்புகள்

| வகைகள் | பெயர் | விருது பெயர் - விவரம் |
|---|---|---|
| சிறுகதை | குற்றம் பார்க்கில் | தமிழக அரசின் முதல் பரிசு 1982 |
| | மண்சுமை | தமிழக அரசின் முதல் பரிசு, 1991 |
| | போதும் உங்க உபகாரம் | இலக்கியச் சிந்தனையின் சிறந்த சிறுகதை, 1977 |
| | ஒரே ஒரு ரோஜா | சிதம்பர ரகுநாதனால் தேர்வு செய்யப்பட்டது. |
| புதினம் | ஊருக்குள் ஒரு புரட்சி | தமிழக அரசின் முதல் பரிசு, 1982 |
| | வாடாமல்லி | ஆதித்தனார் இலக்கியப் பரிசு |
| | ஒரு கோட்டுக்கு வெளியே | 14 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட, 14 மொழிகளில் வானொலியில் ஒலிபரப்பப்பட்டது. |
| குறும்புதினம் | வேரில் பழுத்த பலா | சாகித்ய அகாதெமி விருது |
| | சோற்றுப் பட்டாளம் | சரசுவதி ராம்நாத்னால் சிறந்த சிறுகதை பரிசு, 1978. |
| | | ஆனந்த விகடன் சிறப்புப் பரிசு பெற்றது. |

## கல்வி நிலையங்களில் படைப்புகள்

இவருடைய படைப்புகள் கல்வி நிலையங்கள் பலவற்றில் பாட நூலாக உள்ளன. ‘ஊருக்குள் ஒரு புரட்சி’ பாரதிதாசன் பல்கலைக்கழகத்திலும் ‘வளர்ப்பு மகள்’ அரசின் மேல்நிலைப் பள்ளியிலும், ‘காகித உறவு’ சென்னைப் பல்கலைக்கழகத்திலும் பாட நூலாக இடம்பெற்றுள்ளன. பிற படைப்புகள் திருப்பதி, மைசூர் பல்கலைக்கழகங்களிலும் பாட நூல்களாக உள்ளன.

'ஒரு சத்தியத்தின் அழுகை' என்ற சிறுகதைத் தொகுப்பு சென்னைப் பல்கலைக்கழகத்தில் பட்டப் படிப்பு மாணவர்களுக்குப் பாடநூலாகவும் 'வளர்ப்பு மகள்' என்ற கதை கோவை பாரதியார் பல்கலைக்கழகத்தில் பாடமாகவும் இடம்பெற்றிருந்தன.

**நேர்காணல்**

ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்களுடன் பிற படைப்பாளர்கள் நேர்காணல் நிகழ்த்தியுள்ளனர். 20.1.1994இல் 'குமுதம்' இதழில் இவரை எழுத்தாளர் இந்துமதி நேரில் சந்தித்து உரையாடினார். அதன் சுருக்கம் வருமாறு:

**இந்துமதி :** **காதலுக்கு நீங்கள் ஏன் முக்கியத்துவம் கொடுப்பதில்லை?**

**சமுத்திரம் :** **காதலே வாழ்க்கை அல்ல. வாழ்க்கையின் ஒரு பகுதி தான் காதல். அதோடு அன்றாடங் காய்ச்சிகளின் பிரச்சனைகளில் செக்ஸ் அல்லது கற்பழிப்பு (அ) காதல் என்ற உப்பைப் போட்டு வாசகர்களைச் சுண்டி இழுக்கும் தந்திரத்தை நான் கையாளுவதில்லை. என்னுடைய எழுத்துப் பத்தியச் சாப்பாடு. மேலும் காதலைப் பற்றி எழுத உங்களைப் போன்ற எழுத்தாளர்கள் இருக்கும்போது நானும் ஏன் குட்டையைக் குழப்ப வேண்டும்.**[20]

அடித்தள மக்களின் பிரச்சினைகள், சமுதாய பிரச்சினைகள் ஏராளமாக இருக்க வெறும் செக்ஸை மட்டும் அடிப்படையாக வைத்து நாவல்கள் எழுதுகிறீர்களே அது ஏன்? என்று சு.சமுத்திரம், சமூகப் பொறுப்பை வெளிப்படுத்துகின்றார்.

## மறைவு

மிகச்சிறந்த எழுத்தாளராக விளங்கிய ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் 01.04.2003 அன்று சிற்றுந்து வாகனத்தில் செல்லும்போது விபத்து ஏற்பட்டு இறந்தார். ‘நான் நிரந்தரமானவன் எந்த நிலையிலும் எனக்கு மரணமில்லை’ என்று கண்ணதாசன் கூறியதுபோன்று ஆசிரியரின் படைப்புகள் அனைவரின் மனத்திலும் நிரந்தரமான இடத்தைப் பிடித்துள்ளது. இவர் என்றும் வாழும் எழுத்தாளனாகத் திகழ்கின்றார்.

## தொகுப்புரை

❖ ஆசிரியர் பிறப்பும் வளர்ப்பும், இளமைப் பருவம், கல்லூரிப் படிப்பு, அலுவலகப்பணி போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

❖ ஆசிரியரின் மத ஒற்றுமை உணர்வு, மத நல்லிணக்கம் பற்றியும் அவரது மன உணர்வு பற்றியும் கூறப்பட்டுள்ளன.

❖ ஆசிரியரை பற்றி பிற படைப்பாளர்கள், அறிஞர்களின் மதிப்பீடுகள் கூறப்பட்டுள்ளன.

❖ ஆசிரியரின் படைப்புகளான சிறுகதை, புதினம், குறும்புதினம், கட்டுரை, நாடகம் போன்றவற்றையும், அதனால் கிடைத்த பரிசுகளும் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

❖ ஆசிரியர் குமுதம் இதழுக்கு (20.1.1994) அளித்த பேட்டி செய்திகள் இடம்பெற்றுள்ளது.

❖ ஆசிரியரின் மறைவுச் செய்தி கூறப்பட்டுள்ளது.

ღ

## சான்றெண் விளக்கம்

1 சு.பெ.அகத்தியலிங்கம்,சு.சமுத்திரத்தின் நானும் என் எழுத்தும், ப.20.

2 மேலது, ப.21.

3 சு.சமுத்திரம், எனது கவிதைகளின் கதைகள், ப. 31.

4 சு.சமுத்திரம், சமுத்திரம் கட்டுரைகள், ப. II.

5 சு.சமுத்திரம், ஏவாத கணைகள், ப. 172.

6 சு.சமுத்திரம், எனது கவிதைகளின் கதைகள், ப. 159.

7 சு.சமுத்திரம், மண்சுமை, ப. iv.

8 மேலது, ப. v.

9 மேலது, ப. iv.

10 மேலது, ப. vi.

11 மேலது, ப. vi.

12 வல்லிக்கண்ணன், சு. சமுத்திரம் சிறுகதைகள் அணிந்துரை, ப. vii.

13 சு. சமுத்திரம், சமுத்திரம் கட்டுரைகள், ப. 9.

14 இரா. கதிரேசன், முட்டம் அணிந்துரை, ப. 3.

15 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், அணிந்துரை, ப. 4.

16 இராம குருநாதன், சமுத்திரம் சிறுகதைகள் தொகுப்பு, ப. 5.

17 சு. சமுத்திரம், சமுத்திரம் கட்டுரைகள், ப. 8.

18 மேலது, ப. 10.

19 சு. சமுத்திரம், எனது கதைகளின் கதைகள், ப. 41.

20 குமுதம், வார இதழ், நாள் 20.1.1994, ப. 6.

# இயல் - 2
# கதைச்சுருக்கம்

## தமிழ்ச் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்

ஆய்வுகளில் ஆய்வுப் பொருளை விளக்கி ஆய்வைத் தொடங்குவது முறையான ஆய்வாகும். இவ்வாய்வு தனிப் படைப்பாளரின் சிறுகதைகள் பற்றிய ஆய்வாகையால் ஆய்வுக்குரிய சிறுகதைகள் இங்குச் சுருக்கித் தரப்பட்டுள்ளன. சிறுகதைகளில் இடம்பெற்றுள்ள அலுவலர்கள், பொருட்கள் நிகழ்வுகள் போன்றவை படைப்பாளரின் சொல்லாட்சி மற்றும் நடையிலேயே உயிர்ப்புடன் இருக்கும் என்ற நோக்கில் கையாளப்பட்டுள்ளன.

இலக்கியப் படைப்பிற்குச் செய்யுள் வடிவமே முதன்மையான கருவி என்ற நெடுங்காலத்து மரபில் மாற்றம் ஏற்பட்டு 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ்நாட்டில் உரைநடை இலக்கியம் வளரத் தொடங்கியது.

பழங்காலத்தில் சிறுகதைகள் என்ற கதைத்தொகுப்பு நூல்கள் இல்லை. கதை சொல்லும் பழக்கம் தமிழருக்குண்டு என்பதற்கான சான்றுகள் உள்ளன.

தொல்காப்பியர் காலத்தில் கதைகூறும் முறை இருந்துள்ளதைப்

"பொருளோடு புணராப் பொய்ம் மொழியானும்
பொருளோடு புணர்ந்த நகை மொழியானும்"

என்ற அடிகளால் உணரலாம். புராணங்களிலும் இடையில் சில கிளைக் கதைகள் இடம்பெற்றன.

19ஆம் நூற்றாண்டில் உருவான சிறுகதை வடிவம் காலந்தோறும் பல மாற்றங்களுக்கு உட்பட்டு இன்று ஒரு செம்மையான நிலையை அடைந்துள்ளது. நம்மிடையே கதை சொல்லுதலும் கதை கேட்டலும் காலங்காலமாய் நடந்து வருவன.

சமயம் வளர்க்க இந்தியாவிற்கு வந்த இத்தாலிநாட்டு மதகுரு வீரமாமுனிவர் தமிழ் மொழியினைக் கற்று மேலை நாட்டு உரைநடைக்கதைகளைப் போல் ‘பரமார்த்த குரு கதை’ என்ற அங்கதச் சுவைமிக்கக் கதை தமிழில் உரைநடைவடிவில் உருவாக்கப்பட்ட முதற்கதை எனலாம். 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வீராசாமி செட்டியாரின் விநோதரச மஞ்சரியும் சுவையான சிறுகதைத் தொகுப்பாகும்.

20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் ‘சிறுகதை’ என்ற தனி இலக்கிய வடிவம் முகிழ்க்கிறது. தேசிய விடுதலை இயக்கத்தில் ஈடுபட்ட வ.வே.சு.ஐயர் அவர்கள் பிறநாட்டாரின் சிறுகதைகளையொட்டி தமிழில் அவ்விலக்கிய வகையை வளர்க்கும் நோக்கத்தில் சிறுகதைக்குரியக் கலைவடிவத்தை முதன்முதலில் தமிழுக்குத் தந்தார். 1927ஆம் ஆண்டில் வெளிவந்த அவருடைய ‘மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள்’ என்னும் தொகுதியே முதல் தமிழ்ச் சிறுகதைத் தொகுதியாக கருதப்படுகிறது. ‘குளத்தங்கரை அரசமரம் சொன்ன கதை’ என்ற இவருடைய சிறுகதை நெஞ்சை உருக்கவல்லது. தாகூரின் ‘காபூலிவாலா’ என்னும் அழகிய கதையை அவர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். வ.வே.சுப்பிரமணிய ஐயர் ‘தமிழ்ச் சிறுகதையின் தந்தை’ எனப் போற்றப்படுபவர் ஆவார்.

கவிக்குயில் சுப்பிரமணிய பாரதியாரும் தமிழில் சிறுகதைச் செல்வத்தை உருவாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ‘ஆறில்

ஒரு பங்கு', 'பூலோக ரம்பை' போன்ற சிறுகதைகளைப் படைத்தார். நவதந்திரக் கதைகள், கதைக்கொத்து என்பவை அவருடைய கதைத் தொகுப்புகள். 1930ஆம் ஆண்டிற்குப் பிறகு எழுத்தாளர்கள் பலர் தோன்றி இத்துறையில் தமிழ் இலக்கியத்தை வளர்த்து வருகின்றனர்.

புதுமைப்பித்தன் என்ற புனைப் பெயரை கொண்ட சொ.விருத்தாசலம் என்பவர் தம் புதிய சிந்தனைகளாலும், புதிய உத்திகளாலும், புதுமையான நடை அமைப்பாலும் சிறுகதை படைப்பில் ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தினார். ஏழைகளின் துயர வாழ்வு இவருடைய சிறுகதைகளில் மையக்கரு கொண்டவை. இவர் படைப்புகளில் 'கடவுளும் கந்தசாமியும்' என்பது ஓர் இன்றியமையா படைப்பு. இதில் புராணத்தையும் புதுமையையும் இணைத்துள்ளார். இவருடைய 'சாபவிமோசனம்' என்ற கதை ஒரு புரட்சிகரமான கதையாகும். இவரை சிறுகதை மன்னன் என்றும், தென்னகத்தின் மாப்பஸன் என்றும் அழைப்பர்.

சிறுகதைகள் படிக்கும் வாசகர்களை உருவாக்கிய பெருமைக்குரியவர் 'கல்கி' என்ற புனை பெயருடைய ரா.கிருஷ்ணமூர்த்தி ஆவார். இவர் சிறந்த புதின ஆசிரியர் எனினும் சிறுகதைத் துறையில் முதன்முதல் அடிஎடுத்துவைத்தவர். இவருடைய கதைகள் தேசிய உணர்வு, தீண்டாமை, மதுவிலக்கு முதலான சமுதாய விழிப்புணர்வுக் கருத்துக்களைக் கொண்டவை.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் வெறும் பொழுது போக்கிற்காகக் கதைகளைப் படைக்காமல் சமுதாய முன்னேற்றம் கருதி கதைகளைப் படைத்தார். இவருடயை 'அன்னையும் பிதாவும்' என்ற கதை அரசன் ஒருவனின் வாழ்வைச் சித்திரிப்பதாகும்.

சிறுகதை உலகில் நிலையான இடம்பெற்றவர்களுள் ஒருவராகத் திகழ்ந்தவர் கு.ப.ராஜகோபாலன். இவர் எண்பதுக்கும் மேற்பட்ட சிறுகதைகளைப் படைத்துள்ளார். குடும்ப வாழ்க்கையின் இன்ப துன்பங்களைப் படம்பிடித்துக் காட்டுபவர். 'விடியுமா', 'திரை' இவருடைய அருமையான படைப்புகள்.

மணிக்கொடியின் ஆசிரியராக விளங்கிய பி.எஸ்.ராமையா, முன்னூறுக்கும் மேற்பட்ட சிறுகதைகளைப் படைத்துள்ளார். இவருடைய கதைகளில் மனித உறவு, சமூக உறவு, தெய்வ உறவு போன்ற வகையைச் சார்ந்தவை.

நா.பிச்சமூர்த்தி அவர்களுடையச் சிறுகதைகள் வேதாந்தக் கருத்துடையவை. கலைமகள் சிறுகதைப் போட்டியில் முதற்பரிசு பெற்ற எழுத்தாளர் ஆவார்.

1950ஆம் ஆண்டிற்குப் பிறகு சிறுகதை எழுதத் தொடங்கிய இருபது, இருபத்தைந்து எழுத்தாளர்கள் பல்வேறு பத்திரிகைகளில் எழுதிக் கொண்டிருந்தனர். பலருடைய கதைகள் நூல்களாகவும் வெளிவந்துள்ளன. அண்ணா, மு.கருணாநிதி போன்றவர்கள் அரசியல், சமூக இயக்கிங்களுக்குச் சிறுகதையைப் பயன்படுத்தினர்.

பழைய எழுத்தாளர்களின் முதிர்ச்சியும் புதிய எழுத்தாளர்களின் இலக்கிய நோக்குச்சிறப்பும் இலக்கிய வளர்ச்சிக்கு உதவின. விந்தன், அகிலன், கு.அழகிரிசாமி, லா.ச.ராமாமிர்தம், மௌனி, தி.ஜானகிராமன், ஜெயகாந்தன், சுந்தரராமசாமி போன்றோர் சிறுகதைகளை வளர்த்தனர்.

எழுத்தாளர் விந்தனின் படைப்புகள் ஊழல்களைக் கடுமையாகச் சாடுபவையாகும். கதையுலகிற்குக் கணிசமான பணிசெய்தவர் வல்லிக்கண்ணன். அவர் ஐநூறுக்கும் மேற்பட்ட சிறுகதைகளை எழுதியுள்ளார்.

சிறுகதை எழுத்தாளர்களில் ஜெயகாந்தன் தனித்த புகழுக்குரியவர். பொருளாதார ஏற்றத்தாழ்வினையும், குடிசை வாழ்வுக்கும் ஆடம்பர வாழ்க்கைக்கும் உள்ள ஏற்றத்தாழ்வைக் காட்டுவதிலும் வல்லவர்.

ஆண்களைப் போலவே பெண்களும் சிறந்த சிறுகதைகளைப் படைத்துள்ளனர். தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் முக்கியமானவரும் பெண் எழுத்தாளர்களில் தலைசிறந்தவருமான ஆர்.சூடாமணியின் கதைகள் சிறப்புடையவை. இவர் பல்வேறு சமூக நிலைகளில் பழகும் பெண்களின் உணர்வுகளை மிக நுண்ணிதாக எடுத்துக் கூறுவதில் வல்லவர். வசுமதி ராமசாமி, சரோசா இராமமூர்த்தி ஆகியோர் சிறுகதைகள், புதினங்களைப் படைத்துள்ளனர். சரோசா இராமமூர்த்தி குடும்பப் பெண்களைப் படைத்துக் காட்டுவதில் வல்லவர்.

### வை.மு.கோதைநாயகி அம்மாள்

ஆரம்பகால பெண் எழுத்தாளர் என போற்றப்படும் வை.மு.கோதைநாயகி அம்மாள் 'மனோரஞ்சனி' இதழில் தம் புதினத்தை வெளியிட்டார். 'ஜெகன்மோகினி' என்ற இதழைத் தாமே நடத்தினார். இவர் பல சமூக சீர்திருத்தப் புதினங்களை எழுதியவர்.

### லஷ்மி

இன்றைய பெண் நாவலாசிரியர்களின் புகழ்பெற்றவர். மாமியார், மருமகள் பிரச்சினையை மையமாகக் கொண்டு எழுதியவர். பெண்மனம், காஞ்சனையின் கனவு, நாயக்கர் மக்கள், அத்தை, சூரியகாந்தம், மதிலா விலாஸ், ஸ்ரீமதி போன்றவை இவரது சமூக புதினங்களாகும்.

### ராஜம் கிருஷ்ணன்

தமிழ்நாட்டின் ஜேன் ஆஸ்டின் அன்று போற்றப்படுவர். இவரது படைப்புகளில் புதுமை மிகுதி. ‘குறிஞ்சித் தேன்’ என்ற இவரது புதினம் நீலகிரிப் பழங்குடி மக்களைப் பற்றியது. அம்மலை மக்களின் பழக்கவழக்கங்களும், புதுமையும், பழமையும் போட்டி போட்டுக் கொள்ளுதலும் இப்புதினத்தில் சித்திரிக்கப்படுகின்றன.

### சிவசங்கரி

சிவசங்கரி பெண்களுக்குச் சமூகத்தில் இழைக்கப்படும் கல்வி, வரதட்சணைக் கொடுமை ஆண்களுக்குக் கட்டப்பட்டு கிடக்கும் பெண்களின் அவலங்களையும், ஆண், பெண்களிடையே காணப்படும் சிக்கல்களை மிகச் சிறப்பாகவும் படைத்துக் காட்டுபவர். இவருடைய ‘47 நாட்கள்’, ‘ஒரு மனிதனின் கதை’, ‘ஒரு பெண்ணின் கதை’, ‘அது சரி அப்புறம்’, ‘ஆயுள் தண்டனை’, ‘ஆயிரம் காலத்துப் பயிர்’ ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும். எனினும் சிவசங்கரி படைப்பாளர்கள் மத்தியில் தனக்கொரு இடத்தைப் பெற்று விளங்குகிறார்.

### சிவகாமி, பாமா

சமீப காலத்தில் தலித் பெண் படைப்பாளர்கள் இருவர் சிறப்பாக புகழ் பெற்றவர் ஒருவர் சிவகாமி. இவரது படைப்பு ‘ஆனந்தாயி’. மற்றொருவர் பாமா ‘கருக்கு’ என்பது இவரது முக்கியமான புதினமாகும்.

### சிறுகதையின் இலக்கணம்

“சிறுகதையின் இலக்கணத்தை வரையறுக்க முனைந்த அறிஞர் பலரும் அவரவர் பார்வைக்கேற்ப அதனைப் பலவாறாக

விளக்கியுள்ளனர். யாரும் முடிவான வரையறையை வகுக்கவில்லை. இதற்குக் காரணம் இறுதி வரையறைக்கு அடங்காதவாறு அது நாள்தோறும் உருவத்திலும் உத்தி முறையிலும் புதுப்புதுக் கோலம் பூண்டு பிறப்பதே ஆகும்."[1]

சிறுகதை என்ற பெயரிலிருந்தே அது சிறியதாக இருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. உருவம், உள்ளடக்கம், உத்தி ஆகிய மூன்றிலும் செறிவாக உருப்பெறும் எனலாம்.

கதாசிரியரின் சிந்தனையில் பிறந்து வாசகரின் சிந்தனையில் நிறைவு பெறுவது சிறுகதை ஆகும்/

"சிறுகதை என்பது அரைமணி முதல் ஒரு மணிக்குள் படித்து முடித்து விடக்கூடிய அளவுள்ள உரைநடையில் அமைந்த கதை"[2] என்று எட்கர் ஆலன்போ விளக்கமளிக்கின்றார். அது போன்றே இந்தத் தலைப்பில் அமைந்துள்ள கதைகள் உள்ளன.

"சிறுகதையின் அளவு மிகச் சிறியதாகவும் இருக்கலாம், பெரியதாகவும் இருக்கலாம். கதை நடக்கும் காலம் கூட ஐந்து நிமிடமோ, ஒரு நாளோ, ஒன்பது ஆண்டுகளோ இருக்கலாம். ஆனால் கதையைப் படித்து முடிந்த பின்பு ஓர் உணர்ச்சி மட்டும் படிப்பவர் நெஞ்சில் நிறைய வேண்டும்"[3] என்று இளவரசு அவர்கள் கூறியுள்ளார். அதே போன்று இத்தொகுதியில் உள்ள அனைத்துக் கதைகளும் அமைந்துள்ளன.

"குதிரைப் பந்தயம் போல் தொடக்கம் முதல் முடிவு வரை விறுவிறுப்பாக அமைய வேண்டும்"[4] என்பார் செட் ஜீவிக்.

"சிறுகதை ஒரு சிறிய யானைத் தந்தத்தால் நடராச சிற்பத்தைச் செதுக்குவது போன்றதாகும். சிறுகதையின்

நுட்பத்தையும் அருமைபாட்டையும் விளக்குகிறார். சிறுகதை மக்களின் ஆத்ம சக்தியை எழுப்புவதையே நோக்கமாகக் கொண்டு விளங்குகிறது"[5] என்கிறார் மா.இராமலிங்கம்.

ஒரு நல்ல சிறுகதை என்பது "1.சுருக்கமாகவும் செறிவாகவும், உரைநடையில் எழுதப் பெறும் கதையாக இருத்தல், 2.ஏதேனும் புதுமையானதொரு நிகழ்ச்சியை மையமாகக் கொண்டிருத்தல் 3. நன்கு வார்க்கப்பட்ட மிகச் சில பாத்திரங்களைக் கொண்டிருத்தல், 4.கதைக் கட்டமைப்பில் இயல்பான ஒருமைப்பாட்டினைக் கொண்டிருத்தல், 5.ஓர் ஆழ்ந்த பொருண்மையை உள்ளீடாகக் கொண்டிருத்தல் 6.படிப்போர் உள்ளத்தில் ஒரு முழு விளைவை உருவாக்குதல் என்பனவாகும்"[6] என்பர்.

மேற்குறித்த இயல்புகளையும் பண்புகளையும் உள்ளடக்கிப் படைக்கப் பெறும் சிறுகதையே சிறந்ததாகப் போற்றப் பெறும்.

புதினத் துறையை விடச் சிறுகதை மிகவும் சிறப்பாக வளர்ந்து வளம் பெற்று வருகின்றது. "தமிழ் இலக்கணத்தில் சிறுகதைக்கு என்று ஏற்பட்டிருக்கும் ஏற்றமும் வளர்ச்சியும் வேறு எந்த மொழிகளிலும் இன்று வரை ஏற்படவில்லை என்றே கூறலாம். விரைவாகவும், அதே வேளையில் தரங் குன்றாமலும் வளர்ந்திருக்கிறது சிறுகதை இலக்கியம்"[7] என்கிறார் நா.பார்த்தசாரதி.

"1933இல் தோன்றிய மணிக்கொடி இதழ்தான் சிறுகதைப் படைப்புக்கும் விமரிசனத்திற்கும் செம்மையானதொரு பங்களிப்பை நல்கியது"[8] என்கிறார் ம.மதியழகன்.

இன்றைய எழுத்தாளர்களில் சிறுகதைகளைச் சிறப்பாக எழுதும் ஆர்வம் கொண்டவராக சு.சமுத்திரம் அவர்களைக் குறிப்பிடலாம். பல்வேறு இதழ்களிலும் இவருடையக் கதைகள் வெளிவந்துள்ளன. இவர் இன்றையச் சமுதாய அவலங்களையும், அலுவலக ஊழல்களையும், அரசியல், திரைப்படம் போன்ற துறைகளின் நிலைகளையும் சிறுகதைகளில் தந்துள்ளார்.

தற்காலச் சிறுகதைகளில் வடிவ மாற்றம் முன்னிலை பெற்றுள்ளது. ஒருபக்க கதைகள், அரை பக்க கதைகள், ஒரு நொடிக் கதைகள் என வார இதழ்களில் மிகுதியாக வெளிவருகின்றன. இது ஒருவகை இலக்கியப் பரிசோதனை முயற்சியாகும். கருவில், பாத்திரப்படைப்பில் பெரிதாக மாற்றம் ஏதுமில்லை.

**கதைச்சுருக்கம்**

**1. அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா**

சண்முகமும் அமுதாவும் உயிருக்கு உயிராகக் காதலிக்கின்றனர். இருவரும் ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள். திருமணம் செய்ய மாப்பிள்ளை வீட்டார், பெண் வீட்டிற்குச் செல்கின்றனர். அங்கே பெண்வீட்டார் திருமணத்திற்குத் தம் கட்சித் தலைவர் தலைமை தாங்க வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தனர். பிள்ளை வீட்டார் மற்றொரு கட்சித் தலைவர் தான் தலைமைத் தாங்க வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தனர். இந்த கருத்து வேறுபாடு கலாட்டாவாகிறது. இதனால் காதலர்கள் இருவரின் திருமணம் தடைபடுகின்றது. சண்முகம் இராணுவத்தில் சேர்ந்து விடுகின்றான். ஆனால் அரசியலில் எதிரும் புதிருமாக இருந்த அவர்களின் கட்சித் தலைவர்களோ சென்னையில் தம் மக்களுக்குத்

திருமணம் நடத்திச் சம்பந்தியாகிறார்கள். தலைவர்கள் வாழ்த்து என்ற செய்தி எல்லாப் பத்திரிகைகளிலும் வருகின்றது.

## 2. கலெக்டர் வருகிறார்

புதியதாக மாவட்ட ஆட்சியர் பதவி ஏற்று, யூனியன் அலுவலகத்திற்கு வருகின்றார். அன்று வேலைக்கு வரவேண்டிய சில அதிகாரிகள் விடுப்பில் சென்று விட்டனர். அலுவலக வாகனத்தைச் சேர்மன் எடுத்துச் சென்றுவிட்டார். புதிய கலெக்டர் ஊரைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்கிறார். கமிஷ்னர் ஜீப் சேர்மனே எடுத்துச் சென்று விட்டதாகக் கூறுகிறார். புதிய கலெக்டர், திட்டிவிட்டுக் கோபமாக அறைக்குள் செல்கின்றார். அவருக்கு உணவு பரிமாறப்பட்டது. ‘கோழிக் கறி சூப்பர்’ என்கிறார். ஆபிஸ் பியூன் பண்டாரம். சார் இங்குக் கோழி ஒரு ரூபாய்தான் என்கிறான். ஆச்சரியப்பட்ட கலெக்டர் தினமும் ஒரு கோழி அனுப்பு. இந்தா முப்பது ரூபாய் என்று அவனிடம் பணம் கொடுத்துவிட்டு மகிழ்ச்சியுடன் சென்றார்.

## 3. சாமியாடிகள்

சுடலைமாடசாமி கோவில் திருவிழா நடக்கிறது. இரவு நிகழ்ச்சியில் விழா வில்லுப்பாட்டு நிகழ்ச்சி நடந்துகொண்டுள்ளது. சுடலமாடசாமி காத்தமுத்து மீது வந்து ஆடிக் கொண்டு இருந்தான். ஆனால் ஊரில் ஒரு பிரிவினர், போன வருசம் இதே நாளில் முத்துப் புதியவன் ஆடினான். அவன் மகன் ரத்தினம் தான் இப்பொழுது ஆடவேண்டும் என்றும், அவன் முகத்தைப் பாருங்கள் சுடலைமாடன் அவன் மீது வருகின்றான் என்று கூறி அவன் முன் மேளத்தை அடிக்கின்றனர். அவனுக்குச் சாமி வந்து அவனும் ஆடுகின்றான்.

ரத்தினம் ஆடுவதே சுடலைமாடன் என்றும் ஒரு பிரிவினரும், மற்றொரு பிரிவினர் காத்தமுத்து ஆடுவதுதான் சுடலைமாடன் என்றும் கோஷங்கள் வலுவடைந்தன.

### 4. எந்நன்றி கொன்றார்க்கும் ...

முத்தையன் தன் பெரியப்பா முத்துப் புதியவனின் மீதும், அதிக அளவில் பாசம் வைத்து இருந்தவர். இதே ஊரைச் சேர்ந்த காரை வீட்டுக்காரர்கள், முத்துப் புதியவனின் மனைவியை ஒரு முருங்ககாய் பறித்ததற்காக நடு வீதியில் குச்சியால் அடித்தார்கள். அதைப் பார்த்த முத்தையன் தன் கையில் இருந்த கோடரியில் அவர்களை வெட்ட துரத்திச் சென்றான். அன்று முதல் காரை வீட்டுக்காரர்கள் இவர்களிடம் வம்புக்கு வருவதில்லை. முத்துப் புதியவனின் பெரிய மகன் போலீஸ் பதவி உயர்வு பெற்றுள்ளான். அவனுக்கு விழா எடுக்க தன் கையில் இருந்த வண்டி மாட்டையும் விற்று விட்டான். இப்போது அவன் கூலி வேலைக்குச் சென்றுதான் பிழைப்பு நடத்துகின்றான். தனது பெரியப்பா மகன் வேலுவை உரிமையுடன் திட்டினான். இதைப் பெரிதுபடுத்தி, யாருக்காக விழா எடுத்தானோ, அவனே முத்தையாவைக் கைது செய்யச் சொல்லி, கைது செய்து அழைத்துச் சென்றனர்.

### 5. ஏழை - ஆப்பிள் - நட்சத்திரம்

‘எங்கள் தர்மம் - சமதர்மம்’ என்ற படத்திற்குப் படபிடிப்பு குழு ஸ்டுடியோவில் தயார் ஆகிக் கொண்டு இருந்தது. அந்தக் குழுவில் லைட்பாய் நாராயணனும் இருந்தான். அவன் குழந்தைக்கு உடம்புக்கு முடியாத நிலையில் அவனும் படப்பிடிப்பிற்கு வந்தான். எப்படியாவது காட்சி முடிந்தவுடன் தயாரிப்பாளரிடம் கைகாலில் விழுந்து பணம் வாங்கிச் செல்லலாம்

என்று எண்ணிக் கொண்டு இருந்தான். நடிகர் கமலனும், நடிகை நளினியும் வந்துவிட்டனர். நடிகை நளினி ஒரு ஆப்பிள் பழத்தைச் சாப்பிட்டுப் பாதியைப் போட்டுவிட்டாள்.

படப்பிடிப்புத் தொடங்கியது. டைரக்டர் டேய் லைட்டை திருப்புடா என்று நாராயணனைப் பார்த்து கத்தினார். பரணியில் இருந்து கீழே விழுந்துவிட்டான் லைட்பாய். லைட் டூமையைத் திருப்பும்போது நளினி கடித்துப் போட்ட ஆப்பிளைப் பார்த்து தன் மகன் நினைவு வரவே கால் தவறி விட்டது. தனக்கு விடிவு காலம் பிறக்காதா என்று ‘லைட்பாய்’ நாராயணன் ஆஸ்பத்திரியில் ஏங்கிக் கொண்டு இருந்தான்.

**6. இடம் தேடி**

ஆறுமுகம் சென்னைக்குப் பிழைக்க வந்தவன். அந்த நேரத்தில் தெருவில் ஆப்பம் விற்கும் இந்த கிழவி அவனுக்கு உணவு கொடுத்து ஆதரித்துள்ளாள். ஆனால் கிழவி மகன்கள் அவனை மிகவும் கடினமான வார்த்தைகளால் திட்டினார்கள். அதனால் அங்கு இருந்து இடத்தைக் காலி செய்து, வேறு இடத்திற்குச் சென்றுவிட்டான். கிழவிக்கு உடல்நிலை சரியில்லாமல் போனதால், மருத்துவமனையில் சேர்த்துவிட்டான் ஆறுமுகம். யாரைக் கேட்டு சேர்த்து விட்டாய்! என்று நான்கு மகன்களும் சண்டைக்கு வந்துவிட்டனர்.

ஆறுமுகம், கிழவியை மருத்துவமனையில் இருந்து வீட்டிற்கு அழைத்துச் செல்கின்றான். கிழவி தனது மகன் வீட்டிற்குச் செல்ல வேண்டும் என்று கூறுகின்றாள். ஆனால் மூன்று மகன்களும் கண்டுகொள்ளவில்லை. நான்காவது மகன் வீட்டிற்கு ரிக்ஷாவை விடச் சொல்லும்போது கிழவி ‘வேண்டாம் உன்

வீட்டிற்கு கொண்டு போ' என்கின்றாள். ஆறுமுகம் வீட்டிற்குச் செல்லும் வழியிலேயே கிழவி இறந்து விட்டாள். சாப்பாட்டிற்கே வழியில்லாத அவனும் ரிக்ஷாக்காரனும் கிழவியை அடக்கம் செய்கின்றனர்.

### 7. கமலா அழுகிறாள்

மகன் சென்னையில் வேலை கிடைத்து அங்கே வந்து தங்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துகின்றான். அதனால் கிராமத்தில் உள்ள சொத்துக்களை விற்று மகன் காட்டிய இடத்தில் எல்லாம் கையொப்பம் போட்டு விட்டார். ஆனால் மருமகள் வந்த புதியதில் நல்ல வரவேற்பு. இப்போது அவர் உட்கார்ந்த இடத்திற்குச் சாப்பாடு வராது. சாப்பாட்டு தட்டு உள்ள இடத்தில் தான் அவர் உட்கார வேண்டும் அந்த நிலை. மகள் கமலாவைப் பார்க்க அவள் தந்தை வந்தார். நான்கு நாள் தங்கி இருந்தார். ஊருக்குக் கிளம்பும்போது மகள் கமலா, இன்னும் சில நாள் தங்கி செல்லும்படி கூறுகின்றாள். இல்லம்மா இந்த வருசத்திலே இந்த நாலு நாள்தாம்மா வாழ்ந்த உண்மையான நாள். உன் அண்ணி என்னை நாயைவிடக் கேவலமாக நடத்துகின்றாள் எனக்கூறி அழுதார். கமலா தன் அண்ணியைத் திட்டிக் கொண்டே அன்று முழுவதும் அழுது கொண்டே இருந்தாள். மாமனார், மதிய உணவாக வாஷ்பேசின் தண்ணீரைக் குடித்துக் கொண்டார்.

### 8. பால் கணக்கு

கணவனை இழந்த பகவதி படுத்த படுக்கையாக ஒருமாத காலமாகக் கிடக்கின்றாள். தனது ஏழு வயது மகன் மாடசாமியை நினைத்து அவள் உயிர் போகாமல் இருப்பதை உணர்ந்த உறவினர் ஒருவர் மாடசாமியைக் கூப்பிட்டு நான் சொல்வதுபோல்

உன் அம்மாவின் காதில் சொல். இன்றைக்கு என் வீட்டில் சாப்பாடு என்று சொன்னதும், மாடசாமி அவர் சொன்னதுபோல் அம்மாவிடம் 'எம்மா எம்மா நான் என்ன ஆவேன்னு கவலைப்படாதேம்மா. நான் ஆடு, மாடு மேச்சாவது பொழச்சிக்குவேம்மா' என்று கூறி, கையில் வைத்து இருந்த சொம்புப் பாலை அவள் வாயில் ஊற்றிய அடுத்த கணம் அவள் உயிர் உடலைவிட்டு பிரிந்து விடுகிறது.

### 9. நடந்தது

அலுவலக வேலை காரணமாக பண்டாரம் வெளியூர் சென்றார். அவருக்கு அனுப்ப வேண்டிய முன் பணத்தை அனுப்பவில்லை அவனுடைய உயர் அதிகாரிகள். அதனால் தான் சென்ற ஊருக்கு நடந்து சென்று வந்ததாக ஒரு மாதம் அலுவலகம் வரவில்லை. உயர் அதிகாரிகள் அவனுக்குச் சஸ்பெண்ட் ஆர்டர் அடித்து கொடுக்கின்றனர். பண்டாரம், அதை வாங்காமல் எனக்கு ஏன் பணம் அனுப்பவில்லை. அதனால் நடந்து சென்று வந்தேன். அதற்குப் பேட்டாவும், அங்கு உடம்பு சரியில்லை அதற்கு மருத்துவ செலவிற்கான பில்லும் தருகின்றான். முன் பணம் அனுப்பாத தன் தவற்றை உணர்ந்த உயர் அதிகாரிகள் மீண்டும் அவன் வருகைப் பதிவேட்டில் கையொப்பம் போட அனுமதிக்கின்றனர்.

### 10. இலவு காத்த பலவேசம்

செல்லக்கனி துணி வெளுக்கும் குடும்பத்தைச் சார்ந்தவள். ஒரு நாள் காலதாமதமாக துணியைக் கொண்டு சென்றதற்கு மிராஸ்தார் மகள் கிளியம்மை மிகவும் கடினமான சொற்களால் திட்டி விடுகின்றாள். இதைப் புரிந்து கொண்ட கிளியம்மையின்

மாமா பலவேசம், தன் மகனுக்குக் கிடைக்காத அவளுடைய திருமணத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று எண்ணினார். அதனால் செல்லக்கிளியிடம் சென்று மாப்பிள்ளை வீட்டார் வந்து உன்னிடம் விசாரித்தால், அவள் தீட்டுத் துணியை துவைத்து மூன்று மாதம் ஆகின்றது என்று கூறி விடு; திருமணம் நின்று விடும் என்று சொன்னார். அதற்கு கைமாறாக 200 ரூபாய் லஞ்சமும் கொடுத்தார். ஆனால் கிளியம்மை திருமணம் நிச்சயித்த நாளில் நடந்து முடிந்தது. பலவேசம், செல்லக்கிளியிடம் வந்து 'நீ காசை வாங்கிக் கொண்டு என்னை ஏமாற்றி விட்டியே' என்று கத்துகிறார். அதற்கு என்னை திட்டியது உண்மைதான். அதற்காக ஒரு பெண் வாழ்வைக் குலைக்கிற அளவுக்கு நான் மோசமானவள் அல்ல. ஏன்னா நான் அழுக்க எடுத்திட்டு சுத்தத்தைக் குடுக்கிறவ என்று கூறுகின்றாள்.

## 11. ஒரு சத்தியத்தின் அழுகை

சட்டாம்பட்டியில் கோயில் திருவிழா நடத்துவதற்கு ஊர்கூட்டம் கூடி முடிவெடுத்தனர். அதில் ராமசாமி தேவரும், மாயாண்டி நாடாரும் பேசும்போது, இந்த வருடம், நமது சுடலமாடசாமி காலனிக்கு வரவேண்டும் என்றும், இல்லையென்றால் மறிக்க வேண்டும் என்றும் காலனிகாரர்கள் கூறுவதாக கூறினார்கள். திருவிழா ஆரம்பமானது கடைசி நாள், சப்ரம் வந்தது. திடீரென்று காலனியைச் சேர்ந்தவர்கள் வழிமறித்து எங்கள் வீதிக்கு வரவேண்டாம். ஆனால் நாங்கள் கற்பூரத்தைக் காட்டவாவது அனுமதியுங்கள் என்றனர். ஆனால் நாடார் தலைவர் பெரியசாமி முடியாது என்று மறுத்து கலவரத்தில் முடிந்து காலனி தலைவர் கந்தசாமியின் உயிர் போனது தான் மிச்சம். அடுத்த ஆண்டு விழாவின்போது யாருக்கு முதல்

மரியாதை என்ற பிரச்சனை வந்து தேவர் தலைவருக்கும், நாடார் தலைவருக்கும் சண்டை ஏற்பட்டு, ராமசாமி தேவருக்கு ஒரு கை போனது, மாயாண்டி நாடாருக்கு ஒரு கண், ஒரு தோள்பட்டை சரிந்தது. இன்னும் சில பேர் மனைவிகள் தாலி அறுபட்டது. இவர்கள் இருவரையும் பார்த்து கந்தசாமி மனைவி காத்தாயி அண்ணன்மார்களே நான் கூறுவதைக் கேளுங்கள், என் புருசன் சொன்னததான் கூறுகின்றேன். உலகத்தில் இரண்டு சாதிதான் உண்டு. ஒன்று இருக்கிற சாதி, மற்றொன்று இல்லாத சாதி. நாம எல்லாம் இல்லாத சாதி. நமக்குள் ஒற்றுமைதான் வேண்டும் என்று கூறி, மூவரும் ஊர் பார்த்து நடந்து சென்றனர்.

## 12. எதிர்பரிணாமம்

கி.பி. 2140ஆம் ஆண்டு எய்ட்ஸ் முற்றிலும் ஒழிக்கப்பட்டு விட்டது. ஆனால் தமிழ்நாட்டில் புதுவித நோய் ஒன்று உருவாகியுள்ளது. தமிழர்கள் அனைவரும் தவழ்ந்து ஓணான் போன்று ஊர்ந்து செல்லும் நோய். குறிப்பாகப் பெண்களை விட ஆண்களுக்குத் தான் இந்த பாதிப்பு அதிகம். இந்த நோய்க்கு நிவாரணம் கண்டுபிடிக்க உலக நாடுகளில் இருந்து அறிஞர்கள் வரவழைக்கப்பட்டு ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. அதில் உணர்வியல் முடிசூடா மன்னனாக விளங்கும் சிங்கள டாக்டர் விஜயரத்னே தமிழன் இப்படி ஆனதற்குக் காரணம் காலில் விழுந்தால் வெற்றி பெறும் தகவலை அவன் உடம்பில் உள்ள ஜீன்கள் மூலம் சந்ததிக்குப் பரவி உள்ளது. அதனால் இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டது. இதே பாருங்கள் குழந்தை மனிதன் ஓணான் கால்களாய் மாறி வருவதை நாம் எப்படி நினைக்கிறோமோ அப்படி ஆகின்றோம். உணர்வால் மட்டுமல்ல உடலாலும் என்றார். இதற்கு மனோவியல் டாக்டர் கெடிஸ்கே

அவர்களுக்குச் சிகிச்சையாக, இந்தத் தமிழ் நோயாளிகளின் காதுகளில் கயவர்தான், தங்களைத் தாங்களே வியாப்பார்கள். என்று சொல்ல வேண்டும் என்றும் பலரை ஒருத்தர் காலில் விழச் சொல்லி அவர்களைச் சாட்டையால் அடிக்க வேண்டும். இதை தமிழன் பார்க்க வேண்டும். அப்போது இந்நோய் போகும் என்றார். அதுவும் மூன்று தலைமுறை ஆகும் என்றார்.

## 13. ஐம்பெருவிழா

ஊர்கூடிச் சேமித்த பணத்தைச் செலவு செய்ய ஆலோசித்தனர். முதலில் சென்னை சென்று வந்த பரமசிவத்துக்குப் பாராட்டு விழா. சினிமாவில் நடித்த கண்ணனுக்குப் பாராட்டுவிழா. பேப்பரில் ஊர் பெயர் வரச் செய்த காசிக்கும், கள்ளத் தேங்காய் பறித்து வந்த சாமிக்கண்ணுக்கும், இறுதியாக ஊர் முன்னேற்றத்திற்காக பாடுபட்டு இறந்த காளமேகத்திற்குப் பாராட்டுவிழா நடத்தப்படுகின்றது. மக்கள் இந்த விழாவில் கலந்து கொண்டு இருந்தபோது கடாசாமியும், மாடசாமியும் ஏரி தண்ணீரை வெட்டி விட்டு, விவசாய நிலத்தில் உள்ள பயிர்கள் அறுவடை செய்து, தன்னதாக்கி கொண்டனர்.

## 14. மனம்கொத்தி மனிதர்கள்

நடராஜன் இப்படி ஆனதற்குக் காரணம், ஒருநாள் இரவு குடும்பத்தினர் அனைவரும் சாப்பிடும்போது இராப்பிச்சைகாரன் அம்மா தாயே! பிச்சை என்று கேட்டான். இதை பிடிக்காத மூத்த அண்ணன் பிச்சைகாரன் முகத்தில் அடித்து கீழே தள்ளி விடுகின்றான். நடராஜன் அங்குச் சென்று அவனைத் தூக்கி விட்டு, அனைவரின் தட்டில் இருந்த சாதத்தையும், அவனுக்குப் போட்டுவிட்டு, பானையில் இருந்த சோத்தையும் போட்டான்.

பின்பு பானையை அண்ணன் முன்னால் போட்டு உடைத்தான். அவன் பின்பு ஒரு மாதிரி ஆகி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டான். இந்த நேரத்தில் அவனுக்குப் பேசி முடித்த பெண்ணைச் சின்னவன் தம்பித்துரைக்குத் திருமணம் செய்யப்பட்டது. மருத்துவமனையில் சிகிச்சை முடிந்து ஊர் வந்த பிறகு, ஊர் மக்கள் நடராஜன் எதைச் செய்தாலும், அவனைப் பைத்தியம் என்று தான் சொல்கின்றனர். நடராஜனும் அதை ஆமோதிப்பது போல், வீட்டை விட்டு வெளியேறிவிட்டான்.

### 15. மீனாட்சி நிமிர்ந்து பார்க்கிறாள்

கிராமத்தில் இருக்கும் தங்கையைத் தம்பிகள் மாடு மேய்க்கக் காட்டுக்கு அனுப்புவதால், சாமிநாதன் தங்கை மீனாட்சியைச் சென்னைக்கு அழைத்து வந்தான். அவள் உட்கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்து இருப்பாள். யாருக்கும் தொல்லை கொடுக்க மாட்டாள். ஒருநாள் மாலை யாரும் வீட்டில் இல்லாத நேரம் சாமிநாதன் மகள் விமலா ஒரு வாலிபனுடன் வீட்டிற்கு வந்து அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும் இருந்தனர். என்னை விட்டு விடுங்கள் என்று விமலா சத்தம் போட்டாள். இதைக் கேட்ட மீனாட்சி கதவைத் திறந்து அறைக்குள் சென்று அவன் முகத்தில் ஒரு குத்து குத்திவிட்டு, வாசலுக்கு வெளியில் அவனைத் தள்ளிவிட்டு வந்தாள். விமலா அழுது கொண்டே அவள் அருகில் வந்தாள். அவள் கண்ணீரைத் துடைத்து விட்டுஎப்போதும் உட்காரும் இடத்தில் மீனாட்சி உட்கார்ந்து கொண்டாள்.

### 16. யானைப் பூச்சிகள்

அடர்ந்த காட்டில் இரண்டு மரங்களுக்கு இடையில் பெருத்த தேன்கூடு. அந்த கூட்டில் இருந்த ராணி தேனீ, ஆண்

தேனீ, வேலைக்காரத் தேனீ என்று பலவகைகள் இருந்தன. அதில் ராணி தேனீ, நம் குலத்திற்கு அழிவு வரப்போகிறது. நமக்கு எதிரியாக வாழைத் தோட்டத்து கொளவியும் வடதிசையில் கிணற்றில் உள்ள தேனீக்களும் நம்மை அழிக்கப்பார்க்கிறது என்றது. வேலைக்கார தேனீக்கள் நம் ராணித் தேனீக்குப் பிறந்தநாள் வரப்போகிறது. தேன் மெழுகால் அலங்கார வளைவுகள் கட்ட வேண்டும். எல்லாம் தேன் எடுக்கச் செல்லுங்கள் என்றது.

தேனீ கொடுக்கும் தொல்லைகள் தாங்கமுடியாமல் செம்பருத்தி, சோளப்பயிர்கள் ஒப்பாரி வைத்து எங்களைக் காப்பாற்றுங்கள் என புலம்புகின்றன.

### 17. பிணம் தின்னும் சாஸ்திரங்கள்

வள்ளி வயல் வேலைக்கு போயிட்டு வரும்போது சீமைச்சாமி புல்லு கட்டை தூக்க கூப்பிட்டார். அதற்காகச் சென்ற வள்ளியின் மீது கைவைத்து மானபங்கப்படுத்தப் பார்த்தார். அவள் போட்ட கூச்சலில் செல்லமுத்துவும், சின்னானும் வந்தார்கள். போலீஸில் புகார் கொடுக்கப்பட்டது. கோர்ட்டில் வழக்கு பத்து வருடங்களாக நடந்து கொண்டு உள்ளது. கடைசியாக வரதாச்சாரி என்ற பெரிய வக்கீல் வாதாடி வள்ளி காசுக்கு விலைபோகிறவள், அவளைக் கட்டிக்கப் போற சின்னான் பார்த்ததால், என் கட்சிக்காரர் சீமைச்சாமி மீது பழிபோட்டு விட்டாள் என்று கூறி, அவள் மீது மான நஷ்ட வழக்குப் போட வேண்டும் என்று வழக்கை முடிக்கிறார். தாழ்த்தப்பட்ட பெண்ணான வள்ளி சீமைச்சாமி தன்னைத் தொட்டபோது அழுததை விட சத்தம் போட்டு கோர்ட்டிலேயே அழுதாள். இன்ஸ்பெக்டர் ஏம்மா, வக்கீல் சொன்னதற்கெல்லாம் ஆமாம், போட்டு காரியத்தைக்

கெடுத்து விட்டாயே என்றும், சீமைச்சாமி உன் மீது அவதூறு வழக்குப் போட்டாலும் போடுவான் என்று கூறி சென்றார்.

### 18. மானுடத்தின் நாணயங்கள்

மார்த்தாண்டத்திற்கும் சிவகாமிக்கும் திருமணம் நடந்து ஆண்டுகள் பல ஆகிவிட்டது. இப்போது சிவகாமியை அவள் அப்பாவிடம் சென்று எனக்குத் தரவேண்டிய இரண்டாயிரம் பணத்தை வாங்கி கொண்டு வா, இல்லை என்றால் அங்கேயே இரு என்று அவள் தம்பி கடையில் விட்டுவிட்டு வந்துவிட்டான். வெளியில் சென்ற தங்கராஜு தன் அக்காவிடம் நீ ஏன் வந்தாய்? அவன் பக்கத்துத் தெரு ராக்கமாவிடம் தொடர்பு வைத்துக் கொண்டு உன்னை வெளியே அனுப்பத் திட்டம் போட்டு அழைத்து வந்தால் நீ வரலாமா என்கிறான். மேலும் நமது குடும்பம் மிகவும் சிரமத்தில் உள்ளது. அண்ணன் மூட்டை சுமக்கவில்லை என்றால், நம்ம அடுப்பு, பானையைச் சுமக்காது. இங்க வந்து பட்டினியால் சாவதை விட, செருக்கிமவன் கொன்னால் கொன்னுட்டு போறான்னு அங்கே இருக்கலாமே. கண்காணாத இடத்தில் சாவது எவ்வளவோ மேல் என்றான்.

எழும்பூருக்கு வந்து சிவகாமி திருநெல்வேலி செல்ல டிக்கெட் எடுத்து கொடுத்து, அனுப்பி வைத்தான். அவள் ஊரில் சென்று அவமானப்படுவதைவிட கண்ணுக்குத் தெரியாத இடத்தில் அவமானப்படுவது மேல் என்று எண்ணி, மதுரையில் இறங்கிக் கொண்டாள். மீனாட்சி அம்மன் கோவில் வாசலில் பிச்சைக்காரர்கள் வரிசையில் துண்டை விரித்துப் போட்டு தன் குழந்தையை அதில் படுக்க வைத்துவிட்டுக் கைகளைக் கிண்ணம்போல் குவித்துக் கொண்டாள். மானுடத்தின் நாணயங்கள் குழந்தையின் துணியில் வீழ்ந்து கொண்டு இருந்தன.

### 19. ஏவாத கணைகள்

குட்டாம்பட்டி கிராமத்தில் ஆறுமுக பாண்டியும், கலாவதியும் காதலர்கள். கூலி வேலைக்குச் சென்ற கலாவதி, வேலை முடிந்து மதியம் சாப்பாட்டு நேரத்தில் தென்னை மரத்தில் ஏறி கிணற்றில் தலைகீழாக சாகசம் செய்து குதிக்கிறாள். இதைப் பார்த்த முதலாளி அவளைத் திட்டி அனுப்புகின்றார். கலாவதி குதிக்கும்போது கிணற்று பக்கத்தில் ஒரு கல் நீட்டிக் கொண்டு இருந்தது அதில் அடிபட்டு விடுவாள் என்று அதை தூக்கிக் கிணற்றில் போட்டுவிட்டான். அதனால் அவனுடைய கூலியையும் முதலாளி பிடித்துக் கொண்டார். ஆனால் டெல்லியில் நடக்கும் நீச்சல் போட்டியில் பல நாட்டு பெண்கள் கலந்து கொள்கின்றனர். ஒவ்வொரு நாட்டுப் பெண்களும் ஒவ்வொரு விதத்தில் தன் திறமையைக் காட்டி, பலர் கைதட்டல்கள் பெறுகின்றனர். ஆனால் இந்தியப் பெண் நீச்சல் குளத்தில் குதிப்பது ஏனோ தானோ என்று இருந்துவிட்டது. இதனால் கைத்தட்டலும் குறைந்து விட்டது. பெண்களுக்குக் கோச் ஆறுதல் சொன்னார். ‘நாட் பேட் பெட்டர் லக் நெக்ஸ் டைம்’ என்றார்.

### 20. தர்மத்தின் தற்காப்பு

மங்கம்மா காட்டில் புல்லுக்கட்டை தூக்க மாசானத்தைக் கூப்பிட்டாள். அவன் தூக்கி விட்டு அவள் தோள் மீது கையைப் போட்டு பின்பு, உதட்டைப் பிடிக்க வந்தான். அவள் தப்பித்து ஓடிவந்து தன் கணவன் நடராசனிடம் கூறுகின்றாள். ஊர் பெரிய மனிதர் இசக்கிமுத்துவிடம் கூறினான். பின்பு, மணியக்காரர், நாட்டாண்மைகாரர்களிடம் கூறியும் யாரும் எதுவும் செய்யவில்லை. பின்பு காவல் நிலையத்தில் கூறினான். உன் மனைவி போகாமல் அவன் எப்படி தொடுவான் என்று கூறி

அனுப்பிவிட்டனர். நடராஜன், மங்கம்மாவை அழைத்துச் சென்று அவள் அம்மா வீட்டில் விட்டுவிட்டு வந்தான். வரும் வழியில் மாசாணம் தன் நண்பர்களுடன் மங்கம்மாவை தொட்ட கதையைக் கூறிக்கொண்டு இவனைப் பார்த்துச் சிரித்தார்கள். நடராஜன் வெறிப்பிடித்தவன் போல் மாசாணம் முடியைப் பிடித்துக் கீழே தள்ளி தான் வைத்திருந்த கத்தியால் குத்தி கொலை செய்து விடுகிறான். இப்போது காவலர்கள் பயபக்தியுடன் நடராஜனை விலங்கிட்டு அழைத்துச் சென்றனர்.

### 21. பிறக்காத நாட்கள்

குமார் வசதியான வீட்டு பையன். அவன் பிறந்த நாளன்று அனைவரும் பரிசு தருகின்றனர். காத்தாயி அந்த வீட்டு வேலைக்காரி; அவள் மகன் முனுசாமி. குமார் பிறந்தநாள் நிகழ்ச்சியில் அவனுக்குத் தன் பரிசாக கடலை மிட்டாய் தருகின்றான். குமார், முனுசாமியைத் திட்டிவிட்டு அவன் கொடுத்த கடலை மிட்டாயைத் தூக்கி எறிகின்றான். முனுசாமி, குமார் வீட்டில் கொடுத்த லட்டு உருண்டையை அம்மாவை தூக்கி எறிய சொன்னான். அவளும் அதைச் செய்தாள். முனுசாமி பிறந்த நாள் கொண்டாட வேண்டும் என்கிறான். அதனால் தன் கணவனிடம் 15 ரூபாய் பணம் பெற்றுக் கொண்டு துணி வாங்க வெளியில் செல்லும்போது வீட்டு வாடகை கேட்டு ஒரு ஆசாமி வருகின்றார். அவன் பேச்சுக்குப் பயந்து அந்தப் பணத்தை அவனிடம் கொடுத்து விட்டாள். முனுசாமி அடம்பிடித்தான். அவனுக்குப் பிறந்தநாள் பரிசாக அடிதான் கிடைத்தது. பின்பு முனுசாமியிடம் காத்தாயி, நம்மள மாதிரி ஏழைங்க பொறந்த நாளுக்காகவ சந்தோசப்படக் கூடாது அழுணும்டா. நமக்குப் பொறந்த நாள விட பிறக்காத நாள்தாண்டா முக்கியம் என்றாள்.

**22. குற்றம் பார்க்கில்**

விமலா கணவனை இழந்தவள். தன் மகள் நளினா எதைச் செய்தாலும் குற்றமாகக் எடுத்துக் கொண்டு, அவளை அடிப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தாள். மனவளர்ச்சி குன்றிய குழந்தை என்று எண்ணியவள் ஒரு நாள் விமலாவின் அத்தைக்காரியும் மகள் ரேணுகாவும் இவர்களைப் பார்க்க வந்தார்கள். அப்போது விமலா குழந்தையிடம் நடந்து கொள்ளும் விதத்தைப் பார்த்ததும், இருவரையும் ரேணுகா மறுநாள் ஒரு மனோதத்துவ டாக்டரிடம் அழைத்துச் செல்கின்றாள். அப்போது விமலா தான் கல்லூரியில் படிக்கும்போது ஒருவன் தன்னைச் சுற்றி சுற்றி வந்ததாகவும் தான் அவனை விரும்பவில்லை என்றும் கூறினாள். தன் கணவன் தான் தடுத்தும் கேட்காமல் இராணுவத்தில் சேர்ந்தார். சில நாட்கள் கழித்து அவர் உடைமட்டும்தான் வந்தது என்று கூறி அழுதாள். அப்போது டாக்டர் குழந்தையிடம் எந்தக் குறையும் இல்லை. உங்களிடம்தான் குறை உள்ளது என்றும், குழந்தை திருந்தி விடுவாள் என்றும் கூறி அனுப்பி வைத்தார்.

**23. ஆசிரியர் அண்ணாவி**

ஆசிரியர் அண்ணாவி அந்த ஊருக்கு ஆசிரியராக வந்து திண்ணைப் பள்ளிக்கூடத்தில் பாடம் நடத்தியவர். இந்த ஊருக்கு வந்த பிறகுதான் திருமணம் நடந்து, மகன் பிறந்து, அவனும் பெரியவனாகி, டெல்லியில் பெரிய உத்தியோகத்தில் உள்ளான். ஊர்மக்கள் உங்கள் மகனைச் சென்று பார்க்க மாட்டீர்களா என்று கேட்டார்கள். அவர் அதற்கு நீங்கள் எல்லாம் என் மக்கள், என்று கூறுவார். ஆனால் அண்ணாவி இந்த ஊர்

பள்ளிக்கூடத்தை உயர்நிலைப் பள்ளியாக உயர்த்த வேண்டும் என்ற எண்ணத்தில் இங்கேயே தங்கி இருந்தவர். அவர் எண்ணப்படி ஊர்மக்கள் ஒத்துழைப்புடன் உயர்நிலைப் பள்ளியாக உயர்ந்துவிட்டது. புதியதாக தலைமை ஆசிரியராக ஒருவர் பொறுப்பேற்றார். அவரது செய்கை எதுவும் அண்ணாவிக்குப் பிடிக்கவில்லை. ஒருநாள் அவர் தனது அறையில் முருகன், சரஸ்வதி படத்திற்கு முன்னால் சிகரெட் பிடித்துக் கொண்டு இருந்தார். இதைப் பார்த்த அண்ணாவி, திடுக்கிட்டுப் பணிபுரியும் இடமும், கோவிலும் ஒன்று. இப்படி இருக்கக் கூடாது என்றும் கேட்டு விட்டார். உடனே தலைமை ஆசிரியர், சார் உங்க வேலையைப் பார்த்துக் கொண்டு செல்லுங்கள் என்றும் என் நிர்வாகத்தில் தலையிடாமல் இருப்பது உங்களுக்கு நல்லது என்றும் 'யு கேன் கோ நவ்' என்றும் கூறிவிட்டார். அண்ணாவிக்கு ஒன்றும் புரியாமல் வெளியே வந்தார். தனது வேலையை ராஜினாமா செய்தால் ஊர் மக்கள் விடமாட்டார்கள் என்று, விடுப்பு விண்ணப்பம் கொடுத்துவிட்டு, தன் மகனைப் பார்க்க டெல்லிக்குச் செல்வதாகக் கிளம்பினார். ஊர்மக்களே அவரை வழியனுப்ப இரயில் நிலையம் வந்தனர்.

### 24. போதும் உங்க உபகாரம்

மழை பெய்து கொண்டு உள்ளது. அதனால் ஒரு கிழவியும் பேத்தியும் நனைந்தபடி தங்குவதற்கு இடம் தேடி வருகின்றனர். அப்போது மீசை ஆசாமிகள் ஓர் இடத்தில் நிற்கின்றனர். இவர்கள் பார்த்ததும் இங்கெல்லாம் தங்க முடியாது இடமில்லை என்று விரட்டுகின்றனர். கிழவி தானும் ஒரு அனாதை என்றும் என் பேத்தி காத்தாயியும் பிறவி ஊமை என்றும் இவளுடைய அம்மா இவளைப் பெற்று போட்டுவிட்டு, வேறு ஒருவனுடன்

ஓடிவிட்டாள். இவள் நொண்டி காலை காட்டித்தான் பிச்சை எடுத்தேன். இவளுக்கு விவரம் தெரிந்த பிறகு எனக்கு விஷம் கொடு குடித்து இறந்த பின்பு என் உடலை வைத்துப் பிச்சை எடு என்றாள். அதன் பின்பு ஒரு எஜமான் வீட்டில் தங்கி இருந்தேன். அந்த வீட்டுப்பிள்ளை பாண்டியன் இவளை முறைத்துப் பார்த்துள்ளான். இதைப் பார்த்த பிள்ளையாண்டான் அம்மா, எங்களைத் தொறத்தி விட்டாள் என்று கூறினாள். இதைக் கேட்டதும் அங்கே தங்கச் சொல்கின்றான். படுத்துத் தூங்கும்போது போர்வை போத்திவிடும் சாக்கில் கூட இருந்தவர்கள் காத்தாயி மீது கையைப் போடுகின்றனர். உடனே காத்தாயி தன் பாட்டியை எழுப்பி வெளியில் கிளம்புகின்றனர். அப்போது அவர்களுக்குத் தலைவன் வந்து என்ன நடந்தது என்று கேட்கின்றான். கிழவி ஒன்றும் நடக்கவில்லை என்றும், இவர்கள் காத்தாயியைக் கூட பிறந்த பெறப்பு மாதிரி கவனிக்கின்றனர் என்றாள். உடனே அவர்கள் தங்கச்சிக்கு டீ வாங்க சென்று வந்தனர்.

### 25. முடியாத செய்தி

கிராமத்துக்குச் சற்று வெளியில், வனத்துறைக்குச் சொந்தமான இடத்தை சிதம்பரம் 500 ரூபாய் கொடுத்து வாங்கி, அங்கே சிறிய டிபன் கடை போட்டுள்ளான். அவன் தம்பி தான் அவனுடைய கடை வேலையாள். இந்த கடைக்கு வரும் போலீஸ்காரர்கள் சாப்பிட்டு விட்டுக் காசு கொடுப்பது கிடையாது. பதிலுக்குக் கள்ளச்சாராயம் உன் கடையில் விற்பதாக கூறுகின்றனர். பார்த்துக் கடையை நடத்து என்று கூறுவர். இதேபோல் காட்டிலாகா அதிகாரி வருவார் அவர் சாப்பிட்டுவிட்டு தனக்குத் தேவையான பொருட்களை எடுத்துச் செல்வார். போகும்போது டேய் சிதம்பரம் உன் கடையில் சந்தனக்கட்டை உள்ளதாகப்

புகார் பார்த்துக் கடையை நடத்துடா என்பார். பின்பு நகரசபை அதிகாரி வருவார் அவரும் சாப்பிட்டு, பார்சல் வாங்கி செல்வார். போகும்போது ஏண்டா காட்டு இலாகா நிலத்தில் கடை போட்டு கிட்டு லைசன்ஸ் இன்னும் வாங்கலயா? என்று மிரட்டிச் செல்வார். போலீசும், காட்டிலாகா அதிகாரியும் ஒரு சிறுவனைச் சந்தனக்கட்டை திருடியதாக கட்டி இழுத்து வந்தனர். சிதம்பரம் கடையில் சாப்பிட்டுவிட்டு வெளியில் செல்லும்போது சிதம்பரம் வழியை மறித்துக் கொண்டு, இதுவரை சாப்பிட்ட காசை மொத்தமும் கொடுத்துவிட்டு வெளியில் செல்லுங்கள் என்றான். அவனும் அங்கிருந்த அனைவரும் கூடிக் கொண்டனர். சிறுவனை அவிழ்த்துவிட்டு விட்டு, அவர்கள் இருவரையும் சூழ்ந்து கொண்டனர்.

## 26. கொடி காய்ச்சி மரம்

காசிராமனும் முனியாண்டியும், வேலைக்குச் செல்லும் போது கிடைத்த ஒரு மரத்தை ஊர் புறத்தே நட்டு, தனது இஷ்ட கட்சி கொடியை ஏற்றினார். அதுவும் கட்சித் தலைவர்களான பட்டுசாமி, நல்ல பெருமாள் வந்து கொடி ஏற்றி வைத்தனர். ஒருநாள் மாலையில் கருப்புசாமியை ரத்த காயங்களுடன் தூக்கி வந்தனர். குழந்தைவேலு டைலர் தொழில் செய்பவன். அவன் ஏன் இப்படி நடந்தது என்று கேட்கும்போது, கருப்புசாமி சைக்கிளில் உட்கார்ந்து கொண்டு ஒரு கால் கீழே ஊன்றிக் கொண்டு பேசி இருக்கான். மட்டு மருவாதி இல்லாமல் இப்படி நிக்கின்றே என்று முத்துபாண்டி கேட்டிருக்கான். அதற்குக் கருப்புசாமி டவுன்ல ஐயர் பையங்க முன்னாலேயும், பின்னாலேயும் வைச்சு ஓட்டரம், அவுங்க திண்ணையில் உட்காறோம், அவங்களே ஒன்னும் சொல்லலே என்று கூறினான்.

உடனே மூன்று பேர் சேர்ந்து கொண்டு கருப்புசாமியைச் செருப்பால் அடித்து விட்டனர் என்றனர். உடனே காசிராமன், முனியாண்டி, குழந்தைவேலு அனைவரும் ஊரில் சென்று கேட்டனர். அங்குப் பட்டுசாமியும் குழந்தைவேலுவும் இருந்தனர். யாரும் இவர்களுக்கு ஆதரவாகப் பேசவில்லை. கட்சி மக்கள் அனைவரும் ஒரு தாய் மக்களாக இருந்தனர். காசிராமனும், முனியாண்டியும் ஊருக்கு வந்து கொடிமரத்தை விதவையாக்கி வெட்டிச் சாய்த்தனர்.

## 27. கதிர் வராத பயிர்கள்

முருகேசனும், தங்கம்மாவும் ஒரே ஊர்க்காரர்கள். பக்கத்து பக்கத்து வயல்காரர்கள். வயலுக்கு வரும்போது இருவரும் காதலர்கள் ஆனார்கள். தங்கம்மா ஒரு நாள் அவன் மீது உள்ள ஆசையில் பெரிய மன்மதன், மூஞ்சையும் மொகர கட்டையும் பாரு என்று சொல்லிவிட்டாள். அவள் மீது முருகேசனுக்குப் பயங்கர கோபம். ஒரு நாள் சித்திகாரியும், தங்கம்மாவும் தெருவில் வந்தனர். தங்கம்மா நின்று கொண்டாள். அவள் சித்திகாரி முருகேசனிடம் என்னடா அவளை பாத்து சுத்திகிட்டு இருக்கிறே நாலு பேரு பார்த்தா அசிங்கம் என்றாள். அடுத்த நொடியே முருகேசன் அந்த மூதேவி இல்லாமத்தான் தவிக்கிறேன் என்றான். இதைச் சித்திகாரி அப்படியே தங்கம்மாவிடம் கூற அவளுக்கு இவன் மீது கடுமையாகக் கோபம். ஒரு நாள் இருவரும் எதிர்பாரால் சந்திக்க, தங்கம்மா முருகேசனைப் பார்த்து மூஞ்சும் மொகர கட்டையும் பார், அப்பாகிட்ட சொல்லி, ‘அட்டின கையை வெட்டச் சொல்கின்றேன் பார்’ என்றாள். அதற்கு முருகேசன், ‘நீ பெரிய ரம்பா பாரு’ என்று திட்டிக் கொண்டு, இருவரும் பிரிய மனமில்லாமல் பிரிந்து சென்றனர்.

## 28. அம்மையப்பன்

முத்துபாண்டியும், மாடசாமியும் நண்பர்கள். மாடசாமி டெல்லியில் வசித்து வருகின்றான். அவனுடன் வேலை பார்க்கும் பையன் ராமனுக்குப் பெண் பார்க்க சொல்லி கடிதம் ஒன்று எழுதி ராமனிடம் கொடுத்து அனுப்புகின்றார். ராமன் சென்னை சென்று முத்துபாண்டியிடம் கொடுக்கின்றான். அவர் தன் மகள் பாமாவைப் பெண் பார்க்க வரச் சொல்கின்றார். ராமனும் பாமாவும் பேசிக் கொள்கின்றனர். அன்று மாலை முத்துபாண்டி மனைவியின் தலையில் அரிவாள்மனை வீழ்ந்து காயம் ஏற்பட்டு ரத்தம் வடிகின்றது. பாமா இதைக் கண்டு கொள்ளாமல், எனக்குப் பெயிண்டிங் வேலை இருக்கிறது என்று கூறி வெளியில் செல்கிறாள். அப்போது முத்துபாண்டி அங்கு வருகின்றார். நடந்ததை மனைவி கூறுகின்றாள். உடனடியாக அவளை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று சிகிச்சை செய்து அழைத்து வருகின்றார். இரவு முழுவதும் சிந்தித்து ராமன் பாசத்திற்காக ஏங்கக் கூடியவன். அதனால் தனது நண்பர் மகள் புவனாதான் அவனுக்கு மனைவியாகும் தகுதி உடையவள் என்று மணம்பேசி முடிக்கின்றார். முத்துபாண்டியின் மனைவி அவரைப் பார்த்து வலிய வந்த மாப்பிள்ளையை வளைத்து போடத் தெரியலையே என்று திட்டினாள். அவர் தன் மகளுக்கு அப்பாவாகவும், அவனுக்கு அம்மாவாகவும் நடந்து கொண்டார்.

## 29. சிட்டுக்குருவியும் சில சிநேகித நாய்களும்

ஜக்கம்மா நகரத்துப் பெண். அவளைக் கிராமத்தில் செருப்பு தைக்கும் சின்னானுக்குக் கொடுத்தனர். இவளைப் பார்க்க வரும் சாக்கில் பூதலிங்கம் வருவார். சின்னான் எனக்குத்

தம்பி மாதிரி என்பார். அதனால் ஒருமுறை ஜக்கம்மா, அவர் தம்பி என்றால், என் தம்பிக்கு உங்க மகளைக் கொடு என்று கேட்டு விட்டாள். இதனால் முகம் கறுத்து ஓடிவிட்டார். தன் கணவனுடன் கருத்து வேறுபாட்டால், தன் தந்தையுடன் வாழ்ந்து வருகின்றாள், வயல் வேலைக்குச் செல்லும்போது தனக்கு ஆதரவாகப் பேசும் ராமசாமி செட்டியாருடன் சிரித்துப் பேசிக் கொண்டு இருந்தாள். இதைப் பார்த்த பண்ணையார், உன் அப்பனிடம் சொல்கின்றேன் என்று அவளை மிரட்டி, அவளைக் கெடுத்து விடுகின்றார். இதைப் பார்த்த பூதலிங்கமும், அதைப் பார்த்த சுவர் இலக்கிய மேதை துரைராஜுவும், அவர் எடுபிடியாட்கள் இருவரும், ஒவ்வொரு நாட்களாகத் தன்னதாக்கிக் கொள்கின்றனர். அவளுக்கு மாதமொருமுறை வரவேண்டியது மூன்று மாதங்களாக வரவில்லை. தன் அப்பாவுக்குத் தெரிந்தால், என் தோலை உரித்துவிடுவார் என்று பயந்து வயிற்றில் கருவுடனும், உடம்பில் நோயுடனும் யாரும் அறியாமல் சாவதற்காக, இரவில் ஓட்டமும் நடையுமாகத் திரும்பக் கூடாது என்று எண்ணி சென்றாள்.

### 30. தலை தீபாவளி

பெருமாள்சாமிக்கு மொத்தம் மூன்று மகன்கள். முதல் மகன் கிராமத்தில் விவசாயம் பார்க்கின்றான். அடுத்து மகன் மனோகரும், சின்னவன் அசோக்கும் சென்னையில் வேலையில் இருக்கின்றனர். பெருமாள்சாமி பெரும்பாலும் மனோகர் வீட்டில் தங்கி இருந்தார். இப்போது கிராமத்திற்குப் பெரிய மகனைப் பார்க்க வருகின்றார். ஆனால் அவன் தந்தையிடம் சண்டை போட்டுக் கொண்டு இந்த தீபாவளியை தன் மாமனார் வீட்டில் கொண்டாடுவதாகக் கூறிச் சென்று விட்டான்.

தீபாவளிக்குச் சென்னையில் இருந்து தம்பிகள் இருவரும் வந்தனர். மாமனார் வீட்டிற்குச் சென்ற பெரியவனும் வந்துவிட்டான். சென்னைவாசிகள் இருவரும் அப்பாவிடம் எங்களுக்குப் பங்கு பிரித்துக் கொடுக்கும்படி கேட்கின்றனர். ஆனால் அவர், நீங்கள் இருவரும் படிக்க வேண்டும் என்பதற்காக, வயல் வேலைக்காக அவனைப் பள்ளிக்கு அனுப்பாமல் நிறுத்தினேன். அதனால் உங்களுக்கு எந்த நிலமும் கிடையாது. மொத்தமும் அவன் பெயரில் உயில் எழுதி விட்டேன் என்று கூறினார்.

### *31. ஒரு அமாவாசை பௌர்ணமியாகிறது*

அலுவலக மேலாளராகச் சந்திரன் இருக்கின்றார். அவர் அலுவலகத்தில் காசாளராக உமா பணிபுரிகின்றாள். அலுவலகப் பணத்தைக் கையாடல் செய்கின்றாள். ஊழலை கண்டுபிடித்த சந்திரன் காலில் விழுந்து அவளைக் காப்பாத்த சொல்கின்றாள். அவனும், அவள் குடும்பச் சூழ்நிலை கருதி மேலிடத்தில் புகார் செய்யாமல் தானும் பணம் கொடுத்து உமாவை காப்பாற்றுகின்றான். மீண்டும் உமா அதே தப்பை செய்ததைக் கண்டுபிடிக்கின்றான். அதனால் அவன் மேலதிகாரிகளுக்குப் புகார் செய்கின்றான். ஆனால் உமா, சந்திரன் பொய்கணக்கு எழுத சொல்வதாக, புகார் கடிதம் அனுப்புகின்றாள். உமா கடிதத்தை எடுத்துக் கொண்டு சந்திரனை விசாரணை செய்ய வருகின்றனர். அலுவலக ஊழியர்கள் அனைவரும் சந்திரனை நினைத்துக் கவலைப்பட்டனர். அப்போது சந்திரன் யாரும் கவலைப்படாதீங்க. பொய் சொன்னவர்கள் நாய் மாதிரி திரிவார்கள் என்றும், பொல்லாதவங்க தங்களுக்குப் போடுகிற சாபம் பலிக்காமல் போகாது என்றும் நான் அவளுக்காததான் கவலைப்படுகின்றேன் என்றான்.

### 32. அவளுக்கு அவசரம்

ராஜம் திருச்சிக்குச் சென்று இருந்தாள். குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்று கணவன் கூற உடனே சென்னைக்கு வந்துவிட்டாள். அங்கு இருந்து வீட்டிற்குச் செல்ல ஆட்டோவில் அவசரமாகப் போக வேண்டும் என்றும் வேகமாகச் செல் என்கின்றாள். இது போன்று பல்லவன் பேருந்தின் ஓட்டுனர் காலதாமதமாக எடுத்து, வழியில் ஒரு பயணியிடம் தகராறு செய்துவிட்டு அடுத்து ஊருக்குச் சேர வேண்டிய நேரத்தில் சேர வேகமாக வந்து கொண்டுள்ளது. திருவான்மியூருக்கும் எழும்பூருக்கும் இடையில் டானா வடிவில் உள்ள வளைவில் சாலை பழுது வேலை பார்த்துக் கொண்டு இருந்தனர். இரவு ஆகிவிட்டதால், சிகப்புக் கொடி இரண்டு பக்கமும் கட்டிவிட்டு தொழிலாளர்கள் சென்று விட்டனர். இருட்டில் வேகமாக வந்த ஆட்டோ, சாலை வளைவில் நின்று இருந்த ரோலரில் மோதி ஆட்டோ டிரைவரும், ராஜமும் கீழே வீழ்கின்றனர். எதிர்திசையில் இருந்து வந்த பல்லவன் பஸ் வளைவில் வீழ்ந்த ராஜம் வயிறு பகுதியில் முன் சக்கரம் ஏறி நின்றது.

### 33. தோழி செய்த புரட்சி

மருதியும் பாவையும் தோழிகள். மருதியின் காதலன் சேந்தன், நாட்கள் பல ஆகியும் வரவில்லை. தோழி பாவையிடம் தன் காதலன் வரவில்லை என்பதைக் கூறுகின்றாள். அதற்குப் பாவை, சேந்தன் வேறு ஒரு பெண்ணுடன் இருந்ததாக தனது காதலன் வானவரம்பனிடம் அவன் தோழன் கழாத்தலைவன் கூறியதாக கூறுகின்றாள். அதற்கு மருதி தனக்காகக் கழாத் தலைவனிடம் தூது போகுமாறு பாவையிடம் கூறுகின்றாள். ஆனால் பாவையோ உன் காதலைப் பற்றி கேட்க, நீதான் செல்ல

வேண்டும். நான் வேண்டுமானால் உன் உடன் வருகின்றேன், உனக்கு நாணமாக இருந்தால், நானே வாதாடுகின்றேன். அப்படியும் சேந்தன் மனம் மாறவில்லை என்றால், என்னவன் வானவரம்பனை விட்டு அவன் எலும்பை உடைக்கச் சொல்கின்றேன் என்று சொன்னது மருதிக்குச் சினத்தைக் கொடுத்தாலும் சிந்திக்கவும் வைத்தது.

### 34. டபிள்யூ. கண்ணா டாக்டராகிறார்

பலவகை இயந்திரங்களை உற்பத்தி செய்யும் பிரபல கம்பெனியில் ரமேஷ் ஜூனியர் அசிஸ்டெண்டாக சேர்ந்து கொள்கின்றான். அங்குத் தலைமை அதிகாரியாக கண்ணா உள்ளார். கண்ணா தலைமையில் சூரிய சக்தியால் இயங்கும் ஜனதா வீட்டைக் கண்டுபிடிக்க, ஆய்வு கூட்டம் நடக்கின்றது. அதில் ரமேஷ் எழுந்து தன் கருத்தைக் கூறுகின்றான். அனைவரும் சிரிக்கின்றனர். கண்ணா அவனைத் தனியாக அழைத்து அவன் கருத்தைக் கேட்கின்றார். அவன் கருத்தைக் கேட்டு வியந்து அவனுக்குத் தனியறை ஒதுக்கித் தந்தார். பின்பு யாரிடமும் இந்த கருத்தைக் கூறாதே என்றும் கூறினார். அவன் கண்டுபிடிப்பைக் கண்டு வியந்த கண்ணா அப்படியே நோட்ஸ்சாக எழுதி வாங்கிக் கொண்டு இரண்டாயிரம் பணம் கொடுத்துக் குற்றாலம் சென்று வர அனுப்புகின்றார். அன்று மாலை செய்தித் தாளில் டபிள்யூ கண்ணா முற்றிலும் மாறுபட்ட சோலார் வீட்டைக் கண்டுபிடித்ததாகவும், அவருக்கு டாக்டர் பட்டம் வழங்க உள்ளதாகவும் செய்தி வருகிறது. இதைப் பார்த்த ரமேஷ் தன் மனைவியிடம் தான் கண்டுபிடித்த வீட்டை, அவன் கண்டுபிடித்ததாகப் போட்டுள்ளான். அவனை விடமாட்டேன் என்கின்றான்.

### 35. ஒரே ஒரு ரோஜா

சுப்பையா ஏழாம் வகுப்பு படிக்கின்றான். அவனது அம்மாவிற்கு குழந்தை பிறந்து இறந்ததால் உடம்பு முடியாமல் படுத்து இருந்தாள். சுப்பையாவின் அப்பா வயலுக்குக் கமலை மூலம் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு இருக்கின்றார். அதில் வலத்து மாடு படுத்துக் கொண்டது. அந்த இடத்தைச் சுப்பையா பிடித்துக் கொண்டு இழுத்துத் தண்ணீர் பாய்ச்சிவிட்டு, பள்ளிக்குக் காலதாமதமாகச் சென்றான். சுப்பையா எல்லா பாடத்திலும் முதல் மதிப்பெண் பெறக் கூடியவன். ஆனால் வறுமையின் காரணமாக பள்ளிக்குச் தினமும் சரியாக போக முடியாது. அடுத்த ஆண்டு பள்ளி திறந்து விட்டது. எட்டாம் வகுப்பு புதிய ஆசிரியர் பேப்பர் மார்க்கை படிக்கின்றார். சுப்பையா போல் அனைவரும் மார்க் எடுத்தால் நம் நாடு கல்வியில் முதல் இடத்தில் இருக்கும் என்கிறார். சுப்பையா ஏன் வரவில்லை என்று கேட்கின்றார். அதற்குப் பண்ணையார் மகன் அவனுடைய அப்பா எங்களிடம் நிலத்தைக் கொடுத்து விட்டு மரம் வெட்ட செல்கின்றார் என்றான். சுப்பையா என் அண்ணனுக்குச் சமைத்துப் போட சென்னை சென்று விட்டான் என்கிறான். அப்போது வெளியில் வகுப்பறையின் முன்னால் இருந்த ரோஜா செடியில் இருந்த பூவைக் கழுதை தின்று கொண்டு இருந்தது.

### 36. ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில்

தம்பித்துரை தனக்கு மனது சரியில்லை என்று தேவன் என்ற சைக்காட்ரிக் டாக்டரிடம் செல்கின்றான். அவர் அவனைக் கேள்வி கேட்கின்றார். அவன் தன் அலுவலகத்தில் நடப்பதையும் தன்னை நாய் கடிக்கின்ற மாதிரியும், உணவு சாப்பிட்டால்

மலத்தைச் சாப்பிடுவது போல் உள்ளது என்றும், சிறுநீரைக் குடிப்பது போன்றும் படுத்தால் குண்டூசி குத்துவது போல் உள்ளது என்று கூறுகின்றான். பின்பு டாக்டர் அவனைப் படுக்க வைத்துச் சப்கான்சியஸ் மைன்ட் மூலம் பேச வைக்கின்றார். அவன் தனக்கு நேர்ந்த கொடுமையையும், தன்னை ஏமாற்றிய காதலியைப் பற்றியும் கூறுகின்றான். டாக்டர் இவனைவிட கஷ்டப்படும் மனிதர்களின் நிகழ்ச்சிகளைச் சுட்டிக்காட்டி இவர்களை விட நீ மேலானவன் என்கிறார். இப்போது தம்பிதுரை சராசரி மனிதனாக வெளியே வருகின்றான்.

### 37. உறவுக்கு அப்பால் ...

காமாட்சியின் கணவன் தியாகராஜன் இறந்து மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டது. மோகன், வித்யா இவர்களுடைய பிள்ளைகள். தியாகராஜன் உயிருடன் இருக்கும்போது அவன் தங்கை மீனாட்சி, உன் மகளை என் மகன் ரவிக்குதான் தரவேண்டும் இல்லை என்றால், கள்ள தாலி கட்டுவேன் என்றாள். ஆனால் இப்போது வேறு மாப்பிள்ளை பார்த்துள்ளதாகவும், அதுவும் இரண்டாம் தாரமாகவும் கொடுக்கச் சொல்லி கூறுகின்றாள். உடனே காமாட்சி உன் மகளைத் தரவேண்டியது தானே என்கிறாள். வந்தவர்கள் சென்று விட்டார்கள். வித்யாவின் அப்பா உயிருடன் இருக்கும்போது ரவி அவளையே சுற்றி வந்தவன். ஆனால் இப்போது வேண்டாம் என்றும், தன் நண்பனைக் கட்டிக் கொள் என்கிறான். காமாட்சி தன் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு தன் கணவன் பணிபுரிந்த இடத்தில் அவருடன் பணிபுரிந்த நண்பர்கள் அழைத்ததால் குடும்பத்துடன் டெல்லிக்குச் சென்று விடுகின்றாள்.

## 38. நூலிழையில் ஒரு பந்தம்

மாடசாமி தன் பெரிய மகன் வைரமணிக்கு லிங்கம்மா என்ற பெண்ணைத் திருமணம் செய்து வைக்கின்றார். திருமணம் முடிந்த உடன்தான் தெரிகிறது அவள் மனவளர்ச்சியில்லாத பெண் என்று. அதனால் வைரமணி தற்கொலைக்கு முயற்சி செய்கின்றான். மருத்துவர் மூலம் காப்பாற்றப்படுகின்றான். தன் தந்தை உடல்நிலை சரியில்லாமல் இருப்பதால் அவருக்குத் துணையாக இருக்க லிங்கம்மாவை வீட்டில் விட்டுச் செல்கின்றனர். ஆனால் அவர்கள் வீட்டிற்கு வரும்போது மாடசாமி இறந்து கைகால்கள் விரைத்து கிடந்தார். இவள் மேல் கூரையைப் பார்த்துக் கொண்டு இருந்தாள். அவளை அப்பன் வீட்டில் கொண்டு விட முடிவு செய்து அனுப்பிவிட்டனர். இரண்டாவது திருமணத்திற்கு முடிவு செய்து, அந்த திருமணத்தில் பெண்ணிற்குத் தாலி எடுத்துத் தர இவளைக் கூப்பிடுகின்றனர். அப்போது அவள் அடிபட்ட ஒரு பூனைக் குட்டிக்குக் கட்டுப்போட்டு தடவிக் கொடுத்துக் கொண்டு இருந்தாள். அதைப் பார்த்த வைரமணி காலமெல்லாம் இவள் கூடதான் வாழணும் என்று முடிவு செய்து தனக்குப் பார்த்த பெண்ணைத் தன் தம்பி கனகராஜீக்கு மணம் முடித்து வைத்தான்.

## 39. காகித உறவு

மாடசாமி சென்னையில் வேலை பார்க்கின்றான். லோன் போடும் விண்ணப்பத்தில் எதற்காகப் பணம் தேவை என்ற காலத்தில், தன் தந்தை உயிரோடு இருக்கும்போதே இறந்ததாக எழுதி, பணம் பெறுகின்றான். உண்மையாக அவன் தந்தை இறந்து விடுகின்றார். கிராமத்திற்குச் சென்ற இவன், தன் சிறிய

தாயையும் தங்கையையும் உடன் அழைத்து வருகின்றான். மாடசாமி மனைவி வீட்டில் இருந்த வேலைக்காரியை வேலையை விட்டு நிறுத்தி விடுகின்றாள். மருமகளிடம் தகராறு ஏற்பட்டு ஊருக்குச் சென்று விடுகின்றனர். இப்போது அவன் தங்கை தன் திருமணத்திற்கு வரும்படி கடிதம் அனுப்புகிறாள். அதில் நீ படிக்க வேண்டும் என்பதற்காக என் படிப்பை நிறுத்தியவள் என் அம்மா, நீ இருக்காய் என்று ஆண்பிள்ளை வேண்டாம் என்றவள். ஆனால் நீயோ எங்களுக்கு உணவளிக்க கணக்குப் பார்த்தாய் என்றும், என் திருமணத்திற்கு வந்தால், போகும்போது பஸ் செலவுக்கும் பணம் தருவதாகக் கடிதம் எழுதி இருந்தாள். இதைப் பார்த்த மாடசாமி அடுத்த லோன் போட தடுமாறியவன் தன் தங்கை திருமணத்திற்குப் பணம் வேண்டும் என்று எழுதி தன் மகளுக்கு நகை எடுக்கின்றான்.

## 40. குடிக்காத போதை

அந்த ஊரில் காளிமுத்து சாராயம் காய்ச்சி, விற்கும் தொழிலில் கொடிகட்டிப் பறந்தவன். அதே கிராமத்தைச் சேர்ந்த மூர்த்தி கல்லூரி வரை படித்தவன். காவல் அதிகாரி, தாலுக்கா அதிகாரிகள் கலந்து கொண்ட ஊர் பொதுக்கூட்டத்தில் மதுவிலக்கைப் பற்றி பேசி காளிமுத்து தொழிலைச் சரியச் செய்தான். அத்துடன் இல்லாமல் தனக்குப் பாதுகாப்பு வேண்டும் என்று ஆட்சித் தலைவரிடம் மனு கொடுத்தான். அதனால் காவல் துறையினர் காளிமுத்துவைக் கூப்பிட்டு மூர்த்திக்கு ஏதாவது நடந்தால் நீதான் பொறுப்பு என்று கூறியபின்பு அவனைப் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் அவனுக்கு வந்தது. தன் வியாபாரம் நொடித்ததால் என்ன செய்வது என்று புரியாமல் இருந்தான். பக்கத்து ஊர் சென்று தன் சகாக்களிடம் மூர்த்தி

அப்பா, தம்பிகளுக்குச் சாராயம் தராதீர்கள் என்று காதைக் கடித்துவிட்டு வந்தான். அதனால் மூர்த்தி, அப்பா, தம்பி இங்கு வந்தனர். காளிமுத்து சாராயம் தர மறுத்து உன் மகனை அடக்கிவை அப்போது தருகின்றேன் என்று கூறிவிட்டான். குடிக்காமல் அவர்களுக்குப் போதை ஏறி வீட்டிற்குச் சென்று இருவரும் மூர்த்தியை நையப்புடைத்தனர். அவன் இப்போது எங்கோ ஓடிவிட்டான். காளிமுத்து வியாபாரம் கொடிகட்டி பறக்கின்றது.

### 41. அசைக்க முடியாது

பெருமாள்சாமி வங்கிக் கடன் கேட்டு மானேஜரிடம் செல்கின்றார். அவர் பணமாக தரமுடியாது. உனக்கு மாட்டு லோன் தருகின்றோம். மாடு வாங்க வெட்னரி டாக்டர் வருவார் அவருடன் சென்று வாங்கிக் கொள் என்றார். பெருமாள்சாமி, டாக்டருடன் ஒவ்வொரு மாடாகப் பார்க்கின்றனர். எல்லா மாட்டையும் பெருமாள்சாமி குறை கூறுகிறார். கடைசியாகச் சந்தையில் உள்ள ஒரு ஜோடி மாட்டைக் காட்டி இதை வாங்கிக் கொள்கின்றேன் என்றார். உடன் வந்த டாக்டரும் அதிகாரியும் ஒத்துக் கொண்டு பணம் கொடுக்கின்றனர். பெருமாள்சாமி தனது மாடுகளையே சந்தைக்கு இன்னொருவர் மூலம் அனுப்பி வாங்கிக் கொண்டார் என்பது உடன் வந்த அதிகாரிகளுக்குத் தெரியாது.

### 42. சமூகப் புயலில் ஒரு காதல் கூடு

கண்ணன் கட்டு மரத்தின் படகு மூலம் கடலில் மீன் பிடிக்கச் செல்பவன். பெரிய பணக்காரன் முனுசாமியிடம் முதலில் வேலை பார்த்தான். அப்போது காதலித்த அவர் மகள் மச்சகாந்தியை விட்டுப் பிரிக்கின்றான். ஆனால் முனுசாமி தன் மகள் மச்சகாந்தியிடம் அவன் கீப் வீட்டிற்கு உன்னை ஏமாற்றி

சென்று விட்டான் என்றும், உன் காதலை ஏமாற்றி சென்றதால் கடல் கண்ணியம்மா அவளைத் தண்டிப்பாள் என்று கூறி இவளுக்கு வேறு இடத்தில் திருமணமும் செய்து வைத்து விடுகின்றான். ஊர் திருவிழாவிற்கு வந்த மச்சகாந்தி ஒரு கால் இழந்து நிற்கும் கண்ணனைச் சந்தித்து பேசும்போதுதான் தன் தந்தையால் அவன் கால் போனது என்பதும் தெரிகின்றது.

### 43. கண் கெட்ட பின்னே

உமா மிகவும் ஆடம்பர வாழ்க்கைக்கு ஆசைப்பட்டவள். தன் சிநேகிதியின் கல்யாண நாளுக்குச் செல்ல வேண்டும் என்று சம்பத்திடம் சொல்கின்றாள். சம்பத் எனக்கு உடம்பு சரியில்லை என்று கூறியும் விடாமல் அழைத்துச் சென்றுவிட்டாள். மறுநாள் இதே போன்று ஒரு நிகழ்ச்சி அதற்கும் அழைத்துச் சென்றாள். ஒரு வாரம் கேம்ப் போய்விட்டு உடல்நிலை சரியில்லாமல் வந்த சம்பத்திடம் நம்ம கல்யாண நாளைக் கொண்டாட ஏன் வரவில்லை என்று வாதம் செய்து அதையும் தனது தோழிகளுடன் சேர்ந்து கொண்டாடுகின்றாள். சம்பத் மருத்துவரிடம் சென்று சிகிச்சை பெற்று வந்தான். அத்துடன் இல்லாமல் ஒரு வாரம் ஓய்வு எடுக்க வேண்டும் என்றும் கூறினான். ஆனால் உமா மாதர் சங்கத்திலே என் தலைமையில் காஷ்மீர் டூர் போறோம், நீங்களும் வரவேண்டும் என்றாள். அவன் எவ்வளவு கூறியும் கேட்காமல் அழைத்துச் செல்கின்றாள். ஊர் சென்று திரும்பி வரும்போது ரத்தம் ரத்தமாக வாந்தி எடுக்கின்றான். சம்பத்தை மருத்துவமனையில் சேர்த்து, மூன்று நாட்களாகச் சாப்பிடாமல் கூட கண்விழித்து உமா கண்ணீர் விட்டுக் கொண்டுள்ளாள்.

### *44. சனிக்கிழமை*

கோபால் கல்லூரியில் படிக்கும்போதே சனிக்கிழமை விடுமுறை வேண்டும் என்று முதல்வரிடம் தகராறு செய்தவன். இப்போது தாலுக்கா அலுவலகத்தில் எழுத்தராகப் பணிபுரிகின்றான். அன்று வெள்ளிக்கிழமை. தாசில்தார் முன்னால் பைலை வைத்துவிட்டு நகரப் போன கோபாலைப் பார்த்து, கலெக்டருக்கு அனுப்ப வேண்டிய விவரம் ஏன் அனுப்பவில்லை. எனக்கு மூன்று ரிமைண்ட் லெட்டர் அனுப்பி விட்டார் என்றார். அதற்குக் கோபால் யாரும் இன்னும் விவரம் தரவில்லை என்றான். அதற்குத் தாசில்தார் நாளை வந்து வேலையை பார் என்றார். அதற்கு அவன் நாளை இரண்டாவது சனிக்கிழமை என்றான். எனக்குத் தெரியாதா நீ சொல்கிறாயா? என்றதுடன் நீ வருகின்றாயா, நான் வரவழைக்கணுமா என்றார். 'சனிக்கிழமை' புகழ் பெற்ற கோபால் கல்லூரி தேர்தலில் வாக்குறுதி வழங்கிய கோபால் படித்த வாழ்க்கையுடன் இந்த பாழும் வாழ்க்கையை ஒப்பிட்டு பார்த்தான். அப்போதுதான் கல்லூரி முதல்வர் பேசுவது போல் தோன்றியது.

### 45. பண்டாரம் படுத்தும் பாடு

அலுவலகப் பணத்தை வட்டிக்கு விடுவது பண்டாரத்தின் வேலை. இதை மேல் அதிகாரிக்கு மொட்டை பெட்டிசன் போட்டனர். விசாரணைக்காக தேஷ்முக் கடுவன் வந்தார். பெட்டிச் சாவியை வாங்கிப் பணத்தை எண்ணிப் பார்த்தார். அப்பொழுது பண்டாரம் பாத்ரூம் போய் வருவதாக கூறி கால தாமதமாக வந்தார். பணம் குறைவதாக தேஷ்முக் கூறினார். ஆனால் பண்டாரம் என் பணத்தை நீங்கள் தான் எடுத்துக் கொண்டீர்கள்.

காவல் நிலையத்தில் புகார் கொடுப்பதாக கூறினான். மேலதிகாரிக்குப் புகார் கூறப்பட்டது. வந்தவர் வருத்தம் தெரிவித்து சென்றார். மீண்டும் கிருபாகரன், பண்டாரம் பொய் கணக்கு எழுதி பணம் எடுத்ததாக புகார் அனுப்புகின்றான். விசாரணை அதிகாரியை வரும்போது மாறுவேடத்தில் சென்று பண்டாரம் அனைத்து செலவையும் கவனித்துக் கொள்கின்றேன். விசாரணைக்கு வந்த படேசிங் பண்டாரத்தைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தார். உங்களுக்குச் செலவு செய்வதற்கு ஆதாரம் உள்ளது. நீங்க அதை விட்டுடுங்க. நான் இதை விட்டுடுறேன் என்றார். இவன் தப்புக்கு ஆதாரம் இல்லை என்றும் புகார் தந்தவர் மீது நடவடிக்கை எடுக்கலாம் என்று கூறி சென்றார்.

### 46. கதை இல்லாத நாயகி

சந்திரன் இயக்கும் நாடகத்தில் கதாநாயகி வேடம் போட்டவள் தமிழ்ச்செல்வி. அதுவும் புரட்சிகரப் பெண்ணாக, ஆனால் இப்போது இவள் திரைப்படத்தில் நடிக்கப் போகின்றோம் என்ற ஆவலில் உள்ளாள். ஆனால் தயாரிப்பாளர்கள் இவளைப் போட்டால் படம் ஓடாது என்று கூறி மஞ்சு என்ற நடிகையைப் போடுகின்றனர். இதைப் பார்த்த தமிழ்ச்செல்வி அம்மா, சந்திரனை மிகவும் கடுமையான வார்த்தைகளால் திட்டிச் செல்கின்றாள். தமிழ்செல்வியின் ஆசை நிராசையாக ஆகிறது.

### 47. புலித்தோல் போர்த்திய மாடுகள்

மயில்நாதன் ஓர் எழுத்தாளர். அவர் எழுதிய 'மனிதபங்கம்' என்ற நாவலைத் திரைப்படமாகத் தயாரிக்கப் போகின்றோம் என்றும் உங்களை இயக்குனர் அழைத்தார் என்றும் காளிங்கன் அழைத்துச் செல்கின்றான். இயக்குனர் அரூப சொருபனுக்காகப்

பல மணி நேரம் காத்திருந்தனர். நடிகர் சந்திரபிரம்மனும், இயக்குனரும், நாவலாசிரியரிடம் கதை கேட்கின்றனர். மயில்நாதன் மலை கிராம மக்களுக்கு இழைக்கப்பட்ட உண்மையான சம்பவத்தைக் கூறுகின்றார். ஆனால் இருவரும் கதையைக் கேட்டு விட்டு, கதை சினிமாவுக்கு ஏற்றபடி மாற்ற வேண்டி அவர்கள் புதிய கோணத்தில் சொன்னார்கள். ஆசிரியர் மயில்நாதனுக்குக் கோபம் வந்து தான் வாங்கிய முன்பணம் பத்தாயிரத்தை அவர்களிடமே திரும்பக் கொடுத்துவிட்டு வெளியேறினார்.

**48. அர்த்தமுள்ள பார்வை**

மீசைக்காரர் தன் முதலாளி வீட்டு நாயைக் கடைக்கு அழைத்து வந்தார். அப்போது அங்கு விளையாடிய இரண்டு தெரு நாய்கள் அதைக் கவனித்தது. உடனே அதில் உள்ள பெண் நாய் இதன் பக்கம் வந்து தன் வாலை ஆட்டி உனக்கு அடக்கம் என்பது போது தனது வாலைப் பின்னங்காலுக்கு இடையே விட்டது. இதைப் பார்த்த மீசைக்காரன் தெரு நாயுடன் என்ன பழக்கம் என்று தடியால் அடிக்க இதை அந்த வழியே வந்த முதலாளியம்மா பார்க்க, மீசைக்காரரைக் கூப்பிட்டு நாயைக் காரியரில் ஏற்றிக் கொண்டார். பின்பு மீசையைப் பார்த்து நீ இனிமே வீட்டுபக்கம் வரக்கூடாது. அப்படி வந்தால் போலீஸ் பக்கம் போக வேண்டி இருக்கும் என்று கூறிச் சென்றார். அந்த பெண்தெரு நாயானது இவரை ஒரு மாதிரியாகப் பார்த்தது.

**49. அண்ணன் வரட்டும் சொல்கிறேன்**

சண்முகம் கல்லூரிப் படிப்பை முடித்துச் சென்னையில் வேலை தேடச் சென்றான். அங்குச் சித்தி வீட்டில் தங்கி இருந்தான்.

அவன் அப்பா சண்முகத்துக்கு வேண்டிய பணத்தைச் சித்தி மகளிடம் வாங்கிக்கச் சொல்லி கூறிவிட்டார். அதனால் மிகவும் சிரமப்பட்டுதான் காசை செலவழிக்க முடியும். தன் சித்தி குடியிருக்கும் வீட்டின் முதலாளி மகள் மாலதிக்கு இவன் மீது ஒரு கண். ஒரு நாள் சித்தி வீட்டில் இல்லாதபோது அங்குச் சென்றபோது நாற்காலி போட்டு உட்காரச் சொன்னாள் மாலதி. உடனே அவன் கடைக்குச் சென்று ஒரு பேப்பர் வாங்கி காதல் கடிதம் எழுதிக் கொடுத்தான். அவ்வளவுதான் மாலதி அதைப் படித்து பார்த்துவிட்டு, என் அண்ணன் வரட்டும் சொல்கின்றேன் என்றாள். அன்று போனவன்தான் இரண்டு நாள் வீட்டுப் பக்கம் வரவில்லை. காதல் விவரம் சித்தியின் மகளுக்கும் தெரிந்து விட்டது. மீண்டும் சித்தி மகள் உடன் சண்முகம் வீட்டுக்கு வரும்போது மாலதி சண்முகத்திற்குச் சொல்வதுபோல் தன் அண்ணன் மகனிடம் அடித்தாலும் நான்தான்டா அடிப்பேன் என்று கூறிச் சிரித்துவிட்டு சென்றாள்.

### 50. உடன் பிறவா உறவுகள்

ராமன் சென்னையில் லாட்ஜ் ஒன்றில் பியூனாக வேலை பார்க்கிறான். அவன் மனைவியும் குடும்பமும் திருநெல்வேலியில் உள்ளது. லாட்ஜ் மானேஜர் இவனைக் கூலி இல்லா வேலைக்காரனாகப் பயன்படுத்திக் கொள்கின்றார். ராமன் மனைவி ஊருக்கு வரும்படியும் கடிதம் எழுதி இருந்தாள். அதில் கடைசியாக நான் இருக்கும்போது வரவில்லை என்றாலும், இறந்த பின்பாவது வந்துவிடு என்று எழுதி இருந்தாள். எப்படியும் இந்த முறை ஊருக்குச் செல்லலாம் என்று விடுப்புக் கேட்டான். கொஞ்சநாள் பொறுத்துக் கொள். போகலாம் என்று கூறி தன் உறவினர்களை அழைத்து வரும்படியும் கூறினார். ஒருநாள் ராமன்

எம்.டி. வீட்டிற்குப் பெயிண்டிங் வேலை செய்ய சென்றபோது தன் நிலையைக் கூறி மாறுதல் கேட்டான். அவரும் சரி என்று கூறிவிட்டார். இதை ராமன் மேனேஜர் இடம் கூறியதும், இவன் போனால் நமது மகள் கல்யாணத்தைக் கவனிக்க ஆள் கிடையாது என்று எண்ணி, எம்.டி. இடம் சென்று சார் அவன் ஒரு மாதிரி. அதனால் அவனைத் திருநெல்வேலி அனுப்ப வேண்டாம் என்றும், கூறிவிட்டு, ராமனிடம் வந்து எம்.டி. கோபித்துக் கொண்டார். உன்னைப் பொறுமையாக மாற்றலாம் என்று கூறிவிட்டார் என்றான். ராமன் மேனேஜர் மகளின் கல்யாண வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

**51. வாய்தா**

இருளப்பன் தாயார் காட்டிற்குச் சென்று மாட்டிற்குப் புல் அறுத்து வருகின்றார். அப்போது மேலத் தெரு மாசிலாமணி, தன் தோட்டத்தில் முருங்ககாய் அறுத்துவிட்டதாகக் கூறி இருளப்பன் வீட்டிற்குச் சென்று அவன் அம்மாவை அடித்து விடுகின்றான். இதைப் பார்த்த இருளப்பன் அரிவாளை எடுத்துக் கொண்டு வெட்ட ஓடுகின்றான். அவன் பயந்து ஓடுகின்றான். போலீஸ் வரும் என எதிர்பார்த்தவனுக்குக் கோர்ட்டில் இருந்தும் சம்மன் தான் வந்தது. மாசிலாமணியைப் பார்த்து ஊர் வழக்குக்காகச் சென்றபோது, மரியாதை குறைவாகத் திட்டியதாக பத்தாண்டுகளாகக் கோர்ட்டுக்கு நடக்கின்றான். வழக்கு முடிந்த பாடு இல்லை. ஒவ்வொரு பொருளாக விற்று வக்கீலுக்குக் காசு கொடுக்கின்றான். இந்த முறை வழக்கை முடிப்பதாக நீதிபதி கூறி இருந்தார். ஆனால் இந்த முறையும் மாசிலாமணி வரவில்லை. அதனால் வழக்கை அடுத்த தேதிக்கு மாற்றி நீதிபதி வாய்தா கொடுத்தார்.

## 52. இரையும் இறையும்

காகம் ஒன்று போண்டாவைத் தூக்கிக் கொண்டுவரும்போது வழியில் இரும்புக் கம்பியில் மாட்டி தன் இறக்கை பறக்க முடியாதபடி சேதம் அடைந்துவிட்டது. அதனால் பறக்க முடியாமல் தரையில் தத்தித்தத்தி செல்கின்றது. இதைப் பார்த்த பூனை ஒன்று அதன் பின் தொடர்கிறது. ஒரு கடையில் அடைக்கலமாகிறது. அந்த நேரத்தில் கடை முதலாளி வந்து, காக்காவை பார்த்துவிட்டு சனியனே ஏண்டா உள்ளே விட்டே என்று தூக்கி வெளியே எறிகின்றார். பூனை எதிர்பார்த்தது போல் காகம் வெளியே வந்து வீழ்ந்தது. காகம் உடனே தன் முழு சக்தியையும் பயன்படுத்தி பறக்க முயற்சித்து பக்கத்தில் இருந்த வைக்கோல் போரில் வீழ்கின்றது. பூனையும் பாய்ந்தது. சிறிது நேரம் கழித்து காகம் கண்விழித்து பார்த்தபோது, பைக் சக்கரத்தில் மோதி சதைப் பிண்டமாகக் கிடந்தது. காகம் அதன் தலை மீது நின்று கொத்தோ கொத்தேன்னு கொத்தி சதையைத் தின்னவில்லை.

## 53. ரசாயனப் பரீட்சை

சங்கரன் அலுவலகம் முடிந்து வீட்டுக்கு வரும் வழியில் ஒரு இலக்கியக் கூட்டம் நடக்கிறது. அதில் திருக்குறளில் இன்பத்துபால் பற்றிய பேச்சு, பேசப்பட்டது. அதில் நேரம் போனதே தெரியாமல் இரவு பத்து மணி ஆகிவிட்டது. வீட்டிற்கு வந்தால் கமலா கதவைத் திறக்காமல் கோபித்துக் கொள்கின்றாள். அவளை சமாதானப்படுத்தும்போது அவள் பக்கத்து வீட்டு பெரியவர் உங்களுக்காகக் காத்து இருந்துவிட்டு சென்றார் என்றாள். ஏன் என்று சங்கரன் கேட்க, அதற்கு கமலா, தனது மகளுக்குப் பெரிய இடத்தில் சம்மந்தம் பேசியுள்ளாராம் அதற்குப்

பணம் கேட்க வந்தார் என்றாள். அவரால் எப்படி சமாளிக்க முடியும் என்று சங்கரன் கேட்டான். அதற்கு அவள் அண்ணன் வெளிநாட்டில் சம்பாதித்துள்ளான் என்றாள். சங்கரன், நானும் வெளிநாடு போகட்டுமா என்று கமலாவிடம் கேட்க, அவன் எதிர்பார்த்த பதில் வராமல் குழந்தைகளுக்காகச் சென்று வாருங்கள் என்று கூறிவிட்டாள். சங்கரனுக்கு ஒன்றும் புரியவில்லை. டூர்போனபோது ஒருநாள் அதிகமாக சென்று விட்டது. மறுநாள் அவன் வந்தவுடன், இதற்குத் தான் என்னைத் திருமணம் செய்தீங்களா என்றும், உங்களைப் பிரியேன், பிரிந்தால் உயிர் தரியேன் என்றவள், இப்படி சொல்கின்றாளே அதனால் குடும்ப உறவையும் ரசாயன பரிட்சைக்கு உட்படுத்த வேண்டும் என்று எண்ணுகின்றான்.

***54. லாரிச் சிங்கி***

குறவர்கள் குரங்கு பிடிப்பதற்கு ஊர்விட்டு ஊர் வந்துள்ளனர். அந்த குறவர்களில் செங்கோடன் தான் தலைவன். அவன் மனைவி லாரி சிங்கி ஆவாள். ஒரு குரங்கு பிடித்தால் ரூ.3.50 வீதம் ஊர் தலைவரிடம் பேசி குரங்குகளைப் பிடித்து கூண்டில் அடைத்து வைத்துவிட்டு மலைப்பகுதிக்கு ஆண்குறவர்கள் செல்கின்றனர். தாய் குரங்கு ஒன்று தன் குட்டியைப் பிரிந்த சோகத்தில் கூண்டின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டு அழுகின்றது. இதைப் பார்த்த லாரிச்சிங்கிற்குத் தன் முதல் மகன் இறக்கும்போது தன் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டிருந்தது நினைவிற்கு வர, கூண்டின் அருகே சென்று குட்டி குரங்கை மட்டும் தனியாகப் பிரித்து வெளியே கொண்டுவர முயற்சித்தாள். தாய்க்குரங்கு அவளைக் கடிக்க அனைத்துக் குரங்கும் வெளியே வந்து விடுகிறது. மலை உச்சியில் இருந்து

இதைப் பார்த்த செங்கோடன் கீழே வருகின்றான். அதற்குள் அவள் தன் குழந்தையை அங்கேயே விட்டுவிட்டு அவர்களுக்குப் பயந்து ஊரைவிட்டே ஓடி விடுகின்றாள்.

### 55. கதையைக் கேளுங்க ...

குமார் ஒரு கதாசிரியன். தான் ஒரு சிறுகதைக்குப் பிளாட் வைத்துள்ளதாகவும், யாரும் கேட்கவில்லை என்றும் வருத்தப்பட்டான். மெரினா கடற்கரைக்கு வந்தான். அப்போது சினிமாத் துணை நடிகர் ஆனந்தசாமி அங்கு வந்தான். அவனிடம் தன் கதையைக் கூறினான். உங்கள் கதைக்குச் சாகித்திய அகாதெமி பரிசு கிடைக்கும் என்றான். குமார் கதையை எழுதி அவனிடம் காட்டினான். அதைப் பதிப்பகத்திற்கும் அனுப்பினான். ஆனால் உதவியாசிரியர் இந்தக் கதையைப் படித்துவிட்டு, தலைமை ஆசிரியரிடம் அண்ணே இது ஆனந்தசாமியின் 'கள்ளக்காதல்' படத்தின் கதை. திருட்டுப் பயல் குமார், அதைக் காப்பியடித்து அனுப்பி உள்ளான். அதனால் அங்கு இருந்த சில சிறுகதைகளையும் சேர்த்து, குமாருக்குத் திரும்ப வந்துவிட்டது. குமார் எழுதுவதையே இப்போது நிறுத்தி விட்டான். ஒருநாள் ஆனந்தசாமி எதிர்பட்டான். அப்போது குமாரிடம் உனக்குப் பரிசு கிடைக்காததால் நான் என் பெயரை மாற்றிக் கொண்டேன். இப்போது என் பெயர் 'டைரக்டர் மகிழ்நாதன்' என்றான்.

### 56. இது பொதுவழி அல்ல ...

காத்தமுத்து டீ கடையில் சேரிவாசியான சங்கிலி கருப்பன் மசால் வடையையும், டீயையும் குடித்துக் கொண்டிருந்தான். அப்போது ஊர்த் தலைவர் அங்கு வந்து, சங்கிலி கருப்பனிடம் நம்ம ஊருக்கும் பக்கத்து ஊருக்கும் தகராறு. அதனால் வயலுக்குச்

செல்ல சுற்றி வரவேண்டியுள்ளது. உங்கள் சேரிவழியாக போனால் பக்கம். பாதையில் உன் வீடு உள்ளது. அதை இடித்து தா, பணம் தருகின்றோம். வீட்டைப் பக்கத்தில் கட்டிக் கொள் என்றார். அவனும் அதுபோல செய்தான். சங்கிலி கருப்பனின் மருமகனும் அவன் சித்தப்பாவும், காத்தமுத்து கடையில் டீ சாப்பிட வருகின்றனர். பெஞ்சின் மேல் உட்காரச் சொல்லி டீ தருகின்றான். அங்கே சங்கிலிகருப்பன் வந்தவுடன் அவர்கள் யார் என்று தெரிந்ததும் காத்தமுத்து அவர்களை சட்டையைப் பிடித்து வெளியில் இழுத்து விடுகின்றான். இதை யாரும் கேட்கவில்லை. பஞ்சாயத்துத் தலைவரும் எப்படிடா மேலே உட்கார்ந்து டீ குடிக்கலாம் என்று சங்கிலி கருப்பனைத் தான் குறை சொன்னார். சங்கிலி கருப்பன் மைத்துனன் இதை என்னிடம் விடுங்கள். நான் பார்த்துக் கொள்கின்றேன் என்று கூறியதுடன், வழியையும் இரவோடு இரவாக அடைத்துவிட்டான். ஊர் பெரியவர்கள் சேரிக்கு வந்தனர். அப்போது சங்கிலி கருப்பன், உட்காரும் விவகாரமும், தனி வட்டா கப்பிலே டீ குடிக்கிற விவகாரமும் தெரிந்த பின்தான் 'இது பொதுவழி' என்றான்.

### 57. தாய்மை

வசந்தி கிராமத்திலிருந்து சென்னையில் இருக்கும் பெரியப்பா ராமசாமி வீட்டிற்கு வருகின்றாள். அனைவரும் குடும்பத்துடன் மெரினா பீச்சிற்குச் செல்கின்றனர். அங்கு மோகனிடம், வசந்தி நேரம் கேட்கின்றாள். உடனே மோகன், தனியாக போகலாமா என்கிறான். இதை உடனே தனது பெரியப்பாவிடம் செல்கின்றாள். மோகனைத் தேடி குடும்பத்துடன் அலைந்து, கடைசியில் வசந்தி சொன்ன அடையாளத்துடன் இருந்த அவனை அடிக்க போகின்றனர். அவள் இவன் இல்லை

என்று காப்பாற்றுகின்றாள். அந்த அடி இவளுக்கு வீழ்கின்றது. உடனே பஸ் ஏறி வீட்டிற்கு வருகின்றனர். மோகன் பஸ் ஸ்டாப்பில் நின்று அவளையே பார்த்துக் கொண்டுள்ளான். அவள் இவன் முகத்தைப் பார்த்துத் துப்புவது போல் வெளியே துப்பிவிட்டு செல்கின்றாள். அவள் தாய்மை உள்ளத்தை நினைத்து அவள் போன திசையை நோக்கி இருகரங்களையும் குவித்துக் கும்பிடுகின்றான்.

### 58. புதிய விதைகள்

மாடசாமியின் மகன் வேலாயுதம் ஏழாவது படித்துக் கொண்டிருந்தான். அவன் புது சட்டை கேட்கும் போதெல்லாம் பொங்கல், தீபாவளி, வருட பிறப்பு வரட்டும் என்பார். இப்போது அம்மங் கொடைக்குப் புதிய துணி கேட்க, கடன் வாங்க அன்னம்மாள் வீட்டிற்குச் சென்றான். அங்கு அவள் பணம் தராமல், தன் மகன் ராஜதுரை சட்டையைத் தருகின்றாள். அதை வேலாயுதத்திடம் தருகின்றான். அனைவரும் கோவிலுக்கு வருகின்றார்கள். அப்போது வேலாயுதம், ராஜதுரையை வாடா விளையாடலாம் என்று கூப்பிடுகின்றான். டா போட்டு கூப்பிட்டதால் கோபம் கொண்ட ராஜதுரை இவனை அடிக்க வருகின்றான். பதிலுக்கு அவனும் அடித்து விடுகின்றான். அடிக்க வந்த அன்னம்மாள் கையையும் பிடித்துக் கொள்கின்றான். என் சட்டையைக் கழட்டிக் கொடுடா என்கிறான் ராஜதுரை. உடனே கழட்டிக் கொடுத்து விட்டு இசக்கி கொடுத்த துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு செல்கின்றான்.

### 59. திரிசங்கு நரகம்

குப்புசாமி தன் மாமன் மகள் சொன்னதற்காகப் பக்கத்து ஊரில் வந்து கடைபோட்டுள்ளான். அங்கு ஒரு கொலை

நடக்கின்றது. கொலையாளியைக் குப்புசாமி மருத்துவமனைக்குத் தூக்கிச் செல்லும்போது வழியில் இறந்துவிடுகின்றான். அதனால் காவல் நிலையத்தில் அவனைச் சாட்சியாக வைத்துக் கொண்டு யார் கொலை செய்தது? என்று கேட்கின்றனர். அப்போது கொலையாளி வந்து உண்மையைச் சொன்னா உன்னை கொன்று விடுவேன் என்கிறான். கொலைபட்டவன் குடும்பத்தில் உள்ளவர்கள் நடந்த உண்மையைச் சொல்லவில்லையென்றால், அவனை கொல்லாமல் விட்டாலும் விடுவோம் உன்னை விடமாட்டோம் என்றனர். காவல் நிலையத்தில் உண்மையைச் சொல்லச் சொல்லி அடிக்கின்றனர். கடையைச் சாத்தி விட்டு வருகின்றேன் என்றும், இனி நான் என் உயிரைக் கொடுத்தாலும் கொடுப்பேனே தவிர, தலை மறைய மாட்டேன் என்று கூறிச் சென்றவன், கடையின் உள்ளே குப்புசாமி தூக்கில் தொங்கிக் கொண்டிருந்தான்.

**60. கலைக் கள்ளன்**

பிரபல நடிகரும், இயக்குநருமான கலைக்கண்ணன் அவர்களுக்குப் பாராட்டுவிழா, அரசியல் தலைவர்கள் முதல் திரைப்பட நடிகை, நடிகர், வி.ஐ.பிக்கள் அனைவரும் வந்து வாழ்த்து தெரிவித்தனர். அவனுடைய திரைப்பட கதையைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்கள். ஆனால் வேலாயுதம் மட்டும் எப்பொழுது நேரம் கிடைக்கும், அவனைக் கத்தியால் பதம் பார்க்க வேண்டும் என்று திட்டம் போட்டுக் கொண்டு இருந்தார். ஏன் என்றால், அவர் எழுதிக் கொடுத்த கதை, இவர் தன் சொந்தக் கிராமத்தில் நடந்தவையும், தன் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளை எழுதி கொடுத்தவர், பலமுறை சென்று என்னுடைய கதைகளைத் தந்துவிடு என்று கேட்டும், அவன், இந்த

குப்பையில் எங்கே தேடுவது என்று கூறியவன், இப்போது கலைக்கண்ணன் மேடையில் பேசவந்தான். வேலாயுதத்தைப் பார்த்துவிட்டு, குனிந்து கும்பிடு போட்டான். வேலாயுதம், கதைக்களம் படைத்த கைக்குக் காப்பு வேண்டாம் என்றும், இந்த வெற்றி உண்மையில் என் கதையமைப்பிற்கும், உரையாடலுக்கும் கிடைத்த வெற்றி என்று எண்ணி வெற்றி நடைபோட்டார்.

### 61. நாணயம்

கோவிந்தன் சினிமாவில் நடிக்கும் ஆசையில் சென்னைக்கு வந்து மூட்டை தூக்கும் தொழிலைச் செய்து வருகின்றான். மாதம் இருபது ரூபாய் அம்மாவுக்கு பணம் அனுப்பி விடுவான். இந்த முறை பணம் அனுப்பும்போது நண்பர்கள் சினிமாவுக்குக் கேட்டனர். தரமறுத்து அவர்களுடன் சண்டை போட்டு விட்டான். பஸ்ஸில் மூட்டை ஏற்றும்போது பால் கேன் அவன் காலில் விழுந்து எலும்பு முறிவு ஏற்பட்டு நடக்க முடியாமல் நடந்து வருகின்றான். பசி அவனைத் துன்புறுத்துகின்றது. தனது பையில் வைத்திருந்த பழைய லாட்டரி சீட்டைத் தோசை விக்கும் பாட்டியிடம் கொடுத்து, காசு வாஙகுகின்றான். அந்த பாட்டி, பணம் விழுந்தால் உனக்கும் பத்தாயிரம் தருகின்றேன், நீ தெய்வம் மாதிரி என் கண்ணுக்குத் தெரியுறடா என்றாள். பாட்டியின் பேச்சைக் கேட்ட கோவிந்தன் பசியில் செத்தாலும் பரவாயில்லை, பாட்டி பாவம் என்று காசை அவள் முன் போட்டு விட்டு நடந்தான்.

### 62. ஒரு யானையின் காதல்

அதிகாரியை வரவேற்க யானைகள் வரிசையாக நிறுத்தப்பட்டுள்ளன. வந்த அதிகாரிக்கு யானைகள் வணக்கம்

தெரிவிக்கின்றன. அதில் ஒரு பெண் யானை தன் காதலன் காட்டு யானையைப் பார்க்கச் செல்கின்றது. காடு, மலை மீது ஏறி கடைசியில் கண்டுபிடித்து காதல் மொழி பேசுகின்றன. மனித காதலை விட நம் காதல் மேலானது என்று கூறி ஊடல் செய்து பிரிந்து வருகின்றது. காவேரிபாட்டி யானை இது போன்று காட்டிற்குச் சென்று கர்ப்பம் தரித்து குட்டி போட்டது. போட்ட குட்டியைச் சர்க்கஸ்காரனிடம் கொடுத்துவிட்டார்கள். இது போன்று நான் கர்ப்பம் தரித்துக் குட்டி போட்டால் என் குட்டியையும் கொடுத்து விடுவார்கள். எனவே எனக்குக் கர்ப்பம் தரிக்க விருப்பம் இல்லை. அதனால் கர்ப்பத் தடை மாத்திரைத் தா சாமி என்று கேட்கிறது.

### 63. பனையேறி குடும்பத்தைச் சேர்ந்தவன்

வேலாயுத நாடார் தன் மகன் நடராஜனுக்குக் கனகவல்லியை பெண் பார்த்து நிச்சயம் செய்திருந்தார். மாப்பிள்ளை அழைப்பு நடந்தது. அப்போது மாப்பிள்ளைக்கு எதிர்மாலை போட வேண்டும் என்று வேலாயுத நாடார் கூறுகின்றார். உடன் சம்மந்தி ரோஜாமாலை போடுகின்றார். மாப்பிள்ளை அப்பா இந்த மாலை இல்லை ஏழு பவுன் சங்கிலி போட வேண்டும் என்கிறார். பக்கத்தில் மோளம் அடிப்பவர் தனது செயினைத் தருகிறார். காலையில் திருமணம். அதற்கு முன் ஆசாரியை அழைத்து வந்து நகையை எடை போடுகிறார். இரண்டு பவுன் குறையுது என்று சண்டை நடக்கிறது. அப்போது வேலாயுத நாடார் இதுக்குத்தான் பனையேறி குடும்பத்தில் பெண் எடுத்தால் இப்படித்தான் நடக்கும் என்றார். உடன் பெரிய அண்ணன் நகையைக் கொடுத்துத் திருமணம் நடந்தது. ஐந்தாண்டுகள் கழித்து மகனை பார்க்கச் சென்னை செல்கின்றார்.

மருமகள் தன் மகனிடம் தாத்தாவுக்கு எதிர்மாலை போடுடா இல்லை என்றால் கோபித்துக் கொள்வார் என்றாள்.

### 64. ஆப்பசைத்த கார்த்தி

கார்த்தி பேங்க் மேனேஜர் பரிட்சையில் பாஸ் செய்து வேலைக்கு இண்டர்வியூ வந்தது. அவன் மாமா பாவேசம் ஒரு அரசியல்வாதி. நான் வேலை வாங்கித் தருகின்றேன் என்று கூறி தன் தலைவரிடம் அழைத்துச் செல்கின்றான். அவரும் கார்த்திக் இண்டர்வியூ கார்டை வாங்கிக் கொண்டு, நாளை வா பார்க்கலாம் என்கிறார். கார்த்தி மறுநாள் செல்கின்றான். அங்குத் தலைவர் இல்லை, மீசைக்கார வாட்சுமேன் உன் கார்டை தலைவர் எடுத்து வைத்தார், நான் பார்த்தேன், உன் காரியம் முடிந்த மாதிரிதான் என்றான். உடனே இவன் ஓட்டமும் நடையுமாக இண்டர்வியூவிற்கு வந்தான். கார்டு இல்லாத கார்த்திக்கை காவல்காரன் வெளியே தள்ளி விடுகின்றான். மல்லாந்து வீழ்ந்த கார்த்தி காதில் உன் காரியம் முடிந்த மாதிரி தான் என்று மீசைக்காரன் சொன்னது ஒலித்துக் கொண்டு இருந்தது.

### 65. நட்புப் பகைவன்

பெரியவர் தன் மகளுக்குத் திருமணம் முடித்த பிறகு ஓய்வெடுக்க, தேவஸ்தான கோவிலில் படுத்து இருந்தார். அவன் பழைய நண்பன் சீனிவாசன் அங்கு வந்து, நாம இரண்டு பேரும் பத்து வருச பழக்கம், எனக்கு தெரியாம எப்படி இங்குத் தனியாக இருக்கலாம் என்று கூறி தனது சத்திரத்திற்கு அழைத்து வந்து, அவருக்குச் சமையல் செய்ய, வாட்சுமேன் கிழவரை காய்கறி வாங்க அனுப்பினார். அப்போது தேவஸ்தான அதிகாரி வந்து இவருக்கு ஏண்டா டிக்கட் தரவில்லை என்று

அடிக்கப் போனார். இவர் தடுத்தார். அப்போது சீனிவாசன் நீ யாருயா? இவரைத் தடுக்க என்று மிகவும் கடுமையான வார்த்தைகளால் திட்டினான். பத்து ரூபாய் பணம் கொடுத்து டிக்கட் வாங்கிக் கொள்கின்றார். இப்போது சீனிவாசன் இவர் முகத்தைப் பார்க்க வெட்கப்பட்டு வயிற்றைத் தடவி காட்டுகின்றான்.

### 65. பழத்தைத் தாங்கிய சருகு

திருமலையாச்சி கணவனை இழந்தவள். தன் மகன் ஆறுமுகத்திற்கு உடம்பு சரியில்லாமல் போனதால், மிகவும் வேதனையுடன் பார்க்கின்றாள். ஆறுமுகம் படிப்பு முடித்து சென்னையில் வேலைக்குச் செல்கின்றான். அங்கேயே பெண் பார்த்துத் திருமணம் செய்து கொண்டு, அம்மாவையும் கிராமத்தில் உள்ள சொத்துக்களை விற்றுவிட்டு, தன்னுடன் தங்கிக் கொள்ள சொல்கின்றான். அவன் அம்மாவும் சென்னைக்குச் சென்று தங்கி இருக்கின்றாள். மருகமகள் அடிக்கடி அவளிடம் தகராறு செய்ததால் மீண்டும் கிராமத்திற்கு வந்து விடுகின்றாள். சில ஆண்டுகளில் மகன் ஆறுமுகமும் இங்கு வந்து அம்மாவிடம் தன் மனைவியும், தன் பிள்ளைகளும் தன் பேச்சைக் கேட்கவில்லை என்று கூறி அழுது கொண்டிருந்தான்.

### 67. சுகமாகிப் போன வெயில்

லட்சுமியும், ரோஜாவள்ளியும் சாலையில் தார் போடும் வேலை செய்கின்றவர்கள். ரோஜாவள்ளியின் கணவன் அங்கு வருகின்றான். இரண்டு முறை அவளை ஏமாற்றிச் சென்றவன். அவனுக்காக லட்சுமியிடம் பணம் கேட்கிறாள். லட்சுமி தர மறுக்கின்றாள். என் பணத்தைக் கொடு என்று கோபமாக,

கேட்டதால், அவள் உண்டியலை எடுத்துக் கொடுத்து விடுகின்றாள். மூன்று நாள் கழித்து லட்சுமி வீட்டருகே வந்து உட்கார்ந்து அழுகின்றாள். இந்த முறையும் என்னை ஏமாற்றி பணத்தைப் பறித்து சென்று விட்டான் என்றும், இந்தக் குழந்தைக்கு அப்பா யாரு? என்று கேட்டால் என்ன செய்வது என்று தான் சேர்த்தேன், இனி வந்தால் அவனை நானே தலையில் சாணியைக் கரைத்து ஊத்துவேன் என்றாள்.

### 68. எக்குடி தோற்பினும்

பல மொழி பேசும் மக்கள் கர்நாடகாவின் மலைப் பகுதியில் குடிசை போட்டு வசித்து வருகின்றனர். அங்குள்ள பக்கத்துத் தொழிற்சாலையில் வேலைநிறுத்தம் நடைபெறுகின்றது. அதனால் அந்த நிர்வாகத்தின் எம்.டி. மற்றும் உரிமையாளர் காவல்துறை அதிகாரிகளுடன் வந்து அவர்களை வேலைக்கு அழைக்கின்றனர். அப்போது பசவப்பா உங்கள் கம்பெனியில் ஒரு தொழிலாளி நிர்வாகத்தின் கவனக்குறைவால் பணியில் இருக்கும்போது இறந்துள்ளான். அதற்கு நியாயம் கேட்டு அவர்கள் போராடுகின்றனர். இறந்த தொழிலாளர்களுக்காக போராடும் நம் வர்க்கத்துக்காக துணை நிற்கணும். அதை விட்டு நாம் அங்கே போய் அவர்கள் இங்கே வரவேண்டுமா என்றும் ‘எக்குடி தோற்பினும் தோற்பது நின்குடி’ என்பதை மனத்தில் கொண்டு யாரும் அவர்களுடன் வேலைக்குச் செல்ல மறுத்து விடுகின்றனர்.

### 69. நரம்புக் கயிறு

தேசிங்கு கடலில் மீன்பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டுக் கொண்டு இருக்கும்போது போட்டி படகுக்காரர்கள் அவனை வேலைக்குக் கூப்பிடுகின்றனர். அவன் செல்லவில்லை. அதனால்

அவனைத் தண்ணீரில் அழுத்துகின்றனர். அதனால், அவர்கள் வலையை அறுத்து விடுகின்றான். இதனால் தேசிங்கை அனைவரும் ஒதுக்கி வைக்கின்றனர். அப்போது வடும்பா ஏன் அய்யா கவலைப்படுகின்றே. நான் இருக்கேன் வா இருவரும் கடலில் மீன் பிடிக்கலாம் என்று கூறுகின்றாள். அதற்குத் தேசிங்கு உன்னையும் ஒதுக்கி வைத்து விடுவார்கள் என்றான். இருவரும் நரம்புக் கயிறு மூலம் மீன் பிடிக்கின்றனர். ஒரு முனையைத் தேசிங்கும் மறு முனையை வடும்பாவும் பிடித்துக் கொண்டு கடலில் இறங்குகின்றனர்.

### 70. கறுப்பு மாடத்தில் ஒரு வெள்ளைப்புறா

வெளிநாட்டுக்காரர்களான லூசியும், அவள் கணவனும் குற்றாலத்தில் குளிக்க வருகின்றனர். அங்கு மாணிக்கம் குடும்பமும் குளித்துக் கொண்டிருக்கிறது. மாணிக்கத்தின் அம்மா காதில் உள்ள பாம்படங்களை லூசி உற்று பார்த்துக் கொண்டு இருந்தாள். இதை லூசி கணவன் போட்டோ எடுத்தான். இதைப் பார்த்த பாட்டி தன் மகன் மாணிக்கத்தைக் கூப்பிட்டு பஞ்சாயத்து வைத்து விட்டது. இந்த நேரத்தில் லூசி மகனும், மாணிக்கத்தின் மகன் கருப்புசாமியும் ஒன்று சேர்ந்து விளையாடிக் கொண்டு இருந்தனர். கருப்புசாமி பலாச்சுளை தந்தான். அவன் சாக்லெட் தந்தான். இப்போது லூசி தன் மகனை அழைக்கின்றாள். அவன் கருப்புசாமியை விட்டு வர மறுக்கின்றான். அப்போது காருக்குள் இருக்கும் லூசி மகன் அழுவதால் அவனுக்குக் கருப்புசாமி பலாச்சுளை ஒன்றைத் தருகின்றான். இதைப் பார்த்த லூசி மாணிக்கம் குடும்பத்தை வாருங்கள் காரில் செல்லலாம். உங்கள் வீட்டில் விட்டு விடுகின்றேன் என்று கூப்பிடுகின்றாள். அனைவரும் காரில் செல்கின்றனர்.

## தொகுப்புரை

- சிறுகதையின் தோற்றம், வளர்ச்சி பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.
- சிறுகதையின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.
- ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட எழுபது சிறுகதைகளின் கதைச்சுருக்கம் ஆசிரியரின் நடையிலேயே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.
- இக்கதைகளின் வாயிலாக மக்களின் எண்ணங்கள், அவர்களின் எதிர்பார்ப்பு, ஏமாற்றம், சிற்றூர் மக்களின் அறியாமை, வாழ்க்கைமுறை போன்றனவற்றைக் காணமுடிகின்றது.
- நன்மையின் வாயிலாக வெற்றியையும் தீமையின் வாயிலாகத் தோல்வியையும் காணமுடியும் என்பதை இக்கதைகளின் வாயிலாக உணரலாம்.

ß

## சான்றெண் விளக்கம்

1 சென்னைப் பல்கலைக்கழகம், இலக்கியக் கொள்கைகள், ப. 403.

2 தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப. 330.

3 சோம.இளவரசு, இலக்கிய வரலாறு, ப. 12.

4 ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.282.

5 மா.இராமலிங்கம், தமிழ் உரைநடை வரலாறு, ப. 83.

6 இலக்கிய கொள்கைகள், பக். 404, 405.

7 நா.பார்த்தசாரதி, தமிழில் சிறுகதை - மணிக்கொடி, 1935, ப. 160.

8 ம.மதியழகன், தமிழியல் ஆய்வு வரலாறு, ப. 48.

# இயல் - 3

# பாத்திரப்படைப்புகள்

## முன்னுரை

ஒரு சிறுகதை சிறந்து விளங்க அடித்தளமாக அமைவது பாத்திரப்படைப்பே எனலாம். கருத்துப் பொருளாக இருக்கும் ஒன்றைக் காட்சிப் பொருளாகக் காட்டுவது பாத்திரமேயாகும். சமுதாய மேம்பாட்டை விரும்பும் படைப்பாளர்கள் இவ்வுயர் பண்பைத் தம் பாத்திரங்களின் வழியே வெளிப்படுத்துகின்றனர்.

கதையின் விறுவிறுப்பான இயக்கத்திற்குக் கதைமாந்தரின் பங்களிப்பு மிகமிக இன்றியமையாத ஒன்றாகும். சிறுகதைக் கூறுகளுள் தலைசிறந்தது பாத்திரப்படைப்பு. கதைக்கருவிற்கு உயிரையும் உணர்வையும் தரவல்லன பாத்திரங்கள் ஆகும்.

சிறுகதைகளில் இடம்பெறும் பாத்திரங்கள் எப்படி அமைய வேண்டும் என்பது பற்றி அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களைத் தருகின்றனர். ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்களின் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ள பாத்திரங்கள் இங்கு மதிப்பிடப்படுகின்றன.

## படைப்பாளர்களும் பாத்திரங்களும்

பாத்திரம் என்பது கதையில் இடம்பெறும் ஒருவரைக் குறிக்கும். அவர் ஆணாகவோ, பெண்ணாகவோ அல்லது அஃறிணை உயிர்களாகவோ, அதற்கு மேற்பட்டோ இருக்கலாம். அப்பாத்திரங்களினால்தான் கதை சிறப்புறுகிறது. அதனால்தான் படைப்பாளர்கள் பாத்திரங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதைக் காணலாம்.

“எழுத்தாளன் படைப்பிலேயே மிகவும் தலையாயதும் அரியதுமானதும் பாத்திரப்படைப்புதான். இது மிகவும் அரிய பல்வேறு உணர்வுகளும் கலந்த ஒன்றாகும்”[1] என்று இலியா ரெணிபர்க் கூறுவதாக த.மணிமாறன் கூறுகிறார்.

“படைப்பிலக்கிய ஆசிரியர்க்கு உலகனுபவம் வேண்டும். எந்தச் சூழ்நிலையில் அவன் பாத்திரங்களைப் படைக்க விரும்புகிறானோ அந்தச் சூழ்நிலைப் பற்றிய முழு அறிவும் அவனுக்கு வேண்டும். அதாவது உலகத்தில் அந்தச் சூழ்நிலை எங்குக் காணப்படுகிறதோ, அங்கு அவன் பழகி இருத்தல் வேண்டும். இன்றேல் அவன் பாத்திரங்கள் நிலத்தில் கிடக்கும் மீன் போலத் தவிக்க நேரிடும்”[2] என்கிறார் இரா.பாலசுப்ரமணியன்.

படைப்பாளர்கள் நடப்பியல் பாத்திரங்களை உருவாக்க வேண்டுமானால் தம்மைச் சுற்றியுள்ள சமுதாயத்தையும் சமுதாய வாழ்க்கைத் தளத்தையும் அனுபவபூர்வமாக உணர்ந்தால் தான் பாத்திரங்களைப் படைக்க முடியும்.

“ஆசிரியரின் அகமனத்தின் ஆளுமைக் கூறுகளும் அனுபவக் கூறுகளும் பாத்திரப்படைப்பில் இடம்பெறும்போது ஆசிரியரின் சுயசரிதையின் வெளிப்பாடு அதில் இடம் பெற்றிருப்பதாக மதிப்பிடுவர்”[3] என்கிறார் இரா.பாலசுப்ரமணியன்.

அதேபோன்று “ஆசிரியர் நினைத்த கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் மக்களுக்குப் புரிய வைக்கும் பெரும் பொறுப்பு இம்மாந்தர்களுக்கே உரியது”[4] என்பர்.

“ஒரு படைப்பாசிரியன் தனது படைப்பைப் படிப்பவருக்கு இனங்காட்ட விழையும் கதைமாந்தரைத்

தனிச்சிறப்புகளோடு உருவாக்கிக் காட்டுவதற்கும் பயன்படும் தேர்ந்த கலையே கதை மாந்தர் படைப்பு எனப்படும்”[5] என்கிறார்.

“சிறுகதை என்னும் கலைப் படைப்பிற்கு மாந்தரையும் கருப்பொருளையும் தருவது சமுதாயம்தான். கலைப் படைப்பை உருவாக்கும் கலைஞன் தான் வாழும் சமுதாயத்தில் காணும் மனிதர்களையும் நிகழ்ச்சிகளையும் கண்டு அவற்றை மனத்தில் வைத்துக் கொள்கின்றான். அவனை மிகுதியாகப் பாதிப்பவைகளை அவன் தன்னுடைய சிந்தனையுடன் சேர்த்துக் கலைவடிவமாக ஆக்கித் தருகின்றான்”[6] என்று சு.வேங்கட்ராமன் கூறுகிறார்.

ஒரு படைப்பாளி எவ்வளவுதான் கற்பனை மிக்கவராக இருந்தாலும் பெரும்பாலும் தன் வாழ்க்கையில் இருந்தே தம்முடைய கதாபாத்திரங்களை உருவாக்குகின்றார்கள். இதன் காரணமாகவே பாத்திரப்படைப்புக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது.

“தொல்காப்பியர் பொதுவாக அகப்பாடல்களுக்குரிய பாத்திரங்களைப் பற்றிப் பொருளதிகாரத்தில் விளக்குகிறார். அவர் குறிப்பிடும் பாத்திரங்களாவன: தலைவன், தலைவி, பாங்கன், தோழி, நற்றாய், செவிலி, காமக்கிழத்தி, அறிவர், கூத்தர், விறலியர், பாணன், பாடிணி, இளையோன் (ஏவல் செய்வோர்) பார்ப்பார்(கற்றறிந்தோர்) ஆவர். இப்பாத்திரங்கள் ஒவ்வொருவரின் பண்புகளைப் பற்றியும் தொல்காப்பியர் கூறியுள்ளதாக”[7] தா.ஏ.ஞானமூர்த்தி கூறுகிறார்.

மேலும் அவர்களுள் பெண் செறிவு (அடக்கம்), நிறைவு (அமைதி) செம்மை (மனங்கோடாமை) செப்பு (பொருந்தச்

**சொல்லுதல்) அறிவு (நன்மை பயப்பனவும் தீமைப் பயனப்பனவும் அறிதல் அருமை (உள்ளக் கருத்தறிதல் அருமை) ஆகிய பண்புகளையும் கொண்டவராய் இருத்தல் வேண்டும் என்றும் தொல்காப்பியர் விதிக்கிறார்.**[8]

"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண் பாலான"

**கருத்து அல்லது எண்ணங்களைக் குறித்துத் தொல்காப்பியர் பல விதிகளை வகுத்துள்ளார். ஒவ்வொரு பாத்திரங்களுக்கும் கூறுதற்குரிய கருத்துக்களையும் அவற்றை வெளியிடுதற்குரிய இடங்களையும் தொல்காப்பியர் விளக்கியுள்ளார்.**[9]

பாத்திரங்களைப் பற்றி வ.கமலக்கண்ணன், **"கதைமாந்தர்கள் வாழ்வில் காணக்கூடிய இயல்பும் இலக்கியத்தில் இடம்பெறக்கூடிய தனித்தன்மையும் ஒருங்கே இணைந்தவர்களாக இருக்க வேண்டும்"**[10] என்கிறார்.

**"பாத்திரங்கள் உயிர் பெற்று உலவ வேண்டும். ஒரு நூலின் கதைப்பொருள் உயிர் என்றும், அங்கம், களம் முதலான உறுப்புகள், எலும்பும், தசையும் என்றும், யாப்பு, புற அழகுத் தோற்றம் என்றும், பாத்திரங்களைக் குருதியோட்டம் என்றும்"**[11] கூறுவர் என்கிறார் இரா.குமாரவேலன்.

பாத்திரப்படைப்பினால்தான் கதைகள் சிறந்து நிலைத்து வாழும். பாத்திரமின்றி கதை இருக்க முடியாது. பாத்திரங்கள் கதைக்கருவிற்கு உயிரோட்டத்தைத் தரும் உயிர்ப்புச் சக்தியாக விளங்குவதுடன் கதையை முன்னோக்கி நடத்திச் செல்லவும் உறுதுணையாக அமைகின்றன.

கல்கி அலைஓசையில் தம் பாத்திரங்களைப் பற்றி குறிப்பிடும் செய்தி இங்குக் கருதத்தக்கதாகும். "அலை ஓசையை நான் எழுதியதாகவே எண்ணக் கூடவில்லை. லலிதாவும், சீதாவும், தாரிணியும், சூரியாவும், சௌந்தரராகவனும், பட்டாபி ராமனும் சேர்ந்து பேசிக் கொண்டு அவரவர்களுடைய அந்தரங்க ஆசாபாசங்களையும் உள்ளக் கிளர்ச்சிகளையும் வெளியிட்டு 'அலை ஓசை' எழுதியிருக்கிறார்கள். அவர்கள் கற்பனை செய்யப்பட்ட பாத்திரங்கள் என்றே என்னால் எண்ண முடியவில்லை. ஆம், இந்தக் கதையைக் கதாபாத்திரங்களே எழுதியிருக்கிறார்கள்"[12] என்றார்.

எழுத்தாளர் அகிலன் தமது கதைமாந்தர்களைப் பற்றி கூறும்போது, "என் கதைத்தலைவர், தலைவியர் எவ்வளவு குறைபாடுடையவர்களாக இருந்தாலும் நான் நேசிக்கின்றேன். என் ரத்தத்திலிருந்தும் உயிர் மூச்சிலிருந்தும் பிறந்தவர்கள் அவர்கள். இன்னும் சொல்லப்போனால் அவர்கள் என்னைவிட உயர்ந்தவர்கள்"[13] என்கிறார்.

கதைகளின் விறுவிறுப்பான இயக்கத்திற்குக் கதைமாந்தர்களின் பங்களிப்பு மிகமிக அவசியமான ஒன்றாகும். கதைகளுக்குக் கதைமாந்தர்கள் எவ்வளவு இன்றியமையாதவர்களோ, அதுபோல கதைமாந்தர் பெயர்களும் இன்றியமையாததாகும். கதைக் கருவிற்கு உயிரையும் உணர்வையும் தரவல்லன பாத்திரங்கள்.

"பாத்திரப்படைப்பு என்பது ஒரு பெயர் சூட்டுவதோ, அங்க வருணனை நடத்தி விடுவதோ அல்ல. மனம், அறிவு, சிந்தனை, குண இயல்பு, சூழ்நிலையின்போது வெளிப்படும் உணர்ச்சிகள் இவற்றையெல்லாம் கூர்ந்து அறிவது.

அனுபவமாக வெளிப்படுத்துவதைத் தீட்டுவதாகும்''[14] என்று ஜெயகாந்தன் கூறுகிறார்.

''எந்த ஒரு பாத்திரப்படைப்பும் செறிவுமிக்கதாக அமைய வேண்டும். குறிப்பிட்ட பாத்திரத்தின் மிக முக்கியமானவையும் கதையின் கட்டுக்கோப்புக்கு இன்றியமையாதனவும் ஆன பண்புகளை நன்கு பளிச்சிடுமாறு சிறப்புறக் காட்டவேண்டும்''[15] என்கிறார் சு.பாலச்சந்திரன்.

கதைமாந்தர் பெயர் ஒரு புதையல் போன்றது. சிறுகதைப் படைப்பாசிரியர்கள் கதைமாந்தர்களுக்குப் பெயர் சூட்டுவதில் பெரிதும் அக்கறை காட்டுகின்றனர்.

''படைப்பாளர் தம் புனைக்கதைகள், கதையின் பின்னணிக்கும், சூழலுக்கும் ஏற்ற வண்ணம் பாத்திரங்களின் பெயர்களை படைக்கும்போதே படைப்பாளர் தம் சிந்தனையில் கற்பனைத் தன்மையோடு மாந்தர்களை நினைவாக்கிடக் கூடும்''[16] என்பர்.

''சிறுகதையில் பாத்திரங்கள் வளர்க்கப்படுவதில்லை வார்க்கப்படுகின்றன. அதாவது வார்த்த பாத்திரங்களின் இயக்க நிலையில் தோன்றும் ஓர் உண்மைதான சிறுகதையின் வருவதாக அமையும். மேலும் பாத்திரங்களின் இயக்கம் வாழ்க்கையிலுள்ள ஓர் முக்கிய பண்பினைக் காட்ட வேண்டும்''[17] என்கிறார் கா.சிவதம்பி.

''சிறுகதையாயினும் சரி, புதினமாயினும் சரி கதைமாந்தர் யாவரும் ஆசிரியர் கூற விரும்பும் கதைக்காகவே கற்பனையாக படைக்கப்பட்டவராவர்''[18] என்பர் செ.கணேசலிங்கன்.

“பாத்திரத்தினுடைய எண்ணங்கள், நடத்தை, எதிர்வினைகள் (Reactions) ஆகிய இவற்றின் வாயிலாக அப்பாத்திரத்தை நன்கு படைத்துக் காட்டலாம்”[19] என்பார் தா.ஏ.ஞானமூர்த்தி.

“பாத்திரங்களை அவை செயல்படுகின்ற ஆற்றலைக் கொண்டு செயல்முனைப்பு பாத்திரம் (Active Character) என்றும் செயல்முனைப்பில்லா பாத்திரம் (Passive Charactr) என்றும் இரண்டாகப் பகுக்கலாம்”[20] என்பார் தி.சு.நடராசன்.

“கதைமாந்தர்கள் பண்பு நலன்களையொட்டி அவர்களை இருவகையாகப் பாகுபாடு செய்யலாம். 1.நிரலான அல்லது நிலையானக் கதைமாந்தர் (Flat Character) 2. முழுமையான கதைமாந்தர் (Round Character). முதல் வகை கதைமாந்தரின் பண்பு நாவல் தொடக்கம் முதல் இறுதி வரையில் எவ்விதக் குறிப்பிடத்தக்க மாற்றமோ, வளர்ச்சியோ இருக்காது”[21] என்கிறார் இரா.தண்டாயுதம்.

**பாத்திர பண்புகள்**

பண்புநலன்களைப் பற்றி ஆய்வதாக அமையும் இந்த ஆய்வு மனிதனைப் பற்றிய அகநிலையில் ஆய்வாக அமையும்.

“பாத்திர அறிமுகத்தின்போது பாத்திரத்தின் புறத்தோற்றம் மட்டுமே தரப்படலாம். பாத்திரத்தின் பண்புகள் சிறிது சிறிதாக பின்னர் உணர்த்தப்படலாம். அல்லது சில தனிப்பட்டப் பண்புகள் உணர்த்தப்படலாம்”[22] என்கிறார் மு.வ. என கோ.வெ.கீதா கூறுகிறார்.

“சில பாத்திரங்கள் எந்த நோக்கத்திற்காகப் படைக்கப்பட்டனவோ, அந்த நோக்கம் நிறைவேறியதும்

காப்பிய அரங்கில் இருந்து அவை ஓசையின்றி மறைகின்றன என்று எஸ்.ராஜம் கம்பராமாயணத்தில் கூறியுள்ளதாக சௌ.இரஞ்சனா கூறுகிறார்."[23]

பாத்திரங்களைக் குணங்கள் அடிப்படையில் பிரிக்கும்போது கீழ்க்கண்ட முறையில் பிரித்துக் கொள்ளலாம் என்று மா.மனோகரன் கூறுகிறார்.

1. கதைமாந்தர்களின் குறிக்கோள்
2. சிக்கலைத் தெளிவாக்கும் மாந்தர்கள்
3. மூடநம்பிக்கையில் ஆண்ட மாந்தர்கள்
4. வறுமையில் வாழும் மாந்தர்கள்
5. அதிகாரத்தைத் தெளிவாக்கும் மாந்தர்கள்
6. மூடநம்பிக்கையில் பெண்மாந்தர்கள்
7. உழைப்பாளி மாந்தர்கள்
8. பிற மாந்தர்கள்
9. எண்ணச் சிதறல்கள் கதைமாந்தர்[24]

என்று பகுத்துக் காட்டியுள்ளார்.

சி.செல்வர் கீழ்க்கண்டவாறு மாந்தர்கள் குணங்களை அடிப்படையில் பிரித்துள்ளார்.

1. முழுமைப் பாத்திரம்
2. துணைமைப் பாத்திரம்
3. எதிர்முனைப் பாத்திரம்
4. கௌரவப் பாத்திரம்
5. அஃறிணைப் பாத்திரம்
6. தீயபழக்கமுள்ள பாத்திரம்[25]

என பகுத்துள்ளார்.

பாத்திரப்படைப்பு என்பது படைப்பாளரின் தனிப்பட்ட சிந்தனையில் உருவாகின்றது. ஆய்வாளர்கள் இப்பாத்திரங்களைப் பல்வேறு வகையாகப் பகுத்துக் காண்கின்றனர். படைப்புகளால் இடம்பெறும் பாத்திரங்களின் முக்கியத்துவத்திற்கு ஏற்பவும் அந்தப் பாத்திரங்களின் குண இயல்புகள் அடிப்படையில் நல்ல பாத்திரங்களை (அறநிலைப் பாத்திரம்) தீய பாத்திரங்கள் (எதிர்நிலை) குறிக்கோள் பாத்திரம் என்றும் பகுத்துப் பார்க்கலாம்.

**"மாந்தர்களின் நெறியான குறிக்கோளை எட்ட வெற்றி, தோல்வி, இன்பம், துன்பம், வாழ்வு, சாவு ஆகியவற்றைப் பற்றி கருதாமல் ஒரே நேர்கோட்டில் செல்லும் நிலை மாந்தர்கள் ஒரு வகை ஆவர். பல்வேறு கவர்ச்சிப் பொருள்களைக் கண்டு கண்டு அவற்றை அடையப் பல்வேறு வழிகளில் செல்லும்போது தம் போக்கை அடிக்கடி மாற்றிக் கொள்பவராய் மேலும் கீழும் அலைபவராக விளங்கும் அலைமாந்தர் மற்றொரு வகை ஆவார். புறவாழ்வில் நிலைமாந்தராகவும், அகவாழ்வில் அலைமாந்தராகவும் இருவேறு நிலையில் இயங்கும் நிலை அலைமாந்தர் மூன்றாம் வகையைச் சேர்ந்தவர்கள் ஆவார்"**[26] என்று தா.வே.வீராசாமி கூறுகிறார்.

சு.சமுத்திரம் அவர்களின் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ளவர்களை அவர்களின் குணங்களின் அடிப்படையிலும் கொள்கைகள் அடிப்படையிலும் பாத்திரங்களைப் பாகுபடுத்தி, வகைப்படுத்தி ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

1. அறநிலை மாந்தர்கள்
2. இரக்கக் குணம் கொண்ட மாந்தர்கள்
3. போராட்டக் குணம் கொண்ட மாந்தர்கள்

4. பாலுணர்வில் பாதிக்கப்பட்ட மாந்தர்கள்

5. எதிர்நிலை மாந்தர்கள்

6. அஃறிணை மாந்தர்கள்

7. குறிக்கோள் மாந்தர்கள்

8. அதிகாரக் குணம் கொண்ட மாந்தர்கள்

9. பேராசைக் குணம் கொண்ட மாந்தர்கள்

என்பனவாகும்.

**1. அறநிலை மாந்தர்கள்**

**"ஒரு சிறுகதை நம் மனத்தில் தங்க வேண்டுமாயின் இரண்டே வழிகள் தாம் உண்டு. முற்கூறியபடி அதில் ஒப்பற்ற ஒரு நிகழ்ச்சி நடைபெறுதல் வேண்டும். இன்றேல் அதில் வரும் பாத்திரம் நாம் மதித்து விரும்பும் ஒப்பற்ற பண்பு ஒன்றைப் பெற்றிருத்தல் வேண்டும்"**[27] என்ற அ.ச.ஞானசம்பந்தன் கருத்திற்கு ஏற்ப இவர்கள், உயர்ந்த பண்புடையவர்களாகவும், பிறருக்கு நன்மை செய்யக் கூடியவராகவும், நீதியை நிலைநாட்டக் கூடியவராகவும் சமுதாய முன்னேற்றத்திற்குப் பாடுபடக் கூடிய எண்ணம் கொண்டவராகவும் படைக்கப்பட்டுள்ளார்கள்.

'அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா' என்ற கதையில் சண்முகமும் அமுதாவும் காதலர்கள். இருவரின் திருமணத்திற்குத் தாய், தந்தையர்கள் ஒப்புதல் கொடுத்து விட்டனர். ஆனால் சொந்தக்காரர் தனது கட்சித் தலைவர் தலைமையில்தான் திருமணம் நடக்க வேண்டும் என்று சண்டை போட்டுக் கொள்கின்றனர். திருமணம் தடைபடுகின்றது. அப்போது ஐயாசாமி என்ற ஊர்ப் பெரியவர், **"மடப்பய மவங்களா, சொல்றதைக் கேளுங்க. அழிஞ்சி போகாதீங்க. நம்ம கிராமத்தில் கட்சிங்க**

**வந்த பிறகு ஊரு ஊரா இல்லை. அதுவும் பஞ்சாயத்துத் தேர்தல் இழவுக்குப் பிறகு ஒரே இழவாப் போச்சி. எங்கயோ இருக்கிற பயல்களுக்காக நாம் ஏண்டா சண்டை போடணும்? அவங்க ஒருவனோட ஒருவன் கூடிக்கிறான். நம்ம பசங்க, இழவு வீட்டுல கூட கலந்துக்க மாட்டேங்கறான். இது என்ன அரசியலுடா? நாம ஒன்னோட ஒண்ணு; சின்னஞ் சிறிசுக, அந்த ரெண்டும் நூறாண்டுப் பயிருடா; ஒண்ணை ஒண்ணு விரும்புது, அழிச்சிடாதீங்க; அழிஞ்சிபோவீங்கடா"**[28] என்கிறார்.

இன்றைய சமுதாயத்தில் நாட்டில் நடக்கக்கூடிய செய்திகளை ஐயாசாமி மூலம் ஆசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார்.

'இடம்தேடி' என்னும் கதையில் (பெயர் குறிப்பிடாத) பாட்டிக்கு நான்கு மகன்கள். ஆனால் அவனுக்கு உடம்பு முடியாத போது ஆறுமுகம் என்ற அன்னியன் தான் அவளை மருத்துவமனையில் சேர்த்து அவர் உடல்நிலையைச் சரிசெய்கின்றான். மருத்துவமனையில் சேர்த்ததற்காகப் பாட்டியின் மகன்கள் ஆறுமுகத்தை அடித்தும் திட்டியும் தீர்த்தனர். ஆனால் பாட்டியோ தன் மகன்களிடம் செல்ல வேண்டும் என்ற பிடிவாதத்துடன் இருக்க ஒவ்வொரு மகன் வீட்டிற்கும் ஆறுமுகம் அழைத்துச் செல்கின்றான். ஆனால் யாருமே அவளை ஏற்றுக் கொள்ளவே, பார்க்கவே விரும்பவில்லை. ஆறுமுகத்தைப் பார்த்துப் பாட்டி உன் வீட்டிற்குக் கொண்டு போ என்று கையெடுத்துக் கும்பிடுகின்றாள். கொட்டும் மழையுடன் ரிக்ஷாவில் அழைத்துச் செல்கின்றான். அவன் வீட்டில் முகப்பில் ரிக்ஷாவை நிறுத்தி பாட்டியைப் பார்க்கும்போது இறந்த நிலையில் கீழே வீழ்கின்றாள். உடனே ஆறுமுகத்திடம் ரிக்ஷாக்காரன் , **"ஆயாவை அனாதைமாதிரி அடக்கம் பண்ணக்கூடாது. இது என் எரியா. ஒரு செகண்டல என்னோட ஆளுங்களையும், தேரையும்**

மேளத்தையும் கொண்டு வர்றேன். நீ ஒரு பைசா செலவளிக்க வேண்டாம். ஆனால், ஒண்ணு நீதான் தீச்சட்டி எடுக்கணும். அந்தக் கஸ்மால பசங்க வேணுமுன்னா வரட்டும். ஆனால், எவனாது தீச்சட்டி எடுப்பேன்னான், குடல உருவுடுவேன் ... அப்புறம் ... குளிப்பாட்ட வேண்டாம். ஆயா மழையில ஜோரா குளிச்சிட்டா ... வாறேம்பா ... ஒரே செகண்ட்."

ரிக்ஷாக்காரன் போனதும், ஆறுமுகம் பைக்குள் கிடந்த ஒரே ஒரு ஐந்து பைசாவை எடுத்துக் கொண்டு போய், பெரிய ஊதுபத்தி ஒன்றை வாங்கி வந்தான். கிழவி சாய்ந்திருந்த மூலையில், மூட்டைப் பூச்சிகள் வாசஞ் செய்யும் ஒரு வெடிப்பில் பத்தியை வைத்தான்."[29]

ஆறுமுகம் அனாதையாகச் சென்னைக்கு வந்தவன். இந்தப் பாட்டி அவனுக்கு ஒரு சில நாள் உணவு வழங்கியுள்ளாள். அதற்காகத் தன் நன்றிக் கடனாக அவளுக்குச் செய்ய வேண்டிய உதவிகள் செய்து, இறந்தபின் தானே அடக்கம் செய்கின்றான். இவ்வாறு உயர்ந்த உள்ளம் கொண்டவனாக ஆறுமுகத்தை ஆசிரியர் படைத்துள்ளார்.

'ஒரு சத்தியத்தின் அழுகை' என்ற கதையில் காயத்திரியின் கணவன் கந்தசாமி நீங்க கும்பிடற சாமியத்தான் நாங்களும் கும்பிடுறோம். காலனி மக்களாகிய நாங்களும் சாமிக்குச் சூடம் ஏத்துவோம் என்று கூறினான். அது ஊர்க்கலவரமாக மாறி, பின்பு அவன் கொலையில் முடிந்து இன்னும் ஒரு மாதம் கழித்து யாருக்கு முதல் மரியாதை என்ற பிரச்சினையில் அவர்களுக்குள் அடித்துக் கொண்டு ராமசாமி தேவருக்கு ஒரு கை போனது. மாயாண்டிக்கு ஒரு கண் போனது. இருவரும் ஏதேச்சையாகக் குளத்தங்கரையில் சந்திக்கின்றனர். அங்கே இவர்களால் விதவையாக்கப்பட்ட

கந்தசாமியின் மனைவி கந்தாயி குளித்துக் கொண்டு இருந்தாள். இவர்கள் இருவரையும் பார்த்து அண்ணன்மாரே இருவரும் இங்கே வாங்க என்று கூப்பிட்டு "என் புருஷன் சொன்னதைத்தான் ஒங்ககிட்ட சொல்லப் போறேன். உலகத்துலெ ... ரெண்டே ரெண்டு சாதிதான் உண்டு. ஒண்ணு பணம் இருக்கிறவங்க சாதி. இன்னொண்ணு அது இல்லாதவங்க சாதி. இந்த ரெண்டு ஜாதிங்க தவிர ... வேற சாதிங்க இருக்கப்படாது. நினைச்சி பார்த்தால், இல்லவும் இல்லை. பணக்காரன் என்னைக்கும் பணக்காரன் கூடத்தான் சேருவான். பணக்காரன் சாதி பார்க்காதபோது ... நாம ... ஏழைங்க ... சாதி பார்க்கலாமா? நாடார் அண்ணாச்சி ... ஒம்ம வண்டிமாட்ட எதுக்காக வித்தீரு? தேவர் அண்ணே ... ஒம்ம நிலம் போனதாலே ... ஒம்ம நிலைமையை நினைச்சிப் பாத்தீரா? என் புருஷன் ஒங்களுக்கு என்ன கெடுதல் செய்தாரு? சொல்ல முடியுமா?"[30] என்கிறாள்.

காத்தாயி மூலம் ஆசிரியர் சாதி என்பது இல்லை என்பதையும் நாம் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்பதையும் விளக்கியுள்ளார்.

'மீனாட்சி நிமிர்ந்து பார்க்கிறாள்' என்னும் கதையில் மீனாட்சி என்பவள் சிறிது மூளைவளர்ச்சியில்லாதவள். ஆனால் தன் கண்ணெதிரே எந்த ஒரு தீங்கும் நடக்க அனுமதிக்காதவள். தன் அண்ணன் மகள் தன்னுடன் படிக்கும் சக மாணவனுடன் வீட்டிற்கு வந்து தனி அறையில் இருவரும் இருக்கின்றனர். அப்போது விமலாவை ஏதோ செய்ய அவள் சத்தம் போட்டாள். உடனே வெளியே உட்கார்ந்து இருந்த "மீனாட்சி கோர சொரூபமாக நின்று கொண்டிருந்தாள். குபீரென விளக்கை எறிந்துவிட்டுப் பாய்ந்து உள்ளே வந்தாள். விமலாவைக்

*கட்டிலில் இருந்து தூக்கி நிறுத்திக் கன்னத்திலும் பிடரியிலுமாக மாறி மாறி அடித்தாள். அந்த வாலிபன் மீனாட்சியின் கைகளைப் பிடித்துத் தடுக்கப்போனான். அவ்வளவுதான்.*

*மீனாட்சி அவன் சட்டைக் காலரைப் பிடித்துகு கொண்டு, மூக்கிலேயே குத்தினாள். ஓங்கி ஒரு அறை கொடுத்து, வாசலுக்கு வெளியே தள்ளிவிட்டு உள்ளே வந்தாள்.”*[31]

விமலா வாயிலே மீனாட்சியை ஆபாத்தல்லாவா பைத்தியம் என்று கூறியவள். ஆனால் ஆபத்தில் காப்பாத்தும் கடவுளாக மீனாட்சியை ஆசிரியர் படைத்துள்ளார். எவ்வளவு பைத்தியக்காரப் பெண்ணாக இருந்தாலும் பெண்களுக்கு ஆபத்து என்றால் அவளைக் காப்பாற்றக்கூடிய பாத்திரமாகப் படைத்துள்ளார்.

‘தர்மத்தின் தற்காப்பு’ என்னும் கதையில் காளியம்மா வயலில் புல் அறுத்துக் கொண்டு வருகையில் புல் கட்டைத் தூக்கி விடும் சாக்கில் அவள் தோளில் கையைப் போடுகின்றான் மாசாணம். உடனே அவனைக் கண்டபடி திட்டிவிட்டு, வீட்டிற்கு வந்து நடந்த சம்பவங்களைத் தன் கணவன் நடராஜனிடம் கூறுகின்றாள். அவன் அரிவாளை எடுத்துக் கொண்டு மாசாணத்தை வெட்டிக் கொலை செய்து விட்டுத்தான் வருவேன் என்று கிளம்புகையில் காளியம்மா *“நானும் கவுரிமான் வம்சத்திலே பிறந்தவன்தான் மச்சான். நான் சொல்றதக் கேட்டுட்டு அப்புறம் எப்படி வேணுமுன்னாலும் பண்ணும். ஊருல ஆளு இல்லாமலா போயிட்டு? பெரிய மனுஷனுங்க செத்தா போயிட்டவ? நாலு மனுஷங்கிட்டே சொல்லும். கேட்டுத் தாங்கன்னு, கேளும். ஊர் விவகாரத்த வச்சி அந்த நாய்க்கிப் பிறந்த நாய் தலையில கரும்புள்ளி செம்புள்ளி*

குத்தி அடிக்கச் சொல்லுவோம். நமக்கு ஆளு பலம் கிடையாதுன்னாலும் நாம் அதர்மத்தைத் தட்டிக் கேட்கச் சொல்லுவோம். அதுக்கு ஆள் பலம் தேவையில்லை. இந்த அநியாயத்தைக் கேட்டுட்டு ஊர்க்காரனுங்க சும்மாவ இருப்பாவ? அந்த நாய நடுரோட்ல வச்சி செருப்புக் கழற்றி அடிக்கப் போறாவ. இப்பவ போயி சொல்லும் ...”[32] என்றாள்.

காளியம்மா தன் கற்பிற்குக் களங்கம் ஏற்பட்டும் நீதி, நியாயம், நேர்மை தவறாமல் அறவழியில் அவனைத் தண்டிக்க வேண்டும் என்ற கொள்கை கொண்ட நல்ல உள்ளம் கொண்ட பாத்திரமாக ஆசிரியர் படைத்துள்ளார்.

‘அம்மையப்பன்’ என்ற கதையில் முத்துபாண்டிக்கு அவரது டெல்லி நண்பன் சிவசாமி தன்னுடன் பணிபுரியும் ராமனுக்குப் பெண்பார்த்துத் திருமணத்தை நடத்தி அனுப்பும்படி கூறுகின்றான். ஆனால் தன் மகள் பாமாவை அவனுக்குக் கொடுக்க கணவன், மனைவி இருவருக்கும் ஆசைதான். பாமாவின் பாசமில்லா நடவடிக்கை பிடிக்காததால் தன் மனைவியின் எதிர்ப்பையும் மீறி ராமனுக்கு வேறு பெண் பார்த்துத் திருமணத்தை நடத்தி வைக்கிறார். ஏனென்றால் “ராமன் பாசத்திற்காக ஏங்குபவன். அவனுக்கு வாய்க்கிறவள் தாய்மை மிக்க தாயாக இருக்க வேண்டும். பாமாவைக் கட்டிவைத்தால், ராமன் துரத்த மாட்டான் தான். ஆனாலும் இப்போது உள்ளூர எப்படி புழுங்கிறானோ, அப்படி காலமெல்லாம் புழுங்குவான் ... என்னை அவன் நம்புகிறான் என்பதற்காக, நான் நம்பிக்கை மோசடி செய்யக் கூடாது. பாமாவுக்கு இந்த மாதிரி மாப்பிள்ளை கிடைக்காதே? உண்மைதான். அதற்காக ... நான் ... மனச்சாட்சிக்கு விரோதமாக நடக்கலாமா? பாசமில்லா

**ஒருத்தியை, கலைத் தன்மையினால் தனக்குள்ளேயே ஒரு உலகை நடத்தும் ஒருத்தியை, உலகில் தனித்து விடப்பட்ட ஒருத்தன் மீது சுமத்தலாகாது ... ஆண்டவன் என்னை ஏமாற்றவில்லை. உண்மைதான். நானும் ஆண்டவனை ஏமாற்றக் கூடாது"**[33] என்பான்.

முத்துபாண்டி தன் மகள் இருந்தும் பாசத்திற்காக ஏங்கும் ராமனுக்கு வேறு ஒரு பெண் பார்த்துத் திருமணத்தை முடித்து வைக்கிறார். தன்னை நம்பி வந்தவர்களை ஏமாற்றக் கூடாது என்ற எண்ணமும் ராமனுக்கு அம்மா, அப்பாவாக இருந்து நன்மை செய்யும் பாத்திரமாக ஆசிரியர் படைத்துள்ளார்.

'குடிக்காத போதை' எனும் கதையில் மூர்த்தி என்பவன் தங்கள் ஊரில் உள்ள கள்ள சாராயத்தை ஒழிக்கப் பாடுபட்டு வெற்றியும் கண்டவன். அவன் தந்தை ராமுவுக்கும் அண்ணனுக்கும் குடிக்க சாராயம் தராமல் உள்ளூர் வெளியூர் வாசிகள் திருப்பி அனுப்பிவிட்டனர். அதனால் ஆத்திரமடைந்த இருவரும் மூர்த்தியைப் பார்த்து,

"**ஊர்ல ... ஆயிரம் நடக்கும் உனக்கென்னடா வந்தது? பெட்டிஷன் எழுதினியாக்கும் ... பெட்டிஷன் ... நம்ம குடுப கௌரவத்தைக் காற்றுலே விட்டுட்டியேடா ... காவாலிப்பயலே" என்று சொல்லிக் கொண்டு ஒருவர், பெட்டிஷன் எழுதிய மூர்த்தியின் கைகளைச் சாராயக்கிளாசைப் பிடிப்பது போல் பிடித்துக் கொள்ள, இன்னொருவர் அவனை அடி அடியென்று அடித்து நொறுக்கினார்"**[34] தன்னை ஊர் அடித்தாலும் பரவாயில்லை. உற்றார் அடித்தாலும் பரவாயில்லை. ஊருக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற அறத்தோடு நிற்கும் பாத்திரமாக மூர்த்தியைப் படைத்துள்ளார் ஆசிரியர்.

'இது பொதுவழி அல்ல' என்ற கதையில் சங்கிலி கருப்பன் தன் மகளுக்கு ஊர் மக்கள் ஆதரவுடன் விமர்சையாகத் திருமணத்தை முடித்து வைத்தவுடன், தன் மருமகன் ஊர் தெருவில் சென்று பெஞ்சில் அமர்ந்து டீ குடித்தான் என்பதற்காக, அவனைச் சட்டையைப் பிடித்து வெளியே இழுத்துவிட்டனர். இதைப் பார்த்த சங்கிலி நியாயம் கேட்டான். யாரும் அவனுக்கு உதவவில்லை. ஆனால் சங்கிலிகருப்பன் தான் ஊர் மக்கள் வயலுக்குச் செல்ல 5 கி.மீ. சுற்றிச் செல்கின்றனர் என்பதால் குடியானவர்கள் கேட்டதற்கு இணங்கி சேரிமக்கள் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் தன் வீட்டையும் இடித்து **"பல இளவட்டங்கள் சேரிக்குள் பொதுவழி கொடுக்க முடியாது என்றார்கள். அதுவும், வீடுகளை இடித்துக் கொடுக்க முடியாது என்று திட்டவட்டமாகத் தெரிவித்தார்கள். சங்கிலிக் கருப்பன் பக்குழமாகப் பேசினான். 'தாயா ... பிள்ளையா பழகி விட்டோம்! நம்ம கிட்ட அடைக்கலமுன்னு வரும்போது, ஊரு மொதலாளிவளுக்கு உதவனுண்டா ...' என்றான். அப்போதும் ஊரில் பலர் முரண்டு பிடித்தபோது, இவன் தன் வீட்டை இடித்துவிட்டு அருகிலேயே இருந்த புளியந்தோப்பு அருகே, ஊர்க்காரர்கள் கொடுத்த உருப்படியில்லாத பணத்தில், தன் பணத்தையும் போட்டு, ஒரு குடிசையைக் கட்டினான்"**[35] சங்கிலிக்கருப்பன் எனும் பாத்திரம் ஊர் மக்களுக்காக தன் வீட்டை இடித்து வழிவிடும் நல்ல அறச்செயல் குணம் கொண்ட பாத்திரமாகப் படைத்துள்ளார்.

'தாய்மை' எனும் கதையில் வசந்தி என்பவள் கிராமத்தில் இருந்து சென்னைக்குத் தன் சித்தப்பா வீட்டிற்கு வந்தவள். வீட்டில் உள்ள அனைவரும் பீச்சிற்குப் போகின்றனர்.

அப்போது வசந்தியிடம் ஒருவன் வம்பு செய்கின்றான். இதைப் பார்த்த அனைவரும் அவனை அடிக்கச் செல்கின்றனர். ஆனால் அவள் அவன் இல்லை என்று கூறி காப்பாற்றுகின்றாள்.

**"அவன் மானம் மரியாதையைக் காப்பாற்றியவள் அவள்! மிருகம்போல் காமுகனாய் கண்டபடி சுற்றிக் கொண்டிருந்த அவனுக்கு விழ வேண்டிய அடிகளை, தானே வாங்கிக் கொண்ட, தாய் அவள்! உடம்பை! அடிக்காமல் உள்ளத்தை அடித்து செப்பனிட்ட ஆசிரியை அவள்! எவ்வளவு பெரிய அவமானத்தில் இருந்து, அவனைக் காப்பாற்றி இருகிகறாள்! எவ்வளவு பெரியவள்! கோபமான காளியாகி உடனே கருணையான ஈஸ்வரியாக மாறிய சுயதேவதை அவள். அவனுக்கு தெரிந்த வரை, அவன் அம்மாவிற்கு அடுத்தபடியாக கருணை காட்டியவள் இவள் தான்"**[36] தாய்மைப் பாசத்திற்கு எடுத்துக்காட்டாகவும், தனக்குத் தீங்குச் செய்தாலும், தான் நன்மை செய்யும் பாத்திரமாக வசந்தியை ஆசிரியர் படைத்துள்ளார்.

'நாணயம்' என்ற கதையில் கோவிந்தன் சினிமா ஆசையால் தாயை விட்டுப் பிரிந்து சென்னைக்கு வந்தவன். பேருந்து நிலையத்தில் சுமை தூக்கிப் பிழைப்பு நடத்துகின்றான். எதிர்பாராத விதமாக அவன் காலில் பால் கேன் விழுந்து எலும்பு முறிந்து விட்டது. இதனால் எந்த வேலையும் செய்ய முடியாமல் பசியுடன் வாழ்கின்றான். லாட்டரிச் சீட்டை விற்று பிழைப்பு நடத்த ஆசைப்படுகின்றான். ஆனால் ஒரு பழைய சீட்டைக் கிழவிக்குக் கொடுத்துவிட்டோம் என்பது தெரிந்ததும் அவன் **"இந்த கிழவிக்கு எவ்வளவு பெரிய எதிர்பார்ப்புக்கள்! சாகப்போகிற வயசுல ... எவ்வளவு வாழப் போகிற நம்பிக்கை! துரோகத்திலேயும் பெரிய துரோகம் நம்பிக்கைத் துரோகம் ...**

இந்தக் காசுல சாப்புடறதைவிட பசியையே என்னைச் சாப்பிடும்படி செய்யலாம். இவ கிட்ட நம்பிக்கை ஏற்படுத்தினதே பாவம். இந்தப் பாவத்துக்குக் காசு வாங்கறது அதைவிடப் பாவம் ... அந்தப் பாவம் பசியைவிட மோசமானது. சினிமாவுல நடிக்கலாமுன்னு வந்து ஏமாந்தப்போ எனக்கு எவ்வளவு சங்கடமா இருந்தது. அப்படித்தானே இவளுக்கு ... அதுவும் இந்த வயசுல"[37] வறுமையிலும் நேர்மை என்ற வார்த்தைக்கு ஏற்ப, பசியில் இருந்தாலும் பரவாயில்லை என்று நேர்மையைக் கடைபிடிக்கும் வைராக்கியக் குணம் கொண்ட பாத்திரமாகக் கோவிந்தனை ஆசிரியர் படைத்துள்ளார்.

'பழத்தைத் தாங்கிய சருகு' என்ற கதையில் கணவனை இழந்த திருமலை ஆச்சி தன் மகன் ஆறுமுகத்தைக் சிரமப்பட்டுப் படிக்க வைக்கின்றாள். ஆறுமுகமும் நன்கு படித்து, படிப்பை முடித்து சென்னையில் வேலையில் சேர்ந்தான். உள்ளூரில் உள்ள நாட்டாமையின் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுமாறு தாய் கூறினாள். அதை மறுத்து நகரவாசிப் பெண்ணை மணம் முடித்தான். அது நரக வாழ்க்கையாக அமைந்தது. கிராமத்தில் இருந்த இடங்களை விற்றுவிட்டு தன்னுடன் தாயை அழைத்துச் சென்றான். ஆனால் திருமலை ஆச்சிக்கு அங்கு ஏற்பட்ட நிலை "யாருகிட்டேயும் சொல்லாதக்கா .. மருவமா ... எனக்கு நாகரிகம் தெரியலன்னும் ... மகன அநியாமா கெடுத்திட்டேன்னும் ... முதல்ல சாடையிலேயும் ... அப்புறம் மூஞ்சிக்கு நேராயும் பேசினா ... சாப்பாட்லகூட ஓரவஞ்சனை பண்ணினா. மூச்சுவிஞல, பெத்தமவனும் ... கண்டுங்காணாம இருந்தான். என் ... பேரன் பேத்தியக் கூட ... என் கிட்ட விட மாட்டா ... அதுங்களும் அவா பேச்ச கேட்டு 'எங்க வீட்ல

**யாமே இருக்கே'ன்னு கேட்டுதுங்க. கடைசியா அந்த வீட்லேயே ஒரு ரூம்ல தனியா சமைச்சி சாப்பிடச் சொன்னாங்க ... சாப்பிட்டேன் ... ஆறுமவம் அவளுக்கு தெரிஞ்சும் தெரியாமலும் பணம் தருவான் ... இது போதாதுன்னு ... புண்ணியவதி என்ன துரத்துணுமுன்னு நினைச்சிருக்கா."**[38]

தனக்கு இத்தனை தீமைகளைச் செய்தாலும் மருமகளைக் குறை கூறாமல் பெருந்தன்மையுடன், தன் சொந்த ஊருக்கே வருகிறாள் திருமலை ஆச்சி. மகன் ஆறுமுகத்தை நினைத்துத் தான் வருத்தப்படுகின்றாள். தன் பேச்சைக் கேட்காமல் போனதால் தன் மகனுக்கு ஏற்பட்ட அவமானங்களையும் நினைத்து வருந்தும் அறநிலைப் பாத்திரமாகத் திருமலை ஆச்சியை ஆசிரியர் படைத்துள்ளார்.

'ஆசிரியர் அண்ணாவி' என்ற கதையில் அண்ணாவி தான் குடிவந்த ஊரில் உள்ள பெரியவர்களுக்குப் பாடம் சொல்லி கொடுத்தார். அவர்களுடைய பிள்ளைகளுக்கும் பாடம் சொல்லி கொடுத்தார். அந்த ஊருக்கு ஒரு பள்ளிக் கூடத்தையும் கட்டி முடித்தார். பின்பு தன் மகன் மூலம் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் அனுமதியும் பெற்று பள்ளிக்கூடத்திற்குப் புதிய ஆசிரியர்களும் போடப்பட்டது. புதியதாகப் போட்ட தலைமை ஆசிரியருக்குச் சில அறிவுரைகளை அண்ணாவி வழங்கினார். அது அவருக்குப் பிடிக்கவில்லை. தலைமை ஆசிரியர் அவர் அறையில் புகைபிடித்தார். அதைப் பார்த்த அண்ணாவிக்கு மனம் கேட்காமல் இது புனிதமான அறை. இங்கு இதைச் செய்யாதே என்று கூறினார். உடனே தலைமை ஆசிரியர் **"நான் தலைமையாசிரியர். பி.ஏ.பி.டி. படிச்ச டபுள் கிராஜுவேட். லோயர் கிரேட்ல இந்து வரல. நிர்வாகத்தை எப்படி நடத்துணும், எப்படி எப்படி**

**என் அறைக்குள்ளே நடந்துக்கணுமின்னு எல்லாம் எனக்குத் தெரியும், யூ கேன்கோ நவ். அண்ணாவி, தள்ளாடிக் கொண்டே வெளியே வந்தார்."[39]**

தான் வந்து குடி இருந்த ஊருக்குத் தொண்டு செய்யும் உள்ளம் கொண்டவர், அந்த ஊருக்கு மருத்துவர் இல்லாத குறையைப் போக்கியவர். அப்படிப்பட்ட நல்லவரைத் தான் உருவாக்கிய பள்ளிக்கூடத்தில் தன்னால் நியமிக்கப்பட்ட ஆசிரியர், தன்னையே அவமானப்படுத்தியும், பள்ளியும் ஊர் மக்களும் நன்றாக இருக்க வேண்டும் என்ற குணம் கொண்ட பாத்திரமாக அண்ணாவியைப் படைத்துள்ளார்.

**2.இரக்கக் குணம் கொண்ட மாந்தர்கள்**

பிறர் துன்பப்படுவதைப் பார்த்து அவர்களுக்கு உதவி செய்யும் குணம் கொண்டவர் பலர் உள்ளனர். அது போன்று உறவு முறையில் ஏழ்மையான நிலையில் உள்ளவர்களைப் பார்த்து இரக்கப்பட வேண்டியதும் உண்டு. இரக்கருணம் கொண்டவர்களிடம் உதவி, பயன் ஆகியவைகளைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களையே பழிவாங்கும் நோக்குடன் செயல்படுபவர்களும் உண்டு. அப்படிப்பட்ட இரக்கக் குணம் கொண்ட மாந்தர்களையும் அவர்கள் படும் துன்பங்களையும் ஆசிரியர் பாத்திரங்கள் வழி விளக்கியுள்ளார்.

'எந் நன்றி கொன்றார்க்கும்' என்ற கதையில் முத்தையன் தன் பெரியப்பா மகன் சின்னசாமிக்குக் காவல்துறையில் வேலையில் சேர்ந்து பதவி உயர்வு பெற்றுத் தங்கள் ஊருக்கு வருவதற்குத் தடபுடலாகச் செலவு செய்து வரவேற்றான். தன்னிடம் காசு இல்லாததால் வண்டி மாட்டையும் விற்றுச் செலவு செய்தான், இப்போது கூலி வேலைக்குப் போனால்தான்

உணவு என்பது போல் ஆகிவிட்டது. ஒருமுறை மேலத் தெரு மச்சி வீட்டுக்காரர்கள் பெரியம்மாவை அடித்து விட்டார்கள். அதற்காக அவர்களை வெட்ட அரிவாளை எடுத்துக் கொண்டு துரத்தியவன் இவன்தான். ஆனால், இவற்றையெல்லாம் மறந்து, தன் தம்பியைத் திட்டிவிட்டான் என்பதற்காக முத்தையனைக் கைது செய்யச் சொல்லி அனுப்பினான் சின்னசாமி. அப்போது **"ஊரே வேடிக்கை பார்த்தது. நான் எங்க குடும்பம், எங்க குடும்பமுன்னு எப்போதும் பிரிச்சிப் பேசினேன். என் தம்பி அப்படிப் பேசக் கூடாதுனுன்னு, ரெண்டு கைகளையும் சேர்த்து வச்சிட்டான்; பரவாயில்லை; உடனே விலங்குமாட்டாம, அண்ணனை தள்ளலாமா, வேண்டாமன்னு நாலு நாளு யோசிச்சிருக்கான். டேய், வேடிக்கை பார்க்காதீங்கடா! உங்கள ஒரே நாளுல தள்ளியிருப்பான். நான் என்கிறதினாலே நாலுநாள் யோசித்திருக்கான் முத்தையன் புலம்பிக் கொண்டே திரும்பிப் பாராமல் நடந்தான். வேடிக்கை பார்த்த ஊரார், அந்தச் சிறிது நேர இரக்கத்தில், முத்தையனுக்காக வருத்தப்பட்டார்கள்."**[40] தனக்குத் துன்பம் நேர்ந்தாலும் பெருந்தன்மையாக ஏற்றுக் கொள்ளும் இரக்கக் குணங் கொண்ட பாத்திரமாக முத்தையனை ஆசிரியர் படைத்துள்ளார்.

'மனம் கொத்தி மனிதர்கள்' என்ற கதையில் தம்பித்துரையின் தம்பி நடராஜனுக்குப் பைத்தியம் பிடித்து மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வீட்டிற்கு அழைத்து வந்துள்ளான். இதனால் நடராஜனின் திருமணமும் நின்று விட்டது. அந்தப் பெண்ணின் மீது இரக்கம் கொண்டு மல்லிகாவைத் தம்பித்துரை தான் திருமணம் செய்து கொண்டான். ஆனால் அவளோ இவனை மதிக்கவும் இல்லை. மரியாதை கொடுக்கவும் இல்லை. ஒருமுறை மல்லிகா தம்பிதுரையைப் பார்த்து,

"ஒனக்கெல்லாம் எதுக்குய்யா பெண்டாட்டி? இந்தப் பயித்தியத்தச் சுகமாக்குறதுலயே பாதிச் சொத்த அழிச்சாச்சு. மீதியும் போகப்போவுது. நீயும் இந்தப் பயித்தியத்த விடமாட்ட! ஒன்கிட்ட எதுக்கு இருக்கணும்? எங்கப்பா இந்தப் பைத்தியக்காரன் வீட்ல தள்ளுறதுக்குப் பதிலா பாழுங் கிணத்துள தள்ளியிருக்கலாம். நாசமாப்போற பாவி, வழிய விடுய்யா! ஒன் வாடையே ஆவாது!!

தம்பித்துரை இப்போது மனைவியை அடிக்கப் போக வில்லை. அப்படியே சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்றுவிட்டு, பிறகு நடராஜனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, "பாத்தியா அண்ணா, ஒன் கதியப் பாத்தியா? என் நிலைமையைப் பாத்தியா? இன்னுமா நாம உயிரோட இருக்கணும்?"[41] என்று சொல்லிக் கொண்டே அலறினான்.

தம்பிதுரையை இரக்கக்குணம் கொண்ட பாத்திரமாகப் படைக்கப்பட்டுத் துன்பத்தினை அடைபவனாக ஆசிரியர் படைத்துள்ளார்.

'ஒரு குறிப்பிட்டச் சந்தர்ப்பத்தில்' என்னும் கதையில் தம்பித்துரை சின்ன வயதில் தன் தாய் பட்ட துன்பத்தைப் பார்த்ததால், ஒரு மனநோயாளியைப் போல் ஆகிவிட்டான். பிறர் படும் துன்பமெல்லாம் இவன்படும் துன்பமாகக் கருதியவன். இரக்கக்குணம் கொண்டதால் இவனை ஏமாற்றுவது சுலபம். கல்யாணி என்ற பெண்ணை இவன் காதலித்தான். ஆனால், "அதை ஏன் கேட்கிறீங்க ...? எங்க ஊரு பொண்ணு, எஸ்.எஸ்.எல்.சி. கோட்டடிச்சா. ஒரு கம்பெனில அட்டெண்டரா வேலை பார்த்தா. நான் அவளுக்கு பாடஞ் சொல்லிக் கொடுத்து, பாஸ் பண்ண வச்சேன். பணங்குடுத்தேன். எங்க கம்பெனியிலேயே

மானேஜர் காலைப் பிடிச்சி, ஒரு வேலையில வச்சேன். அவளும், என் மேல உயிரையே வச்சிருந்தாள். ஆனால், விதி சதி செய்துவிட்டது. எங்க கம்பெனியில இருந்த ஸ்டெனோகிராபர் பயல் ... அவளை மயக்கிட்டான். அவளும், டைப்பிஸ்டா இருக்கிற என்னைவிட, ஸ்டெனோகிராபர் தேவலைங்கறது மாதிரி காதல்ல புரமோஷன் வாங்கிட்டா என்னை விட்டுட்டு, அவன் பின்னால் சுத்த்த துவங்கினாள். ஒரு நாள், நாங்கள் சந்திச்ச, அதே கடற்கரையில், அந்தப் பயலோடு சிரிச்சுக்கிட்டு, அவன் தோளில சாஞ்சிக்கிட்டு இருந்ததைப் பார்த்துட்டேன். என் கல்யாணி இப்படியா? ஐயகோ, அவளைத் தனியாய் சந்திச்சி கண்டிச்சேன். உன் மூஞ்சிக்குக் காதல் வேணுமான்னு கேட்டுட்டாள். என்னோட அவள் சுத்தின நாளில அவளை, நான் என்ன வேணுமுன்னாலும் செய்திருக்கலாம். இப்போ, ஏறின ஏணியை உதறிட்டா, ஆனால், அவளை, என் ஆருயிரை, என் இனியவளை என்னால் மறக்க முடியல. அவளுக்கு நான் இல்லாமல் போகலாம். இருந்தாலும், நான் அவளோட மானசிகமாக வாழ்ந்துக்கிட்டு இருக்கேன்''[42] கல்யாணி அவனை ஏமாற்றி வேறு ஒருவனுடன் வாழ்ந்தாலும், நீ போனாலும் பரவாயில்லை உன் நினைவில் வாழ்வேன் என்ற இரக்கக் குணமும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் கொண்ட பாத்திரமாக ஆசிரியர் படைத்துள்ளார்.

'கதையில்லாத நாயகி' என்ற கதையில் தமிழ்ச் செல்வி ஒரு நாடக நடிகை. அவளால் தான் சந்திரன் இயக்கும் நாடகங்கள் அனைத்தும் வெற்றிகரமாக நடந்தது. அதனால் அந்தக் கதையையே சினிமாவாகத் தயாரித்தான். ஆனால் அதிலும்

தமிழ்ச்செல்வி தனக்குக் கதாநாயகி பாத்திரம் தருவான் என்று பட துவக்க விழாவுக்குச் சென்றாள். ஆனால் அங்கே அவளுக்கு ஏமாற்றம்தான் காத்திருந்தது. **“ஐ அம் ஸாரிம்மா. புதுமுகத்தைப் போட்டால் ... அதுவும் தமிழ்ப் பெண்ணைப் போட்டால் படம் ஓடாதாம். டிஸ்ட்ரியூட்டரும், பைனான்சியரும், புரட்யூஸர்கிட்டே கண்டிப்போடு சொல்லிட்டாங்களாம். ஒனக்கு செகண்ட் ரோல் கொடுக்கணுமுன்னா ஏற்கனவே மஞ்சுவை .. நீங்க கொடுத்தாலும் நான் வாங்கிட்ட மாட்டேன். என்னோட ஏமாற்றம் மஞ்சுவுக்கு வரப்படாது. குறைந்தபட்சம் என் மூலம்”**[43] தமிழ்செல்வி தனக்குக் கிடைக்கவில்லை என்றாலும் பரவாயில்லை. அவளையும் ஏமாற்றிவிடாதே என்று கூறுவதிலிருந்து அவளுடைய விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் இரக்கக் குணமும் உடைய பெண் பாத்திரமாக ஆசிரியர் படைத்துள்ளார்.

‘லாரி சிங்கி’ எனும் கதையில் செங்கோடன் மனைவி லாரி சிங்கி. இவர்கள் குடும்பத்துடன் சென்று குரங்குகள் பிடித்து வெளியூரில் கொண்டு விடும் தொழில் செய்து வருபவர்கள். அப்படி பிடிக்கப்பட்டுக் கூண்டில் அடைக்கப்பட்ட குரங்குகளை லாரிசிங்கிடம் விட்டுவிட்டுச் செங்கோடன் வெளியே சென்று விடுகின்றான். குட்டி குரங்குக் கூண்டிற்குள் மாட்டிக் கொண்டதைப் பார்த்து தாய் குரங்கு வெளியில் இருந்து கத்திக் கொண்டிருந்தது. இதைப் பார்த்து இரக்கப்பட்ட லாரிசிங்குக் கூண்டைத் திறந்து குட்டியை மட்டும் வெளியே கொண்டுவர முயன்றாள். ஆனால் இவளைப் பார்த்தவுடன் குரங்குகள் **“லாரிசிங்கி அருகில் வந்து நிற்பது கவனிக்காமலே ‘அடித்தால் அடி’ என்பதுபோல் தாய், சேயைப் பார்க்க,**

சேய் தாயைப் பார்க்க இதரக் குரங்குகள் அரக்கி வந்துவிட்டாள் என்பதுபோல் தாய்க் குரங்கை உஷார் படுத்தும் விதத்தில் கத்தின.

திரும்பிப் பார்த்த தாய்க்குரங்கு, நாலடி தூரம் வரை துள்ளிக் குதித்து நின்றது. குறத்தியை சீறிப் பாய்ந்து பயமுறுத்த முடியாது என்பதை உணர்ந்ததுபோல் அது தன் கண்ணில் சுரந்த நீரை, தோளில் வைத்துத் துடைத்தபோது லாரிச் சிங்கியும், தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள். கூண்டின் உள்ளே குட்டிக் குரங்கு முட்டி மோதியது. இறக்கும்போது, தன் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இறந்த தன் மகனின் சுரணையற்ற கைவிரல்களை சகாக்கள் வலுக்கட்டாயமாகப் பிரித்தபோது, எந்த துன்பம் ஏற்பட்டதோ அந்தத் துன்பம் இப்போதும் அவளுக்கு ஏற்பட்டது”[44] அஃறிணை இனமான குரங்கு படும் துன்பத்தைப் பார்த்து இரக்கப்பட்டு, தன் வாழ்க்கையைப் பற்றி கவலைப்படாமல் திறந்து விடுகிறாள். இரக்கக் குணம் கொண்ட பாத்திரமாக லாரிசிங்கை ஆசிரியர் படைத்துள்ளார்.

‘நட்பு பகைவன்’ என்ற கதையில் (பெயர் இல்லா பாத்திரம்) மன அமைதிக்காக வேண்டி நந்தவனத்தில் ஒருவன் அமர்ந்துள்ளான். அந்த இடம் இப்போது தனியார் அறக்கட்டளைக்குச் சொந்தம். அதனால் வாட்சுமேன் டிக்கெட் கொடுக்க வருகின்றான். ஆனால் அங்குப் பலகாலமாக இருக்கின்ற சீனிவாசன் அதைத் தடுக்கின்றான். ஐய்யா எவ்வளவு நாளாக இங்கே வரார். அவருக்கு டிக்கெட்டா என்று கூறி அவர் சாப்பிட, காய்கறிகள் வாங்கி வா சமைக்கலாம் என்றார். ஆனால் அதற்குள் மேனேஜர் வந்து எப்படி டிக்கெட் இல்லாமல் இவரை

விடலாம் என்று இருவரையும் அடிக்கின்றார். அவர்கள் இருவர் மீதும் இரக்கப்பட்டு எப்படி அடிக்கலாம் என்று கேட்கின்றான். அப்போது சீனிவாசன் என்னைப் பார்த்து சத்தம் போடுகின்றான்.

**“நான் கால்களால் பூமியை உதைப்பதையே - அதோ அந்த செகரட்டரியை ஏறிட்டு ஏறிட்டுப் பார்த்தபடி என்னைத் திருட்டுத்தனமாகப் பார்த்த அந்த சீனிவாசனை தீராத கோபத்துடன் பார்த்தேன். அவன் வாயைத் துடைக்கும் சாக்கில் கண்களைத் துடைத்துக் கொள்கிறான். அப்புறம் வயிற்றைத் தொட்டுப் பார்த்துக் கொள்கிறான். ஒரு ஏழை தன் பாசத்தைக் கூடப் பிழைப்பிற்குப் பலியாக்க வேண்டிய கட்டாயத்தைச் சுட்டிக் காட்டுகிறானோ? வயிற்றில் விழப் போன அடியை நட்பில் வழி வைத்து விட்டதாய்ச் சொல்கிறானோ?”**[45] பழகியவர்கள் படும் துன்பத்தைப் பார்த்து இரக்கக்குணம் கொண்டு அவர்களுக்கு ஆதரவாகப் பேசி அவமானப்படும் பாத்திரமாகப் படைத்துள்ளார் ஆசிரியர்.

### 3. போராட்ட குணம் கொண்ட மாந்தர்கள்

வாழ்க்கையில் தனது உரிமைகளைப் பெறுவதற்கு ஒவ்வொருவரும் போராடித்தான் பெறவேண்டிய நிலை உள்ளது. அதுவும் தனது உரிமையை நிலைநாட்டவும், கடமையைச் செய்யவும், உயிர் வாழ்வதற்கும் போராட வேண்டிய நிலை உள்ளது. அப்படிப்பட்ட மாந்தர்களையும் ஆசிரியர் தனது கதைகளில் கருவாகப் படைத்துக் கதைமாந்தர்களை மனத்தில் நீங்கா இடம்பெறச் செய்துள்ளார்.

‘ஏழை - ஆப்பிள் - நட்சத்திரம்’ எனும் கதையில் லைட்பாய் நாராயணன் தன் குழந்தைக்கு உடல்நிலை சரியில்லாத நிலையில் பட சூட்டிங்க்கு வந்து விட்டான். பட சூட்டிங் ஆரம்பமானது

நளினிகுமாரி வந்தாள். ஒரு ஆப்பிள் தின்றுவிட்டு பாதியை மேஜையில் வைத்து விட்டு நடிக்கச் சென்றாள். பாதி ஆப்பிளையும் தன் வறுமையையும் நினைத்துப் பார்க்க லைட் பாய் பரணியில் இருந்து தவறி கீழே விழுந்து அடிபட்டுக் கிடக்கின்றான். மருத்துவமனையில் கால் முறிந்து யாருடைய ஆதரவுமின்றி போராடிக் கொண்டிருந்தான். ஆனால் அந்தப் படம் **"ஒரு வழியாக 'எங்கள் தரமம் - சமதர்மம்' வெளியாயிற்று. வெற்றிகரமாக ஓடுகிறது. சோஷலிஸத்தை விளக்கும் இந்தப் படத்தை ஒரு மகத்தான சித்திரம் என்று எல்லோரும் பாராட்டினார்கள். மனிதர்களுக்குள் பேதமில்லை என்ற சித்தாந்தத்தை 'தத்துவப்படம்' என்று பாமாலை சூட்டினார்கள். நடிகர் கமலனுக்கு 'சோஷலிஸம் கொண்டான்' என்றும் நளினிகுமாரிக்கு 'சோஷலிஸத்தின் தலைமகள்' என்றும், டைரக்டருக்கு, 'சோஷலிஸ திலகம்' என்றும் கலையன்பர்கள் பட்டம் சூட்டினார்கள்."**[46]

தனக்கு விடிவு காலம் பிறக்காதா, ஒருவேளை சோறு ஒழுங்காக கிடைக்காதா? தனது மகனுக்கு மருத்துவம் பார்க்கக் காசு கிடைக்காதா என்ற எண்ணத்துடன் தன் வாழ்க்கைப் போராட்டத்தை எப்படி நடத்துவது என்று நாராயணன் முறிந்த தன் தொடையைப் பார்த்து ஏங்கிக் கொண்டு இருப்பதாக இந்தப் பாத்திரத்தை ஆசிரியர் படைத்துள்ளார்.

'பிறக்காத நாட்கள்' என்ற கதையில் பணக்கார குடும்பத்தைச் சேர்ந்த குமார்க்குப் பிறந்த நாளை விமர்சையாகக் கொண்டாடுகின்றனர். அந்த வீட்டு வேலைக்காரி காத்தாயின் மகன் முனுசாமி இதைப் பார்த்துக் கொண்டு இருந்துவிட்டு, தானும் அவனுக்குப் பிறந்த நாள் பரிசாகத் தான் வைத்திருந்த கடலை

மிட்டாயைக் கொடுத்தான். அதே வேகத்தில் திட்டிவிட்டு முழுசாகக் கொடுத்ததைத் தூக்கி வெளியே எரிந்தான். இதைப் பார்த்த முனுசாமி முதலாளி வீட்டுப் பொருள் எதையும் சாப்பிடாமல் அழுது கொண்டே வீட்டிற்கு வந்து விட்டான். தனக்குப் பிறந்த நாள் கொண்டாடச் சொல்லி கேட்கின்றான். அதைக் கொண்டாட பணம் இல்லை. இதனால் தந்தை வேலை செய்யும் முதலாளியிடம் வேலைக்கு முன் பணமாக வாங்கி வந்து காத்தாயிடம் கொடுத்து விட்டு வேலைக்குச் சென்று விடுகின்றான். குமாருக்குப் பிறந்தநாள் துணி எடுக்கக் காத்தாயி வெளியே செல்கின்றாள். அப்போது தங்கியிருக்கும் வீட்டிற்கு வாடகை தராமல் உள்ளது என்று வீட்டுக்காரன் கேட்கும்போது முனுசாமி தனக்கு பிறந்தநாள் கேக் வாங்கி வர கூறுகின்றான். தனக்கு வாடகை தராததால் கோபம் கொண்ட வீட்டுக்காரன் **"இடியெனச் சிரித்துவிட்டு, அடடே ... நீங்கூட பொறந்தநாள் ... வச்சிட்டிங்களா? நாடு உருபட்டாப் லத்தான் ... கேக் வாங்க காசு இருக்கு ... வாடக பாக்கியக் கொடுக்க வக்கு இல்லியா ... காத்தாயி ... ஒன்னத்தான் ... வாடகப் பணத்தை தரப் போறியா ... இல்லை ... காலி பண்றியா? ... இப்பவே ரெண்டுல ஒன்னு தெரியணும்"**[47] என்றார்.

இன்றைய சமுதாயத்தில் பணக்காரர்கள் சிலர் ஆடம்பரத்திற்காகவும் பெருமைக்காகவும் ஏதாவது ஒரு நிகழ்ச்சி நடத்தி வருகின்றனர். அனைவரும் தன்னைப் புகழ்ந்து பேச வேண்டும் என்பதற்காகவே விழா வைத்துக் கொண்டாடுகின்றான். ஆனால் வறுமையில் வாழும் ஏழை தன்னிடம் பணம் இல்லை. கடன் வாங்கியாவது இதுவரை எதையும் கேட்காத மகன் முனுசாமியின் பிறந்தநாள் நிகழ்ச்சியைக் கூட கொண்டாட

முடியவில்லையே என்பதையும் அவர்கள் வறுமை நிலையையும் ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ளார்.

'போதும் உங்க உபகாரம்' என்னும் கதையில் தகப்பன் இல்லாத காத்தாயியைப் பெத்துப் போட்டுவிட்டு அவள் அம்மா வேறு ஒரு ஆணுடன் ஓடிவிட்டாள். காத்தாயிக்கு இரண்டு கால்களும் சூம்பிய நிலையில் (நடக்க முடியாத) உள்ளது. இந்தக் காலைகாட்டித் தான் அவள் பாட்டி அதாவது தன் தாயின் அம்மா. பிச்சை எடுத்து கொண்டு இருந்தாள். காத்தாயி இப்போது விவரம் தெரிந்தவளாகிவிட்டாள். அதனால் தன் பாட்டியிடம் **"ஒருநாள் என்கிட்ட 'ஆயா ... ஆயா' என் கால காட்டினா, ஒன்கு அர ரூவாதான் கிடக்கிது. அதனால ஒரு விஷங்குடுத்து என்னக் கொன்னுடு. அப்போ என் பிணத்தக் காட்டினா பத்து ரூவாயாவது தேறும். நீயும் ஒரு தொழில் செய்யலாம். என் காலுதான் உடம்பு மாதிரி ஆகப் போறதில்லை. உடம்பாவது காலுபோல ஆவட்டும். உனக்கும் பாரமில்லே'ன்னு சொன்னா."**[48]

'கொடிது கொடிது வறுமை கொடிது. அதனினும் கொடிது இளமையில் வறுமை' என்று ஔவையார் கூறியுள்ள கூற்றிற்கு இணங்க தாய் தகப்பனை இழந்த; பாட்டியின் ஆதரவிலுள்ள காத்தாயின் வாழ்க்கைப் பயணத்தைத் தொடர பயன்படாத கால்களைக் காட்டிப் பிச்சை எடுத்து வந்துள்ளாள் அவள் பாட்டி. ஆனால் தன் இயலாமையையும் இல்லாமையும் நினைத்த காத்தாயி ஏன் கால்களைக் காட்டிக் கிடைக்கும் வருமானத்தை விட இறந்தபின் என் உடலை காட்டி கிடைக்கும் வருமானத்தில் நன்றாகப் பிழைத்துக் கொள் என்று கூறும்படி காத்தாயி பாத்திரத்தை வறுமைநிலை மாந்தராக ஆசிரியர் படைத்துள்ளார்.

'ஒரே ஒரு ரோஜா' என்ற கதையில் சுப்பையா வகுப்பில் நன்றாகப் படிக்கக் கூடியவன். ஆனால் அவன் அம்மா உடம்பு சரியில்லாதவள். அப்பா ஏழை விவசாயி. இதனால் தினமும் வீட்டு வேலையில் வயல் வேலை பார்த்து விட்டுதான் காலதாமதமாக வகுப்புக்குச் செல்ல முடியும். ஆனாலும் அனைத்துப் பாடத்திலும் அவன்தான் முதல் மாணவனாக இருப்பான். அப்படிப்பட்ட அவன் இப்போது பள்ளிக்கு வரவில்லை அதை ஆசிரியர் கேட்கும்போது,

**"சுப்பையா வரமாட்டான் ஸார் ... அவன் அம்மா இறந்துட்டாங்க ... அப்பா, குத்தகை நிலத்த விட்டுட்டு ... மரம் வெட்டப் போறாரு ... எங்க நிலம் அது. நாங்க பிடுங்கிட்டோம். சுப்பையா, மெட்ராஸுக்குப் போயிட்டான்**

**மெட்ராஸுக்கா...? மெட்ராஸ்ல என்ன பண்றான்?**

**எங்க அண்ணங் மெட்ராஸ்ல காலேஜ்ல படிக்கிறாங்க. அவங்களுக்கு ஹாஸ்டல் சாப்பாடு ஒத்துக்கல ... அதனால, சுப்பையா அவங்களுக்கு சமைச்சிப் போடப் போயிருக்கான். மாதம் இருபது ரூபாய் சம்பளம், அய்யாகிட்டேயே ரூபாயைக் கொடுக்கும்படியா லெட்டர் போட்டிருக்கான்"**[49]

பள்ளியில் சிறகடித்து படிக்க வேண்டிய அவன் வறுமையுடன் கொடுமையில் சமையல் கூடத்தில் சிறைபட்ட அடிமையாக இருப்பதாக ஆசிரியர் சுப்பையா பாத்திரத்தைப் படைத்துள்ளார். அதுவும் அடிமை முறையையும், குழந்தைத் தொழிலாளர் முறையும் அகற்ற வேண்டும் என்ற கருத்தை மையப்படுத்திப் படைத்துள்ளார்.

'முடியாத செய்தி' என்னும் கதையில் சிதம்பரம் வனத்துறைக்குச் சொந்தமான பொதுஇடத்தில் டிபன் கடை வைத்து நடத்தி வருகின்றான். முக்கியமாகக் காட்டில் விறகு

வெட்டப் போகும் மக்கள் இவனிடம் வடை, டீ, சாப்பிட்டுச் செல்வார்கள். ஆனால் வனஅதிகாரிகளும், போலீஸ்காரர்களும், ஊர் கணக்குபிள்ளையும் பணம் தராமல் பொருள்கள் மட்டும் அனுபவித்து வந்தனர். சிதம்பரம் அன்று போலீஸ்காரரிடம் காசு கேட்க வேண்டும் என்று ஒரு முடிவுக்கு வந்து இருந்தான். கூலிவேலை செய்யும் மக்களும் அங்கு இருந்தனர்.

போலீஸ்காரர் யாரைப் பார்த்துக் காசு கேட்கிறாய். உன் கடையைக் குளோஸ் பண்ணி விடுறோம்' என்றார். உடனே அங்கு இருந்தவர்களும் சிதம்பரமும், "என்ன குளோஸ் பண்ணவும் அதிக நேரம் ஆவாது ... எங்கள ... செக் பண்ண ஒங்களுக்கு என்னடா உரிமை இருக்கு"

இன்னொருவர் எழுந்தார்.

**"ஏண்டா ... பேசற ... தேவடியா மவனுவள ... தூணுல வச்சுக் கட்டுங்க ... முந்தா நாளு ... நம்ம ... பொன்னம்மா கிழவிய அடிச்சிருக்கான். நேத்து நம்ம ராமன செருப்ப வச்சே ... மூஞ்சில அடிச்சிருக்கான். இவன் கடையை ... ஓசில தின்னு தின்னே உருப்படாமப் பண்ணியிட்டான் ... இனுமயும் நாம பொறுத்தால் ... இவங்க ... நம்மள அடிச்சத நியாயப்படுத்துறதா ஆயிடும்"**[50] அனைவரும் ஒன்று சேர்ந்து போராடினால் நியாயம் வெற்றி பெறும் என்பதை ஆசிரியர் சிதம்பரம் பாத்திரத்தின் வாயிலாக உணர்த்தியுள்ளார்.

'மானுடத்தின் நாணயங்கள்' என்ற கதையில் சிவகாமியை, தனக்குச் சேரவேண்டிய வரதட்சணைக்காக அவள் கணவன் மார்த்தாண்டம், அவள் தம்பி தங்கராஜ் கடையில் விட்டுவிட்டு வருகின்றான். தங்கராஜ் தன் அக்காள் சிவகாமியை ஊருக்கு ரயிலில் ஏற்றி அனுப்புகின்றான். ஆனால் சிவகாமி பிறந்த

வீட்டிற்குச் சென்றாள். தாய், தந்தையருக்குச் சுமையாக இருக்க வேண்டாம் என்று கருதி, மீனாட்சியம்மன் கோவில் முன்னால் துணியை விரித்து அதில் குழந்தையைப் போட்டுவிட்டு, இவளும் அந்த **“கண்ணறியா பையன், கண் தெரியாக் கிழவி; ரோகக்காரர்கள்; ஊனமுற்றவர்கள்; ‘ஞானம்’ பெற்றவர்கள். முதுமையில் தள்ளாடுபவர்கள் - முதலியவர்களை உள்ளடக்கிய அந்தப் பிச்சைக்காரக் கூட்டத்தைப் பார்த்தாள்; பிறகு துக்கத்தைச் சுமந்து, இப்போது துக்கத்தால் சுமக்கப் பட்டவள் போல் - சிவகாமி, அந்தக் கூட்டத்தில் ஒரு மூலையில் அவளுக்கென்றே ஒதுக்கப்பட்டது போலிருந்த இடத்தில் குழந்தையைத் துணியோடு சேர்த்துத் தரையில் கிடத்தினாள். குத்துக் காலிட்டு உட்கார்ந்தாள். கைகளைக் கிண்ணம் போல் குவித்து கொண்டாள்.”**[51]

வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெற வேண்டும் என்ற எண்ணத்தால் பிறந்த வீடு செல்லாமல், பிச்சை எடுத்தாவது நிம்மதியாக வயிற்றுப்பசியைப் போக்கிக் கொள்ளலாம் என்று சிவகாமி பாத்திரத்தின் மூலம் ஆசிரியர் காட்டியுள்ளார்.

‘சமூக புயலில் ஒரு காதல் கூடு’ என்னும் கதையில் முனுசாமியிடம் மீன் பிடிக்கும் வேலைக்காரனாக உள்ளவன் கண்ணன். இருந்தாலும் தன் மனத்தில் பட்டதைத்தான் செய்வான். முனுசாமியிடம் மின்விசைப் படகுகள் உள்ளது. இவர்கள் நடுக்கடலில் மீன்பிடிக்க வேண்டும். ஆனால், கட்டுமரக்காரர்களின் மீது மோதவும், வலைகளை அறுத்துவிடும்படி கூறும் முனுசாமியின் பேச்சைக் கேட்கவில்லை, அதனால் அவன் ஒருகாலை இழக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. தன் காதலி முனுசாமியின் மகள் மச்ச காந்தியையும் இழக்க நேரிட்டது.

ஆனால் மச்ச காந்தியிடம் அவள் தந்தை உன்னை ஏமாற்றியதால் தான் கடல் காவல் தெய்வம் அவன் காலை எடுத்துக் கொண்டது என்று பொய்யான தகவல் கூறி வேறு ஒருவனுக்கு மணம் முடித்து கொடுத்து விட்டான். ஆனால் இந்த உண்மை தெரியாத அவள், கண்ணனைப் பார்த்து நாம் சேர்ந்து வாழலாம். யாரும் தடுக்க முடியாது என்று கூப்பிட்டாள். அதற்குக் கண்ணன் **"நான் பயப்படல ... நீ இல்லாம என்னாலயும் வாழ முடியல. இருந்தாலும் நீயும் நானும் ஒண்ணு தெரிஞ்சுக்கணும். நாம குடித்தனம் பண்ணலாம். ஒப்பனால ஒண்ணும் பண்ண முடியாது. ஒன் நயினா ஒதுங்குறது மாதுரி பாவலா பண்ணிட்டு ... ஆள்பலம் உள்ள என்கிட்ட நேரடியா மோதாமல் கடலுல கட்டுமரத்தோட போறவங்க மேலே மோட்டார் படகை விட்டுப் பழிவாங்கப் பார்ப்பார். இதனால் அவருக்கும் ஆளு சேரும் பாரு ... நம்ம தனிப்பட்ட காதலுக்காக நம்ம சமூகம் ரத்தக் காட்டேறியா மாறப்படாது"**[52] என்பான்.

கண்ணன் தன் சமூக மக்கள் நலனுக்காகத் தன் முதலாளியிடம் போராடியதில் தன் ஒரு காலையே இழக்கக் கூடிய நிலை ஏற்பட்டது. இந்தப் போராட்டத்தில் தன் காதலையும் இழக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. உண்மை தெரிந்து சேர்ந்து வாழலாம் என்று கூறும்போது கூட, நமது சமூக மக்கள் பாதிப்பார்கள் என்று கூறும் போராட்ட உறுதி கொண்ட பாத்திரமாகக் கண்ணனை ஆசிரியர் படைத்துள்ளார்.

'வாய்தா' எனும் கதையில் இருசப்பனின் தன் தாய் திருடியதாகக் கூறி அவள் மடியைப் பிடித்து இழுத்த மாசிலாமணியை வெட்ட அரிவாள் எடுத்துக் கொண்டு

ஓடியவன். சில நாட்கள் கழித்து மாசிலாமணியை இருசப்பன் பொதுக் கூட்டத்தில் இருந்தபோது தரக் குறைவாகப் பேசியதாக வழக்குப் பதிவு செய்து கோர்ட்டில் இருந்து சமன் வந்தது. தவறாமல் நீதிபதி கூறிய அனைத்து நாட்களும் சென்றான். ஆனால் மாசிலாமணியோ பல நாட்கள் வரவே இல்லை. இருசப்பன் வழக்குக்காகக் கோர்ட்டுக்குக் கிளம்புவதை **“அவமானம் கிடக்கட்டும் அதைவிட, கொடூரமானது வாய்தாவிற்கு ஆயத்தமாவது. ஐந்து மணிக்கே, எழுந்து, கோரையாய் வளர்ந்த தாடியை மழித்துவிட்டும், குளித்து முடித்துவிட்டும், வக்கீலுக்கு நூறு ரூபாய் ... வழிப்பயணம் அய்ம்பது என்று, எப்படியோ பணம் திரட்டி, இரண்டு பஸ்களைப் பிடித்து ஓடவேண்டும். இந்தப் பணத்திற்காக, வாய்தா தோறும், ஆட்டை விற்றாயிற்று ... கோதுகளை விற்றாயிற்று ... கம்மா நிலத்திற்கென்று ஒதுக்கப்பட்ட எருக்குழியை விற்றாயிற்று. இறந்து போன அம்மாவின் தாலியை விற்றாயிற்று. எல்லாம் தீர்ந்த பிறகு, இந்த வாய்தாவிற்கு, கந்து வட்டிக்கடன் வாங்கியாற்று”**[53] என்கிறான்.

இருசப்பன் செய்யாத குற்றத்திற்காக அதுவும் தன் தாயைத் தரக்குறைவாகப் பேசியவனைத் தட்டிக் கேட்டதால் தன் செல்வங்கள் அனைத்தையும் இழந்தும் தான் கொண்ட கொள்கையில் உறுதியுடன் போராடிக் கொண்டு இருக்கின்றான். இந்த தவறு செய்தபோது அவனுக்கு இருபது வயது. இப்போது முப்பது வயது. இன்றும் நியாயம் கிடைக்கப் போராடிக் கொண்டு இருக்கும் பாத்திரமாக இருசப்பனை ஆசிரியர் படைத்துள்ளார்.

‘புதிய விதைகள்’ என்ற கதை ஒரு புதிய சமுதாயச் சீர்திருத்தத்தை ஏற்படுத்தும் கதையாகத்தான் அமைந்துள்ளது.

இந்தக் கதையில் அன்னம்மாள் குடும்பம் வசதி படைத்த குடும்பம். அவர்கள் வீட்டில் வேலை செய்யும் தொழிலாளி மாடசாமி. தன் மகன் வேலாயுதம் புதிய சட்டை கேட்டான் என்பதற்காகக் கடன் கேட்க அன்னம்மாள் வீட்டிற்குச் செல்கின்றான் மாடசாமி. ஆனால், அவள் என் மகன் ராஜதுரை சட்டையைப் போட்டுக் கொள் என்று பணம் தராமல் சட்டையைக் கொடுத்து அனுப்புகிறாள்.

திருவிழாவில் ராஜதுரையை, வேலாயுதம் தன் நண்பர்களுடன் சேர்ந்துகொண்டு பெயரிட்டுக் கூப்பிடுகின்றான். உடனே ராஜதுரை 'கூலிக்கார நாயே! யாரையடா, டா போட்டு கூப்பிடுறே' என்று கூறி அடிக்கின்றான். பதிலுக்கு வேலாயுதம் அவனை அடித்து விடுகின்றான். விலக்க வந்த அன்னம்மாள் கையையும் பிடித்துத் தள்ளி விடுகின்றான். ராஜதுரை அப்போது எச்ச கல நாயே! என் சட்டையைக் கழட்டி கொடுடா என்றான். மாடசாமி ஓடிவந்து வேலாயுதத்தை அடிக்கப் போனான். மாடு மேய்த்து கொண்டு இருந்த இசக்கி அவர் கையைப் பிடித்துக் கொண்டு **"ஏன் ... அடிக்கக்கூடாது ... ஏழைங்கள ... அடிக்கிறது இவன் அப்பா காலத்தோடயும் ... உம்ம காலத்தோடயும் முடிஞ்சிட்டு ... இனிமேல் அடிச்சா ... முப்பித்திரண்டும் கீழே விழும்"**[54] என்றான்.

மேலும், **"எதுக்குடா கலங்குற ... இந்தா ... என் துண்டு ... பத்து மாட்டை மேச்சதுக்காவ கர்ணம் வாங்கிக் கொடுத்தது ... இத கட்டிக்கிட்டு, டவுசரையும் சட்டையையும் அவன் முகத்துல விட்டெறி ...**

மாடசாமி, தன் மேல் துண்டை எடுத்துக் கொடுக்கப் போனபோது, **"விஷயத்த கேக்காமலே அவன ... அடிக்கப் போன ஒம்மோட துண்டு ... அவன் இடுப்புல நிக்காது ... இந்தாடா வேலு, இறுக்கிக்கட்டுடா ..."**[55] என்றான்.

இசக்கி உரிமையை இழக்காமல் இருக்க அனைவரும் சமம் என்ற சிந்தனையை உடையவன். போராட்டச் சிந்தனையைத் தூண்டும் பாத்திரமாக வேலாயுதத்தைப் படைத்துள்ளார்.

'சுகமாகிப் போன வெயில்' என்ற கதையில் லட்சுமி என்ற பெண் தன் கணவனுடன் சாலை போடும் பணியில் கூலி ஆளாக வேலை பார்த்து வருகின்றாள். நாள் முழுவதும் வேலைபார்க்கும் அவர்களுக்குச் சரியான கூலி கொடுப்பதில்லை. அதனால் லெட்சுமி சூப்பர்வைசரிடம் **"சூரியன் போய் ஒரு மணி நேரமாகுது ... எட்டு மணி டூட்டி போய் ரெண்டு மணியாவுது. அதனால நாங்க சிரிச்சு பேசினாலும் தப்பில்ல ... எங்களை இந்தப் பாடுபடுத்தும் உங்களையும், காண்டிராக்டர் மவராசனையும் திட்டிப் பேசினாலும் தப்பில்ல ... நீங்க எங்களை தண்டங்களான்னு சொன்னாலும் தப்பில்ல ஏன்னா ... தண்டமாத்தான் வேலை பார்க்கோம் ...**

**'லட்சுமி ... ஒனக்கு வாய் நீளுது'**

**'என்ன ஸாரே பின்னே ... பீஸ் வேலைன்னு சொல்லி கட்டி வந்தீங்க ... அப்படின்னா தினமும் இருபது இருபத்தஞ்சு ரூபாய் கிடைக்குமேன்னு நாங்களும் பத்து ரூபாய் பஸ் சார்ஜ் இங்கே வந்தோம். வந்த பிறகு, ஆணுக்கு 15 ரூபாய் ... பெண்ணுக்கு 10 ரூபாயின்னு சொல்லிட்டீங்க ... வேற வழியில்லாம நாங்களும் பொறுத்துக்கிட்டோம் ... ஏழு மணியாவுது ... இன்னும் விடியல. நல்ல சூப்பர்வைஸர் இதையும் கணக்குல எடுத்துப்பாங்க"**[56] என்றாள்.

இதில் குறைந்த ஊதியத்தில் அதிக நேரம் வேலை பார்க்க வேண்டும் என்பதை எதிர்த்துப் போராடும் பெண்ணாகவும், வேலை பார்க்கும்போது சிரித்துப் பேசினால் தப்பில்லை,

உங்கள் வேலை முடிந்தால் சரி என்று எதிர்த்துப் பேசும் பெண்ணாகவும் லட்சுமி பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

'எக்குடி தோற்பினும்' எனும் கதையில் நிருவாகத்தின் கவனக்குறைவால் ஒரு தொழிலாளி இறந்து விடுகின்றான். அவனுக்கு உரிய நிவாரணம் வழங்க வேண்டும் என்று சக தொழிலாளர்கள் போராடுகின்றனர். அதனால் வேலை நிறுத்தம் ஏற்படுகின்றது. இதனால் நிருவாகத்தினர் பக்கத்தில் பொதுஇடத்தில் குடியிருக்கும் தொழிலாளர்களை அழைத்துச் செல்ல காவல்துறை உதவியுடன் வருகின்றனர். அங்குச் சுந்தரம், பசவப்பா, சதாசிவம் உள்ளனர். அவர்களிடம் உங்களுக்கு ஒரு மாதம் தினக்கூலியாகவும், பின்பு நிரந்தர ஊழியராகவும், மாற்றித் தங்க இடமும் தருகின்றோம் வாருங்கள் என்றனர். ஆனால், சதாசிவம் உரிமைக்காகப் போராடும் நம் வர்க்க தொழிலாளர்களுக்கு ஆதரவாக இருக்கலாம் என்றும்,

**"புராஜெக்ட் தொழிலாளர்கள் ... சகவாச தோசத்தாலோ என்னவோ ... பூர்ஷ்வா மனோபாவம் கொண்டுநம்மிடம் பாராமுகம் காட்டியது உண்மைதான் ... ஆனால் இப்போது அவர்கள் தங்களைத் தாங்களே அடையாளம் காணத் துவங்கி விட்டார்கள். இந்த சமயத்தில் ... 'எக்குடி தோற்பினும் தோற்பது நின்குடி' என்பதை மனதில் வைத்து ... 'நாங்கள் ... இப்போதும் எப்போதும் உங்கள் சோதர்கள்' என்று சொல்லாமல் அதைச் செய்து காட்ட வேண்டுமா ... இல்லை ... கூட்டம் அசையாது நின்றது"**[57] இறந்த தொழிலாளியின் உரிமைக்காகப் போராடும் நம் தொழிலாளர் வர்க்கத்தினருக்கு ஆதரவாகத் தான் இருக்க வேண்டும் என்றும், முதலாளி கொடுக்கும் சலுகைகளுக்கு நாம் யாரும் அடிபணியக்கூடாது

என்றும் அனைவரையும் ஒற்றுமைப்படுத்திப் போராடும் பாத்திரமாகச் சதாசிவத்தை ஆசிரியர் வார்த்துள்ளார்.

'நடந்தது' என்ற கதையில் அலுவலகத்தில் நடக்கும் பணப் போராட்டத்தைக் காட்டியுள்ளார். பண்டாரத்தை மங்களூருக்கு அலுவல் சம்மந்தமாக அனுப்புகின்றனர். அவன் முன் பணம் வேண்டும் என்று விண்ணப்பிக்கின்றான். கிடைக்கவில்லை. நீ போ நான் அனுப்புகின்றேன் என்கிறார் மேலாளர். ஆனால் அவனுக்குப் பணம் அனுப்பவில்லை. அதனால் ஒரு மாதம் கழித்துதான் அலுவலகத்திற்கு வந்தான். அவனைக் கண்காணிப்பாளரும், மேலாளரும் ஏன் இத்தனை நாள் வரவில்லை என்றும், அதனால் உனக்கு வருகைச்சான்று (ஆப்செண்ட்) போட்டேன் என்றும் கூறுகின்றனர். உடனே சதாசிவம், **"யார் ஆப்செண்ட் ஆனது, இன்னொரு தடவை இப்படிக் கேட்டால் எனக்கு கெட்ட கோபம் வரும். நான் ஆபீசிற்கு டயமுக்கு வரக்கூடாதுன்னு நீங்க திட்டம் போட்டு, அட்வான்ஸ் அனுப்பாட்டாலும், என்னால் கடமையாற்றாமல் இருக்க முடியும்! கடமையாற்ற ஆசை ஒரு பக்கம்; காசில்லாத கொடுமை ஒரு பக்கம். கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். இந்த மங்களூருக்கும் பெங்களூருக்கும் இடைப்பட்ட முந்நூறு கிலோ மீட்டர் தூரத்தை இருபத்து நான்கு நாட்களாய் நடந்தே கழித்தேன்! இதோ இப்பத்தான் வரேன்! இன்னும் வீட்டிக்குக் கூடப் போகலை. வர வர ஆபீஸ்களில் தியாக உணர்வுக்கே மதிப்பில்லாமல் போச்சு!"**[58] என்கிறான்.

பண்டாரத்தை அலுவல் பணிக்கு அனுப்பி வைத்துவிட்டு அவனுக்கு அனுப்ப வேண்டிய பணத்தை அனுப்பாமல் தன் சுயநலத்துக்காகப் பழிவாங்கும் போக்கில் அதிகாரிகள் நடந்து

கொள்கின்றனர். தான் பார்க்கும் பணியைக் கூட சரியாகச் செய்ய விடாமல் அவன் போராடி, எதிர்நீச்சல் போட்டுத்தான் பணிபுரியக் கூடிய பாத்திரமாக பண்டாரத்தை ஆசிரியர் காட்டியுள்ளார்.

### 4. பாலுணர்வில் பாதிக்கப்பட்ட மாந்தர்கள்

'பிணம் தின்னும் சாஸ்திரங்கள்' என்ற கதையில் வள்ளி தினமும் கூலி வேலைக்குச் சென்று பிழைப்பை நடத்தக் கூடிய ஓர் ஏழைப் பெண். அவள் ஒருநாள் மாலை வேலை முடிந்து வீட்டிற்கு வரும்போது சீமைச்சாமி என்பவன் அவள் கையைப் பிடித்து இழுத்து, அவளைக் கற்பழிக்கப் பார்க்கின்றான். வள்ளி சத்தம் போட்டதால் செல்லமுத்துவும் சின்னானும் ஓடிவந்து காப்பாற்றினார்கள். காவல்துறையில் வழக்குப் பதிவு செய்யப்பட்டு, நீதிமன்றத்தில் வழக்கு நடக்கிறது.

சீமைச்சாமியின் வக்கீல் வள்ளியிடம் நடந்ததை விசாரணை செய்கிறார். நீதிபதி வள்ளியைப் பார்த்து நடந்ததை கூறு என்கிறார். நான் வேலை முடிஞ்சு வீட்டுக்கு வரும்போது இவரு (சீமைச்சாமி) புல்லுகட்ட தூக்க கூப்பிட்டாரு. நான் சென்றேன். அப்போ **"திடீர்னு ... சீமைச்சாமி என் முதுகுல தலைய வச்சார். நான் துள்ளிக் குதிச்சேன். உடனே என்னைக் கட்டிப் பிடிச்சார். 'விட்டுடும் எசமான் விட்டுடும்'னு கெஞ்சினேன். என் கையில் பத்து ரூபாய் திணிச்சார். நான் 'ஒம்மாகிட்டே கொண்டு குடு'ன்னேன். உடனே, அரிவாளைக் காட்டி, 'ஒரே வெட்டா வெட்டிடுவே'னு சொன்னார். நான் பயந்து நின்னபோது திடீர்னு என்மேல பாஞ்சு, தோளுல ... தோளுல ... மன்னிச்சுடுங்கய்யா ... இந்த ஒரு தடவைதான் அழுதிட்டேன் ... தோளுல கடிச்சாரு ரத்தம் கொட்சிச்சு ... அப்புறம் ஜாக்கெட்டைக் கிழிச்சாரு. இதோ பாருங்க தளும்பு.**

புடவையை அவிழ்த்தாரு. நான் முடமா நின்னேன். என்னைக் கீழே தள்ளுனாரு. நான் கூப்பாடு போட்டேன். சத்தம் கேட்டு செல்லமுத்துவும், சின்னானும் ஓடி வந்தாங்க. இவன் உடனே ஓடிட்டான். இப்போ என்னால வெளியில தலைகாட்ட முடியல எசமான்"[59] என்றாள்.

ஆனால் இவ்வளவையும் கேட்டுவிட்டுச் சீமைச்சாமி வக்கீல் வரதாச்சாரியார் என்னவென்றால் "நான் சொல்றேன். நீ காசுக்கு விலை போறவள். அன்றைக்கு பனந்தோப்பிலேயோ, புளியந்தோப்பிலேயோ செல்லமுத்தோடு சரசம் ஆடிக் கிட்டிருந்தே. உன்னைக் கட்டிக்கறப்போற சின்னானோட தாய் மாமா மகன் கருப்பன் பார்த்துட்டான். இருட்டிலே அவனுக்கு யாருன்னு தெரியலே. இதப்பார்த்துட்டு செல்லமுத்து ஓடிட்டான். அந்தப் பக்கம் தற்செயலா வந்த சீமைச்சாமி மேலே ஒரு கவுரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர் மேலே பழியப் போட்டுட்டே. எங்கேயோ நடந்த அசிங்கத்தை இயற்கையாக இருக்கணும் நீயும் போலீசுமா சேர்ந்து ஓடைப் பக்கமா நடந்ததா ஜோடிச்சுட்டே! உண்டா இல்லையா?"[60] என்றார்.

உண்மையாகப் பாதிக்கப்பட்ட ஒரு ஒடுக்கப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த பெண்ணுக்கு நீதிமன்றத்தில் கிடைத்தது 'தேவடியாள்' என்ற பட்டம் தான். ஏழைகளுக்கு நீதி ஒரு எட்டாக் கனியாக ஆகிவிடுகிறது. நிதி இருந்தால் நீதியைக் கூடவாங்கி விடலாம் என்பது போல் ஆகிவிட்டது வள்ளியின் நிலை. படித்தவர்கள் தன் வாதத் திறமையால், படிக்காத, பாமர மக்களை எளிதாக ஏமாற்றி விடுகின்றனர். கடைசியில் பாதிக்கப்படுவது சாதாரண கீழ்த்தட்டு மக்கள்தான் என்பதை இந்த பாத்திரம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

'சிட்டுக் குருவியும் சில சிநேகித நாய்களும்' எனும் கதையில் ஜக்கம்மா ஒரு சக்கிலியக் குடும்பத்துப் பெண். அவளுக்குத் திருமணம் முடிந்து தன் கணவனுடன் வாழ்ந்து வருகிறாள். அந்த ஊர் பண்ணையார் தன் செருப்பைத் தைக்க வருகிறார். அவள் அழகைப் பார்த்துக் கொச்சையாகப் பேசுகிறார். ஜக்கம்மா இதைத் தன் கணவனிடம் கூறுகின்றாள். அவன் கண்டுகொள்ள வில்லை. அதனால் அவனைப் பிரிந்து தன் தகப்பனுடன் வாழ்கிறாள். கூலி வேலைக்குப் போகும்போது இவள் மீது அன்புகாட்டும் இராமசாமியின் துணை கிடைக்கிறது. அவன் இவள் மீது கை போட்டுப் பேசுவதைப் பண்ணையார் பார்த்து விடுகிறார்.

உன் அப்பனிடம் சொல்லப் போகின்றேன். சொன்னால் உன்னைக் கொலை செய்து விடுவார் என்று கூறி அவளை மிரட்டுகிறார். எதுவும் சொல்ல வேண்டாம் என்னை மன்னித்து விடுங்கள் என்று கூறி அவர் காலில் விழுந்து கேட்கிறாள். ஆனால், அவர் அள்ளி அணைத்து தன் இச்சையைத் தீர்த்துக் கொள்கிறார். இதைப் பார்த்த தன் மைத்துனனிடமும் இவளைப் போய் வரச் சொல்கிறார். இதைப் பார்த்த பொது உடமைக் கொள்கைவாத கட்சிக்காரர்களும் தங்களிடமும் வரவேண்டும் என்றனர். அவர்கள் தாகத்தையும் தணித்தாள். ஜக்கம்மா இப்போது **"இரண்டு மூன்று மாதங்களாக வரவேண்டிய ஒன்று வராமல் போனதும், அவளுக்குத் தெரிந்தது. அதோடு உடம்பெல்லாம் நமச்சல். எந்தப் பயலுக்கு ... என்ன நோயோ? நிலைமை இந்த வேகத்தில் போனால் ... ஊரில் உள்ள ஒவ்வொருவருக்கும் தான் வைப்பாட்டியாக வேண்டியது வரும் என்பதைப் புரிந்து கொண்டு, ஜக்கம்மா ஒரு முடிவுக்கு வந்தாள்."**[61]

ஜக்கம்மா தன் மேனி தன் கணவனுக்கு மட்டும் தான் என்ற வைராக்கியத்தில் வாழ்ந்தவள். தன் மேனியைப் பற்றிப் பண்ணையார் கூறிய வார்த்தைகளைத் தன் கணவனிடம் கூறியும் அவன் எதுவும் கேட்காததால் அவனையும் பிரிந்து வந்தவள். அப்படிப்பட்ட வைராக்கியத்தில் வாழ்ந்த ஜக்கம்மாவின் வாழ்வில் அன்பு காட்டும் ராமசாமி, தென்றல் காற்றாக வந்தான். ஆனால் அடுத்தவர் அதைப் பார்க்க அந்தக் காற்று கொடூர புயலாக மாறி அவள் வாழ்க்கையை அடிவேருடன் சாய்த்து விட்டல்லவா சென்று விட்டது. கொள்கையுடனும் குறிக்கோளுடனும் வாழ்ந்தபோது ஜக்கம்மாவை யாரும் தீண்ட முடியவில்லை. கொஞ்சம் இரக்கம் காட்டியவனிடம், அன்புக்காக ஏங்கி பழகியதன் விளைவு வாழ்வையே நாசம் செய்துவிட்டது என்ற கருத்தை ஜக்கம்மா பாத்திரம் மூலம் உணர்த்துகிறார்.

**5. எதிர்நிலை மாந்தர்கள்**

இவர்கள் முதலிலிருந்து முடிவு வரை கதையில் சில இடங்களில் வந்து கதையில் மாற்றத்தை ஏற்படுத்தும் தவிர்க்க முடியாத பாத்திரமாவர். இப்பாத்திரத்தைக் கதையில் எதிர்நிலை பாத்திரமாக வருணிப்பர். இப்பாத்திரம் கதையில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தும் விதமாகவும் அமையும்.

**"தலைமை மாந்தர்களுக்கு எதிரான செயல்களைச் செய்பவர் எதிர்நிலை தலைமை மாந்தர்கள். இவர்களின் செயல்கள் சதி, சூது, வஞ்சகம் ஆகியவற்றை அடியொற்றிதாக இருக்கும்"**[62] என்கிறார் க.கனகராசு.

'கமலா அழுகிறாள்' என்ற கதையில் கமலா தனது கணவனுடன் வசித்து வருகின்றாள். உடன் அவளது மாமனாரும் உள்ளார். ஒருநாள் கூட அவர் பெரியவர், உடல்நிலை முடியாதவர் என்று எண்ண மாட்டாள். ஆனால் கமலா அப்பா வந்தவுடன்

மூன்று வேலை உணவும் முறைப்படி வழங்குவாள். அவர் இருந்தவரை தனது மாமனாருக்கும் நல்ல உணவுதான். ஊருக்குப் போகவேண்டும் என்கிறார் கமலாவின் அப்பா. இவள் இருங்கள் சில நாள் கழித்துப் போகலாம் என்றாள். அதற்கு அவர் நான் போய்தான் அங்குள்ள துணிகளைத் துவைக்க வேண்டும். மற்ற வேலைகளையும் கவனிக்க வேண்டும் என்றார். உண்மையை உன்னிடம் சொல்கின்றேன். உன் அண்ணி எனக்குச் சரியாக சாப்பாடு கூட போட மாட்டாள் என்று கூறி அழுதார். கமலாவும் சேர்ந்து அழுதாள். ஆனால் இதே கமலா மாமனாருக்கு எப்படி செய்தவள் தெரியுமா? **"ஒரு தட்டில் சோற்றைப் போட்டு வேகமாகத் தரையில் வைத்தாள். கிழவர் சோற்றைப் பிசைந்தார். உப்பு கொஞ்சம் குறைவாகத் தோன்றியது. கேட்க நினைத்தார். பிறகு அந்த நினைப்பைச் சோற்றுடனேயே உள்ளே விழுங்கினார். அவள் பேச்சைக் கேட்டு உயிரை விடும் அளவிற்கு ரோஷம் இல்லாத தனக்கு உப்பு எதற்காக என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டார். தட்டில் இருந்த இரண்டே இரண்டு துண்டு உருளைக்கிழங்கை ஒதுக்கி வைத்தார். அவருக்கு ஒத்துவராது. வாயுக்கோளாறு. இது போதாதென்று மூலநோய் வேறு. ஒரு சமயம் டாக்டர் அவரைக் கருணைக் கிழங்கைச் சேர்த்துக் கொள்ளும்படி கூறினார். மகன்காரனின் ஆணைப்படி அவள் ஒருநாள் கருணைக்கிழங்கை, பாதித் தோலை உரிக்காமலே சமையல் செய்துபோட்டாள். வாயெங்கும் எரிச்சல், ஆனால் மறுநாள் வயிறு சரியானது"**[63] என்பதில் வெளிப்படுத்தப் பெற்றுள்ளது. தனது அப்பாவுக்கு அண்ணி செய்யும் நிலை நினைத்து அழுபவளாகவும் தன் மாமனாரை நடத்தும் விதம் தெரியாத கொடூர பாத்திரமாகவும் கமலாவை ஆசிரியர் படைத்துள்ளார்.

‘இலவு காத்த பாவேசம்’ என்னும் கதை,

“இன்னார் செய்தாரை ஒருத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்” (குறள். 314)

என்ற குறளுக்கு ஏற்ப அமைந்த கதையாகும். இதில் கிளியம்மை வசதியான வீட்டுப் பெண். அவள், வண்ணாத்தியான செல்லக்கிளியை மிகவும் மோசமான வார்த்தைகளால் பேசி விடுகிறாள்.

தாய்மாமன் பலவேசம் என்பவர் கிளியம்மையைத் தன் மகனுக்குப் பெண் கேட்கிறார். தரமறுக்கின்றனர். அதுவும் உன் குடும்பத்தில் தருவதை விட கிணற்றில் தள்ளிவிடலாம் என்றும் கூறுகின்றனர். இதனால் கோபம் அடைந்த பலவேசம் எப்படியும் கிளியம்மையின் திருமணத்தை நிறுத்தவேண்டும் என்ற எண்ணத்தில் கிளியம்மை திட்டிய வண்ணாத்தியிடம் சென்று பலவேசம் **“பையனோட தாத்தா எப்ப வாராரு? சாயங்காலம் என் வீட்டுக்கு வாராரு. நான் தங்கமான பொண்ணுன்னு சொல்லிட்டு எதுக்கும் வண்ணாத்திகிட்ட கேளுமுன்னு சொல்லுவேன் ... நீ ‘மூணுமாசமா ... தீட்டுச் சீல வெளுக்கலன்னு’ சொல்லிடு. அவரு, பொண்ணுக்கு மூணுமாசமுன்னு தீர்மானிச்சிடுவாரு. சாயங்காலம் அவர இங்க கூட்டி வரட்டுமா?”**[64] என்கிறார்.

பலவேசம் தனக்குக் கிடைக்காத பொருள் யாருக்கும் கிடைக்கக் கூடாது என்ற கெட்ட எண்ணம் கொண்ட பாத்திரமாகப் படைத்துள்ளார்.

‘ஒரு அம்மாவாசை பௌர்ணமியாகிறது’ என்ற கதையில் உமா என்ற பெண் அலுவலகத்தில் பணிபுரிகின்றாள். இதே

அலுவலகத்தில் சந்திரன் மேலாளராக உள்ளான். உமா ஒவ்வொரு முறையும் அலுவலகப் பணத்தைக் கையாடல் செய்யும் போதும், மாட்டிக் கொள்வாள். பின்பு சந்திரன் காலில் விழுந்து அழுவாள். அவளைக் காப்பாற்றி விடுவான். ஆனால் தீய குணம் கொண்ட உமா; சந்திரன் மீதே நிர்வாக இயக்குநருக்குப் புகார் கடிதம் அனுப்பி உள்ளாள். அந்தக் கடிதத்துடன் துணை இயக்குநர் அங்கு வந்து சந்திரனிடம் அதைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அதில், **"மானேஜர் சந்திரன் புகார் நகல் கிடைக்கப் பெற்றேன். நான் மோசடி செய்ததாகக் கூறப்படும் நாலாயிரம் ரூபாய் விவகாரத்தை, அவர் ஏன் ஒரு மாதம் கழித்துத் தெரிவிக்க வேண்டும்? நாணயமுள்ளவராக இருந்தால், நான் கொடுத்ததாகக் கூறப்படும் பணத்தை, ஏன் கேஷ் புத்தகத்தில் வரவு வைக்கவில்லை? அவர் கூறும் குற்றச்சாட்டுகளை நான் செய்திருந்தால் பதவியில் இருக்கத் தகுதியில்லாதவள் நான். எனக்காக ஏன் அவர் சிபாரிசு செய்ய வேண்டும்? காரணம் இருக்கிறது. நான் கேஷியராக இருக்கும்போது, என்னை மிரட்டிப் பணம் வாங்கினார். நானும், பதவியைக் காப்பாற்றுவதற்காக, என் அபலை நிலையைக் கருதி, பணம் கொடுத்தேன், ஏமாந்தேன். இப்போது, அவர் மீது கிரிமினல் வழக்குப் போடலாமா என்று யோசிக்கிறேன். நீங்கள், அவர் மீது நடவடிக்கை எடுப்பீர்கள் என்று, நம்பி காத்திருக்கின்றேன்"**[65] இதைப் பார்த்த சந்திரனுக்கு ஒன்றும் புரியவில்லை. யாருக்கு உதவி செய்து காப்பாற்றினோமோ? அவளே இவனுக்கு இப்போது எமனாகக் காட்சியளித்தாள். செய்நன்றியை மறந்து, தன்னைக் காப்பாற்றிய மனிதருக்கே துரோகம் நினைக்கும் பாத்திரமாக உமாவைப் படைத்துள்ளார்.

‘டபிள்யூ. கண்ணா டாக்டராகிறார்’ என்ற கதையில் டபிள்யூ கண்ணா என்பவர் ஓர் அறிவியல் ஆராய்ச்சியாளர். அவரிடம் ரமேஷ் என்பவர் வேலையில் சேருகிறார். நல்ல அறிவாளி. ஆனால் மனைவி சொல்லே மந்திரம் என்பவர். யார் எதைச் சொன்னாலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய மனமுடையவன். கண்ணா கண்டுபிடிக்கும் சூரிய சக்தி மூலம் மின் உற்பத்தி பெறும் ஆய்வுக்கு இவனும் சில கருத்துக்களைக் கூறி வருகின்றான். சக பணியாளர்கள் இவனைக் கூட்டத்தில் பேசவிடாமல் தடுக்கின்றனர். கண்ணா மட்டும் இவனைத் தனியாக அழைத்து உனது குறிப்புகளை எழுதிக் கொடு என்று தனி அறையை ஒதுக்கி யாருக்கும் தெரியாமல் அவனிடம் இருந்த ஆய்வுக் குறிப்புகளைப் பெறுகின்றான். அவருக்கு எல்லையில்லா மகிழ்ச்சி. உடனே ரமேஷ்க்கு ஆயிரம் ரூபாய் தந்து உன் மனைவியுடன் குற்றாலம் சென்று வா. ஒருவாரம் விடுப்பு எடுத்துக் கொள் என்று அனுப்பி விடுகிறார். அங்கு ஒருநாள் மாலை செய்தித்தாளை ரமேஷ் பார்க்கிறான் அதில் “கொட்டை எழுத்தில் அரைகுறையாகத் தென்பட்ட ஒரு செய்தி தற்செயலாக கண்ணில்பட ... அவன் உடனே, பத்திரிகை வாங்கினான். அதைப் புரட்டிப் படித்ததும், நிஜமாகவே குதித்தான். டபிள்யூ. கன்னா, முற்றிலும் மாறுபட்ட சோலார் ஹவுஸை கண்டுபிடித்திருப்பதாகவும், புதுமையான அவரது விஞ்ஞான உத்திகளால், ஜனதா வீடுகளை எளிதில் கட்டிவிடலாம் என்றும், நிருபர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் மத்தியில் மாதிரி வீட்டைக் காட்டி, அதை அவர் இயக்கிக் காட்டினார் என்றும், அவர் தயாரித்திருக்கும் ‘இன்வென்ஷனையும்’ ரிப்போர்ட்டையும் கண்டு உலக விஞ்ஞானிகளே ஆச்சரியப்பட்டு பாராட்டுவதாகவும், பல

**பல்கலைக்கழகங்கள் அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கத் தயாராயிருப்பதாகவும் செய்தி கூறியது. இந்தச் செய்திக்கு மத்தியில் இரண்டு காலப் புகைப்படத்தில் அட்டகாசமாக சிரித்துக் கொண்டிருந்தார் கன்னா. அதற்குக் கீழே, 'ஜ்வல் ஆப் இந்தியா, 'சோலோ சயன்டிஸ்ட் பார்சோலார் எனர்ஜி என்று எழுதப்பட்டிருந்தது. பத்திரிகையின் ஒரு இடத்தில் கூட, தன் பெயர் இல்லாதது அவனுக்கும் உறைத்தது."[66]**

பிறர் உழைப்பால் பெற்ற வெற்றியை, தான் பெற்ற வெற்றியாகக் கூறும் விஞ்ஞானிகளும் உள்ளனர். பொய் என்ற போர்வையில் பெரிய மனிதர்களும் வாழ்கின்றனர் என்பதையும் கண்டுபிடிக்காத கண்டுபிடிப்பைத் தான் கண்டு பிடித்ததாகக் கூறி பட்டம் பெறும் படித்த ஏமாற்று மனிதர்களும் உள்ளனர் என்பதை இந்த பாத்திரம் மூலம் விளக்கியுள்ளார்.

'காகித உறவு' என்ற கதையில் மாடசாமிக்குத் தாய் கிடையாது. சிறிய தாய் தான் அவனை வளர்த்துப் படிக்க வைத்து, ஆளாக்கியவர். இவன் படிக்க வேண்டும் என்பதற்காகத் தன் மகள்களைக் கல்லூரிக்கு அனுப்பாமல் நிறுத்தியவள். மாடசாமி தன் மனைவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு இவர்களை வீட்டை விட்டு வெளியே அனுப்பினான். தன் மகள்களுக்கு மாப்பிள்ளை பார்க்க வேண்டும் என்று சிறிய தாய் அவனிடம் கூறினாள். அவன் மனைவி **"இந்த சனியங்க வந்ததிலிருந்து எனக்கு நிம்மதியில்லாமப் போச்சி. போன பிறவியில் செய்த கர்மம் வெ எவளுக்கெல்லாமோ இங்கு அழணுமாம்; வைக்க வேண்டிய இடத்துல வச்சிருந்தா இப்படி வாய்க் கொழுப்பு இருக்குமா? கிழவிக்கு மாப்பிள்ள பார்க்க முடியுமா? மனதிருந்தாலும், கிழடா போனவளுக்கு வாலிபன் கிடைக்கறது லேசா?"[67]** என்று கொட்டினாள்.

தன் தங்கைகளுக்குத் திருமணம் செய்து வைக்க மணமில்லாதவன் தன் படிப்புக்காக அவர்கள் படிப்பை நிறுத்திய தாய்க்காகவாவது இரக்கப்பட்டிருக்கலாம். எதையும் நினைத்துப் பார்க்க மனமில்லாத வஞ்சம் நிறைந்த கஞ்சப் பாத்திரமாக அவனை ஆசிரியர் படைத்துள்ளார்.

'பண்டாரம் படுத்தும் பாடு' என்ற கதையில் பண்டாரம் என்பவன் அலுவலகத்தில் கணக்குப் பிள்ளையாக வேலை பார்ப்பவன். ஒவ்வொரு முறையும் அலுவலகப் பணத்தை எடுத்து வட்டிக்கு விடுவதுதான் அவன் பழக்கம். ஒருமுறை அப்படித்தான் தன்னைச் சோதிக்க வந்த தேஷ்முக் என்ற அதிகாரியிடம் பணப்பெட்டிச் சாவியைக் கொடுத்துவிட்டு, பணத்தை நீதான் எடுத்தாய் என்று அவர் மீது புகார் கூறியவன்.

இந்த முறை பண்டாரத்தின் மீது தலைமையகத்திற்குப் புகார் தெரிவிக்கப்பட்டு அங்கு இருந்து 'படே சிங்ஜி' என்பவர் வந்தார். அவரை பியூன் வேடத்தில் பண்டாரம் சென்று அழைத்துச் சென்று ஊட்டியில் தங்கவைத்து அனைத்துச் செலவுகளையும் செய்தான். மறுநாள் ஆடம்பரமாக உடை அணிந்து கொண்டு டெபுடி டைரக்டர் படை சிங்ஜீயைப் பண்டாரம் அழைத்து வந்தான். அலுவலகத்தில் அனைவரும் ஆச்சரியமாகப் பார்த்தனர்.

அதிகாரியிடம் தான் தான் பண்டாரம் என்றும் உங்களிடம் தனியாகப் பேசவேண்டும் என்று கூறி, "சரி விஷயத்துக்கு வருவோம் ... உங்களுக்கு நான் செலவளிச்சதுக்கு நிறைய ஆதாரம் இருக்கு. நீங்க 'அதை' விட்டுடுங்க நான் 'இதை' விட்டுடறேன். நீங்க கண்ணுசாமிக்கு எழுதின லெட்டரைப் பிரிச்சது தப்புதான். ஆனால் ஒரு தப்புத்தானே இன்னொரு நல்லதைக் கொண்டு வருது?"

படேசிங் விட்டுவிட்டார். பண்டாரம் நேர்மையானவன் என்றும், அவன் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரம் இல்லை என்றும், 'ரிப்போர்ட்' கொடுத்து விட்டார். தேவையற்ற பிரச்சனைக்கு மூலகாரணமான கிருபாகரன்மீது நடவடிக்கை எடுக்க வேண்டும்"[68] என்றும் சிபாரிசு செய்தார்

சமுதாயத்தில் அலுவலக நிருவாகத்தில் நடக்கும் தப்புகளையும் தட்டிக் கேட்பவர்களைப் பழிவாங்கும் மனிதனாகப் பண்டாரம் படைக்கப்பட்டுள்ளான். செய்த தப்பை மறைக்க அதிகாரிகளுக்குச் செலவு செய்து அவர்களையே சிக்க வைக்கும் தீய குணம் கொண்ட பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளான்.

'உடன் பிறவா உறவுகள்' என்ற கதையில் மேலாளர் தன் சொந்த நலனுக்காகவும், தன் குடும்ப வேலைகளைக் கவனிப்பதற்காகவும், பியூன் ராமனைப் பயன்படுத்தி வந்தார். ராமன் அம்மாவுக்கும் மனைவிக்கும் உடல்நிலை சரியில்லை என்று கடிதம் வந்தது. அதைக்காட்டி விடுப்புக் கேட்டும் தரவில்லை. ராமன் ஒருமுறை நிர்வாக இயக்குநரின் வீட்டிற்கு வெள்ளையடிக்கச் சென்றான். அப்போது தன் குடும்ப நிலையைக் கூறி தன் சொந்த ஊருக்கு இடமாறுதல் கேட்டான். நிர்வாக மேலாளர் மனம் இரங்கி அவனுக்கு ஆர்டர் போடச் சொல்லி விட்டார். இருந்தாலும் மேனேஜரை ஒரு வார்த்தைக் கேட்டு விடலாம் என்று கேட்டபோது மேனேஜர்,

**"அவன் ஒரு மாதிரி ரப்பியன் டைப் ஸார் ... இப்போ நம்ம கண்காணிப்பில் இருக்கதால ஒழுங்கா இருக்கான். இல்லன்னா ஆட்களை அடிச்சி போட்டுருவான் ... சாதுவா இருக்கது போலத் தெரிஞ்சாலும், அசல் அரக்கன் ... பட் ஒன்**

திங் ... ஆறு மாதம் 'வாட்ச் பண்ணிட்டு ... அப்புறமாய் யோசிக்கலாம்.

'தேங்க் யு ... சரியான சமயத்துல சொல்லிட்டிங்க ... ஆர்டர் டிக்டேட் செய்யப் போகும்போதுதான் ஒங்கள கேட்கணும் போலத் தோணிச்சுது ... ஓகே ..."[69] என்றார்.

அப்பாவியான ராமனைத் தன் சுயநலத்துக்காக, பழிவாங்கும் பாத்திரமாக மேலாளர் படைக்கப்பட்டுள்ளார். அவன் மனைவியின் உடல்நிலை அறிந்த பின்னும் ராமனைப் பழிவாங்குவது பாவச் செயல் ஆகும்.

'ஆப்பசைத்த கார்த்தி' என்ற கதையில் வங்கி வேலைக்குக் கார்த்தி தேர்வு எழுதி, தேர்ச்சியும் பெற்றுள்ளான். நேர்முகத் தேர்வுக்குப் படித்துக் கொண்டு இருந்தபோது அவன் மாமா பண்டாரம் நான் இருக்கும்போது நீ படிக்க வேண்டாம். நான் என் தலைவரிடம் கூறி உனக்கு வேலை வாங்கித் தருகிறேன் என்று சொல்லி, தலைவரிடம் அழைத்துச் செல்கின்றான். அவர் இவனது நேர்முகத் தேர்வுக் கார்டை வாங்கிக் கொண்டு நாளை வா என்கிறார். ஆனால் இவன் அங்குச் செல்லும்போது தலைவர் வெளியூர் சென்றுவிட்டார். இன்டர்வியூ கார்டு இல்லாமல் நேர்முகத் தேர்வுக்குச் செல்கின்றான். அங்குக் காவலாளி தள்ளி விடுகின்றான். "கார்த்தி மல்லாந்து விழுந்தான். இரண்டு கைகளையும் ஊன்றியபடி எழப்போனான். இயலவில்லை. ஏதோ பேசப் போனான் முடியவில்லை; அழப்போனான் வாய் அசையவில்லை. மிகப் பெரிய பஞ்சமா பாதகனை விழத்தட்டிய பெருமிதத்துடன் துப்பாக்கி சகிதமாய் நிற்கும் போலீஸ்காரர், அவனைத் தாக்கிவிட்டு, அப்புறம் குப்புறத் தள்ளுவதற்காக வருவதையோ, வேடிக்கை பார்க்கும் கூட்டத்தையோ

நோக்கிடும் சுரணையின்றி கிடந்தான். அவன் காதில் தலைவரின் மீசைக்கார கையாள் 'ஒன் காரியம் முடிஞ்சது மாதிரிதான்' என்ற வார்த்தைகள் மட்டுமே ஒலித்தன?"[70]

தன் சொந்த முயற்சியில் வெற்றி பெற்றவன் தேவையில்லாமல் குறுக்கு வழியில் போனதால், அவன் காரியம் கெட்டு விட்டது என்பதையும் அத்துடன் இல்லாமல் அரசியல்வாதிகளின் வாக்குறுதிகளை நம்பக் கூடாது என்பதையும் பண்டாரத்தின் பழிவாங்கும் போக்கையும் காட்டியுள்ளார்.

**6. அஃறிணை மாந்தர்கள்**

படைப்பில் மாந்தர்கள் என்றால் அவர்கள் உயர்திணையில் தான் இருக்க வேண்டுமென்பதில்லை. அஃறிணையிலும் இருக்கலாம்.

தமிழில் தோன்றிய முதல் சிறுகதையான வ.வே.சு. அய்யரின் 'குளத்தங்கரை அரசமரம் சொன்ன கதை'யில் அஃறிணைப் பாத்திரங்களைக் கையாண்டுள்ளார். இவற்றின் அடிப்படையில் சிறுகதைப் படைப்பாளர்கள் பலர் அஃறிணைப் பாத்திரங்களைக் கொண்டு கதைகளைப் படைத்துள்ளனர்.

உயர்திணைப் பாத்திரங்களைப் பல படைப்பில் எளிதாகப் படைப்பார்கள். அஃறிணைப் பாத்திரங்களை வைத்துக் கதை எழுதுவது கொஞ்சம் சிரமமான காரியமாகும்.

"விலங்குக் கதைகள், பேய் பிசாசுக் கதைகள், அறிவியல் புனை கதைகளிலும் கூட அடிப்படை நுவல் பொருளாய் இருப்பவன் மனிதனே என்று எட்மண்ட் ஃபுல்லர் கூறியதாக மா.இராமலிங்கம் குறிப்பிடுகின்றார்"[71].

அஃறிணைப் பாத்திரங்களைக் கொண்டு ஆசிரியர் படைத்துள்ள கதைகள் பல உள்ளன.

'அர்த்தமுள்ள பார்வை' என்ற கதையில் இரண்டு நாய்களின் காதலைப் பற்றி ஆசிரியர் கூறுகின்றார். காவலாளி மீசைக்காரர் தன் முதலாளி வீட்டு நாயைக் கடைக்கு அழைத்து வருகிறார். அது ஒரு தெரு நாயான பெண் நாயைப் பார்த்து, காதல் கொண்டு முன்னழகையும் பின்னழகையும் நாக்கால் நக்கி (முத்தம் கொடுத்து) சுவைத்தது. இதைப் பார்த்த பெரியவர் அந்த நாயைக் கொம்பால் அடிக்கிறார். அதை நாயின் சொந்தக்காரர் பார்த்து விடுகிறார். உடனே எஜமானி **"நான் ... டாமியை அடிக்கிறதைப் பார்த்துட்டாங்களாம், அப்பவே நீ டிஸ்மிஸ் ... நானே அடிக்காத டாமியை நீயா அடிக்கே ... இனி மேல் வீட்டுப் பக்கம் வந்தே ... அப்புறம் போலீஸ் பக்கம் போவேன்'னு காளுகாளுன்னு கத்திட்டுப் போறாள். பாருப்பா அநியாயத்தை"**[72] என்கிறார்.

ஒரு நாய்க்காக வீட்டு வேலைக்காரனை மேற்கண்டவாறு திட்டினான். ஒரு நாய்க்கு அளிக்கக்கூடிய மதிப்புக்கூட மனிதனுக்குக் கொடுக்கவில்லை. ஒரு மனிதன் சகமனிதர்களை உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று பாராமல் மனிதன் என்பதை மனத்தில் கொண்டு மதிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

'ஒரு யானையின் காதல்' என்ற கதையில், இரண்டு யானைகளின் காதலைப் பற்றிக் கூறியுள்ளார். கீதா என்ற வளர்ப்புப் பெண் யானை தன் காதலன் காட்டு யானையைச் சந்திக்க துடிக்கிறது. இதைப் பார்த்து மவுத்தான் யானையை அவிழ்த்து விடுகின்றான். அது காட்டிற்குச் சென்று எங்கும் தேடுகின்றது.

தன்னுடைய ஆண் யானையைக் காணாத தவிப்பால் நிலைதடுமாறுகிறது. அந்த நேரத்தில் இன்ப அதிர்ச்சியுடன் முன்னால் தோன்றி நிற்கிறது ஆண் யானை.

இரண்டு யானைகளும் ஆற்றங்கரைப் படுகையில் காதல் மொழி பேசி கொஞ்சி மகிழ்கிறது. மாலை நேரம் ஆனதால் இரண்டும் பிரியப் போகிறோம் என்ற வருத்தத்தில் விடைபெற; கீதா வெளியே வருகின்றாள். மனமகிழ்ச்சியுடன் வெற்றி நடை போடுகின்றாள். கீதா தனக்குள்ளே **"நானும் அடுத்த பதினைந்த நாளையில கர்ப்பம் தரிச்சிடுவேன். ஒருவேளை இன்னைக்கே ரெடியானாலும் ஆயிருக்கலாம். நானும் அழகாய் இருக்கேனா ... 'அவரும்' அழகாய் இருக்காரா ... எங்களுக்கு பிறக்கது நல்லாத்தான் இருக்கும். இது மனுஷங்களுக்கு பொறுக்குமா, என் செல்வத்தை இந்த மனுஷங்க விற்றுப் புடுவாங்களே. கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு கொடுக்கது மாதிரி யாருக்காவது கொடுத்திடுவாங்களே. துள்ளித் திரிய வேண்டிய என் செல்வம் எங்கேயோ சர்க்கஸ்ல ஒற்றைக் காலுல நிற்குமே. என்னால ... என் பிள்ளையைப் புலிகிட்டே இருந்து - சிறுத்தைகிட்டே இருந்து காப்பாற்ற முடியும். ஆனால் இந்த மனிதர்கள் கிட்டே இருந்து காப்பாற்ற முடியாதே, என்ன செய்வேன். ஒன்றும் புரியமாட்டக்கே. ஆம் அதுதான் சரி. நான் கர்ப்பம் தரிக்க மாட்டேன். இனிமேல் அவரை பார்க்க போகமாட்டேன். அய்யோ என்ன கொடுமை இது, அவரை எப்படி மறப்பது? முடிகிற காரியமா?"**[73] என்பதில் ஐந்தறிவான விலங்குகளின் மனதில் உள்ள நிலையை ஆசிரியர் அழகாக விளக்குகிறார். யானை தன் குழந்தையை விலங்குகளிடம் இருந்து காப்பாற்றுவேன். ஆனால் இந்த மனிதர்களிடம் இருந்து காப்பாற்றுவது கடினம் என்பதை,

‘கொம்புள்ளதற்கு ஐந்து முழம்
குதிரைக்குப் பத்து முழம்
வெம்பு கறிக்கு ஆயிரமுழம்
வம்பு செய்யும் துச்சானிக்குக் கண்ணில்
படாமை தூரம் மேல்போயிடு’

என்ற முதுமொழி கருத்திற்கேற்றாற்போல் இக்கருத்தைக் கீதா யானையின் பாத்திரம் வழியாக ஆசிரியர் கூறியுள்ளார். மனிதர்களுக்குப் பயந்து எனக்குக் கர்ப்பம் தரிக்காமல் இருக்கக் கர்பத்தடை மாத்திரை கொடு என்று கேட்கிறது. இங்கு மனிதனை மனிதனாக மதிக்க வேண்டும். மனித நேயம் வேண்டும் என்கின்றனர். ஐந்தறிவு கொண்ட விலங்கோ இரக்கமற்ற மனிதனின் கண்ணில் படாமை நல்லது என்கிறது.

‘இரையும் இறையும்’ என்ற கதையில், காகம் தன் பசிக்காக உணவு தேடச் செல்கிறது. அங்கு எதிர்பாராத விதமாக இறக்கையில் அடிபட்டுப் பறக்க முடியாமல் தடுமாறுகிறது. இந்நிலையில் பூனை ஒன்று அதைச் சாப்பிட பின்தொடர்ந்து வருகின்றது. அடைக்கலமாக ஒரு கடையில் நுழைகின்றது. கடை முதலாளி காலால் எட்டி உதைத்து வெளியே போடுகிறார். இந்த வேலையில் பூனை சாலையின் மறுமுனையில் இருந்து, காகத்தைப் பிடிக்க பாய்கிறது. அப்போது ஒரு மோட்டார் சைக்கிள் சாலையைக் கடக்கிறது. காக்கை கண்திறந்து பார்க்கிறது. பூனை நசுங்கி சாலையில் கிடக்கிறது. காக்கை அந்த உடல் மீது நின்று கொண்டு கொத்தோ, கொத்தென்று கொத்தித் தன் வேகத்தைத் தீர்த்துக் கொள்கிறது.

இந்த இரண்டு பாத்திரங்கள் மூலம் ஆசிரியர் எளியவரை வலியவர் பழிவாங்க நினைத்தால், இறைவன் அவர்களைக்

காப்பாற்றுவான் என்ற கருத்தைச் சுட்டிக் காட்டியுள்ளார். அஃறிணை மாந்தர்களின் மூலம் அறக் கருத்துக்களை ஆசிரியர் வழங்கியுள்ளார்.

### 7. குறிக்கோள் மாந்தர்கள்

குறிக்கோள் என்பது எதையும் சாதிக்கும் தன்மையை உருவாக்கும். இதை முடிக்க வேண்டும் என்ற வைராக்கியத்தில் செயல்பட்டால், நினைத்த செயல் வெற்றி பெறும். அதற்காக நாம் நிறைய கடின உழைப்பில் ஈடுபட வேண்டும். சாதிக்க வேண்டும் என்பவர்,

‘மெய் வருத்தம் பாரார். பசிநோக்கார், கண்துஞ்சார்,
எவ்வோர் தீமையும் மேற்கொள்ளார். செவ்வி
அருமை பாரார் - அவமதிப்பு கொள்ளார்
கருமமே கண்ணாயினார்’

என்ற பாடலுக்கு ஏற்ப எடுத்த காரியத்தில் வெற்றி பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்பட்டால் சாதிக்கலாம் என்பதை வலியுறுத்துகிறார்.

தமது சொந்த வாழ்க்கையிலும் தாம் சார்ந்திருக்கின்ற சமூக வாழ்க்கையிலும் சில உயர்ந்த குறிக்கோள்களை வைத்து பிறருக்காகவும் வாழும் தன்மையுடையவர்களாகக் குறிக்கோள் மாந்தர்களைப் படைக்கின்றனர்.

“ஒரு படைப்பாளி குறிக்கோள் மாந்தர்களைப் படைப்பதன் வாயிலாக, மனிதன் எங்ஙனம் இருக்க வேண்டும் என்ற தன் கனவுக்கு வடிவம் கொடுக்க இயலும்”[74] என்கிறார் மா.திருமலை.

‘ஏவாத கணைகள்’ என்ற கதையில் ஆறுமுக பாண்டியும், கலாவதியும் ஒரே வயலில் வேலை செய்பவர்கள். எப்போதும் ஆறுமுகத்திற்குக் கலாவதிமேல் ஒரு கண். கலாவதியும் ஆறுமுகத்தை விரும்பினாள். வயல் வேலையை விட்டுவிட்டு கிணற்றில் குதித்துக் கொண்டிருந்தாள். அங்கு ஒரு பெரிய பாறாங்கல் இருந்தது. அது அவள் மீது மோதி விடும் என்பதற்காக அவளிடம் நிலையை கூறி நிறுத்தப் பார்த்தான். ஆனால், அவள் நீ ஆம்பளையா இருந்தா அந்தக் கல்லைத் தூக்கிப் போடும் என்று கூறினாள். உடனே **“ஆறுமுக பாண்டி, கல்லை விடவில்லை. மார்பில் இருந்து, கல்லை கழுத்திற்குக் கொண்டு வந்தான். எந்தவித இடுப்புப்பிடியும் இல்லாத அந்தக் குட்டிப் பாறையை, கழுத்தில் இருந்து தலையைக் குனிந்து தலைக்கு மேல் கொண்டு போய் எறிந்தான். பாராங்கல், கிணற்றுக்குள், வேட்டுச் சத்தத்தைக் கிளப்பி நீரை ஆகாயத்திற்குப் பாய்ச்சியபடி விழுந்தது. கலாவதி, அவனை அப்படியே தன்னையறியாமல் அணைத்துக் கொண்டாள்.”**[75]

தன்னைப் பார்த்து ஒரு பெண் கூறினால் என்பதற்காகத் தன் சக்திக்கு மீறிய செயலில் குறிக்கோளுடன் செயல்பட்டால் அதில் நிச்சயம் வெற்றி அடையலாம் என்பதை ஆறுமுக பாண்டி பாத்திரத்தின் மூலம் படைத்துக் காட்டியுள்ளார்.

‘கொடி காய்ச்சி மரம்’ எனும் கதையில் குழந்தைவேலு குறிக்கோள் கொண்ட பொதுவுடைமைவாதி. தனது சேரியில் ஒரே கம்பத்தில் அனைத்துக் கட்சி கொடிகளும் பறந்து கொண்டுள்ளதைப் பார்க்கிறான். கொடிக் கம்பத்தில் உள்ள ஒற்றுமைக்கூட குல ஒற்றுமையில் இல்லை என்பதுதான் அவன் கவலை. சேரி பையன் கருப்புசாமி சைக்கிளில் நின்று கொண்டு பேசினான் என்பதற்காக ஊர்க்காரர்கள் அவனை அடித்துச்

சேதப்படுத்தி விட்டனர். இதைச் செய்தது கட்சித் தலைவர்கள் தான். சேரிக்காரர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தும் கேட்டபோதும் அதற்குச் சரியான பதில் இல்லை. கருப்புசாமி மீது குற்றம் சுமத்தினர். அத்துடன் இல்லாமல் நீங்கள் ஒன்று சேரும் போது நாங்கள் ஒன்று சேர்ந்தால் என்ன என்று கூறி அனுப்பிவிட்டனர். உடனே அவர்கள் குழந்தைவேலு கூறியதுபோல் அனைத்துக் கட்சி கொடியையும் அவிழ்த்துவிட்டு அந்தக் கொடிமரத்தை விதவை மரமாக ஆக்கினர். தன் எண்ணமும் குறிக்கோளும் வெற்றி பெற்ற களிப்பில் குழந்தைவேலு; தாழ்த்தப்பட்ட குலத்தில் பிறந்த மராத்திய கவிஞர் சங்கேடர் எழுதிய கவிதையின் தமிழ் மொழிபெயர்ப்பை எல்லோரும் கேட்கும்படி கத்தினான்.

**“தாய் நாடு தாய்நாடு என்று**
**வாய்கிழியப் பேசுவோரே - இங்கே**
**என்தாய் இருப்பதற்கு இடமிருக்கோ?**
**பொன்னொடு பொன்னாடு என்று**
**புலம்புகின்ற தலைவர்களே - எங்களுக்கு**
**மண்சட்டி தந்த மர்மமென்ன? சொல்வீரா”**[76]

என்றார். குழந்தைவேலுவை அனைவரையும் கட்சிப் பாகுபாடின்றி ஒற்றுமையுடன் ஒன்று சேர்ந்து வாழவேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்படும் பாத்திரமாக ஆசிரியர் படைத்துள்ளார்.

‘தலை தீபாவளி’ என்ற கதையில் பெருமாள்சாமிக்கு மூன்று மகன்கள். மூத்தமகனைப் படிக்க வைக்காமல், வயல் வேலைக்காக நிறுத்திவிட்டார். மற்ற இரண்டு மகன்களும் சென்னையில் வேலை பார்த்து வருகின்றனர். பெருமாள்சாமி அதிக நாள்கள் சின்ன மகன்கள் வீட்டில் சென்னையில் தான்

தங்கி இருப்பார். தீபாவளியைக் கொண்டாட பெரிய மகன் இருக்கும் கிராமத்திற்கு வருவதாகக் கடிதம் போட்டு இருந்தார். ஆனால் அவரை அழைத்துச் செல்ல பெரிய மகன் வரவில்லை. இருந்தாலும் இவரே வீட்டிற்குச் சென்று விட்டார். அங்கு மருமகள் பாராமுகமாக இருந்தாள். பேரக் குழந்தைகள் மட்டும் பேசின. சென்னையில் உள்ள இரண்டு மகன்களும் இப்போது கிராமத்திற்கு வந்து இருந்தனர். அவர்கள் சொத்தில் பங்கு வேண்டும் என்று கேட்டனர். அதற்குப் பெருமாள்சாமி **"இப்போ இந்த சொத்து இல்லாம நீங்களும் உங்க பிள்ளைகளும் நல்லா இருக்கிங்க ... ஆனால் அவனும், அவன் குடும்பமும் இந்தச் சொத்தை வச்சிக்கிட்டே சமாளிக்க முடியாம இருக்கு. அதனால என்னோட பிதுரார்ஜித சொத்த அவன் பெயருக்கு உயில எழுதிட்டேன். நீங்க எனக்கு ஆசையோட அனுப்புன பணத்தெல்லாம், அவன் பேர்ல பேங்க்ல போட்டிருக்கேன். என்னை மன்னிச்சிடுங்கடா ... எல்லாப் பிள்ளையும் எனக்கு ஒண்ணு என்கிறது மட்டுமில்ல; எல்லாப் பிள்ளையும் ஒரே மாதிரி நிலையில இருக்கணும் என்கிறதும் என் ஆசை"**[77] என்று கூறுகிறார்.

படிக்காத பெரிய மகன் தன்னை மதிக்கவில்லை என்றாலும் அவன் துன்பப்படுகின்றான் என்பதால் அவன் மீது எப்போதும் பெருமாள்சாமிக்கு அதிக பாசம் உண்டு. அதனால் அவனுக்கு அதிகம் செய்ய வேண்டும் என்ற குறிக்கோளுடன் அனைத்துச் சொத்துக்களையும் அவனுக்குக் கொடுப்பதோடு சின்ன மகன்கள் தனக்குக் கொடுத்த பணத்தையும் அவன் கணக்கில் சேர்த்து விட்டார். படிக்காதவர்களுக்கு உதவ வேண்டும் என்பதைப் பெருமாள்சாமி பாத்திரம் மூலம் இங்கு ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார்.

‘உறவுக்கு அப்பால்’ என்ற கதையில் காமாட்சியின் கணவன் தியாகராஜன் இறந்து விடுகின்றான். இவர் டெல்லியில் பணிபுரியும்போது இவரது தங்கை மீனாட்சியும் மகன் ரவியும், உனது மகள் வித்யாவை என் மகனுக்குத்தான் தரவேண்டும் என்று கூறியவர்கள். இப்போது வித்யாவுக்குத் தன்னுடன் பணிபுரியும் நண்பனுக்குத் தரும்படி கூறுகின்றான். அதுவும் இரண்டாம் தாரமாக. காமாட்சி எனது மகளுக்கு மாப்பிள்ளை பார்க்க எனக்குத் தெரியும் என்று கூறுகின்றாள். அப்போது வித்யா **“உண்மையிலேயே நீங்க கெட்டிக்காரர்தான். கம்பெனியை மட்டுமல்லா, உறவையும் கமர்ஷியலாய்ப் பார்க்கிறவர் ... குவிக்கா ... முன்னுக்கு வந்துடுவீங்க ... கங்கிராஜுலேஷன்ஸ் ...**

குதர்க்கம் வேண்டாம். நான் வாக்குக் கொடுத்துட்டேன். நீ, அவனைக் கட்ட முடியுமா ...? முடியாதா ...?

**எங்க குடும்பம் நொடிச்சிப் போனது உண்மைதான். ஆனால், நீங்க மாப்பிள்ளை பார்த்து, நான் கட்டிக்கிற அளவுக்கு, மானம் நொடிச்சி போகலே ஸார்”**[78] என்றாள்.

ரவி குடும்பத்தின் துணையில்லாமல் தன்னால் வாழமுடியும் என்ற குறிக்கோளுடன் அவர்களிடம் சண்டை போட்டுவிட்டுத் தான் வசித்து வந்த டெல்லிக்கே பயணம் ஆனார்கள். தான் நினைத்தபடி குறிக்கோளுடன் அனைத்தையும் சாதிக்கும் பாத்திரமாக வித்யாவை இங்கு ஆசிரியர் படைத்துள்ளார்.

‘நூலிழையில் ஒரு பந்தம்’ என்ற கதையில் வேலுமணியின் மனைவி லிங்கம்மா சற்று புத்தி சுவாதினம் இல்லாதவள். வேலுமணியின் அப்பா, அம்மா பார்த்துதான் திருமணத்தை

முடித்து வைத்தனர். கல்யாணத்திற்குப் பின்பு தான் லிங்கம்மாவின் நிலை தெரிந்தது. இதனால் மனம் நொந்து வேலுமணி அரளி விதையைச் சாப்பிட்டுவிடுகின்றான். இது கூட தெரியாத அவளை வேலுமணியின் தம்பி அடித்து விடுகின்றான். பின்பு அவளைப் பிறந்த வீட்டில் கொண்டு விட்டு விடுகின்றனர். வேறு ஒரு பெண் பார்த்துத் திருமண ஏற்பாடு செய்கின்றனர். லிங்கம்மாவை அவள் அப்பா மீண்டும் அழைத்து வந்து வேலுமணி வீட்டில் விட்டுவிட்டு நீங்கள் யாரை வேண்டுமானாலும் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று கூறி செல்கின்றார். லிங்கம்மாவை அழைத்துத் திருமணத்திற்குத் தாலி எடுத்துக் கொடுக்க லிங்கம்மாவை அழைத்து வர வேலுமணி செல்கின்றான். அங்கு அவள் அடிபட்ட ஒரு பூனைக்குத் தாய்பாசத்துடன் கட்டுப் போட்டுக் கருணையுடன் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். இதைப் பார்த்த வேலுமணி, ''வீட்டு நாய்கிட்ட, அது நாயுங்கறதுக்காக, ஆசை வைக்காமலா இருக்கோம்? இவளும் ஒரு மனுஷிதான். 'இளையோடியா' கிட்ட அவஸ்தப் படணுமா? அவள் அவஸ்தையிலே கிடைக்கிற கல்யாணம், அதுல கிடைக்கிற சுகம், ஒரு சுகமா?''

**"பிறந்தாலே சாவு இருக்குன்னு அர்த்தம். சாவப் போற நாம் ஏன் அதுவறைக்கும் இவளுக்காக வாழக்கூடாது"**[79] என்று தனக்குப் பார்த்த பெண்ணைத் தன் தம்பிக்கு முடித்துரைத்தான்.

எப்படிப்பட்ட பெண்ணாக இருந்தாலும் பரவாயில்லை. அவளுக்காகவே வாழவேண்டும் என்ற உறுதியுடனும் குறிக்கோளுடனும் செயல்படும் பாத்திரமாக வேலுமணியைப் படைத்துள்ளார். மேலும், தமிழ் கலாச்சாரமான 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கருத்தையும் இப்பாத்திரம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

‘பனையேறி குடும்பத்தைச் சேர்ந்தவன்’ என்ற கதையில் வேலாயுத நாடார் தன் மகன் நடராஜனைத் தன் சொல் மீறாத மகனாக வளர்த்து வந்தார். அவனுக்குத் திருமணம் நடக்கும்போது நகைகளை எடைபோட்டுப் பார்த்துவிட்டுத் தனக்குக் கூறியபடி நகை கொடுக்கவில்லை என்று தாலி கட்டும் நேரத்தில் திருமணத்தையே நிறுத்தியவர். பின்பு மேளம் வாசிப்பவர் தனது நகையைக் கொடுத்துத் திருமணம் முடிந்தது.

நடராசன் கனகவல்லியுடன் சென்னையில் குடியேறினான். தன் தந்தையை மறந்துவிட்டான். பலமுறை அவர் கடிதம் போட்டும் பதில் இல்லை. அதனால் மகனைப் பார்க்கச் சென்னை வருகிறார். மகன் இல்லை மருமகள் தான் இருந்தாள். நடராஜனைப் பேருந்து நிலையத்திற்கு வரச் சொல்லி கடிதம் போட்டேன் ஏன் வரவில்லை என்றார். அதற்குக் கனகவல்லி **“அதுவா? என் தம்பி கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய எங்க ஊருக்கு போயிருக்காரு. ஒரு வகையில் நான் உங்களுக்கு நன்றி சொல்லணும் மாமா. ஒங்க மகனை கிழிச்ச கோட்டைத் தாண்டாம நீங்க பழக்கி வச்சது நல்லதாப் போச்சு. இப்போ நான் கிழிச்ச கோட்டை அவரு தாண்ட மாட்டாரு. சரி சரி. உள்ள வாங்க”**[80] நகைக்காகத் தன் திருமணத்தை நிறுத்தி, தன் குடும்பத்தைப் பனை ஏறி குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று கூறிய வேலாயுத நாடாரைப் பழிவாங்க வேண்டும் என்ற குறிக்கோளுடன், தளராத மனத்துடன் செயல்படும் பாத்திரமாகக் கனகவல்லிப் பாத்திரத்தைப் படைத்துள்ளார் ஆசிரியர்.

தற்காலத்தில் நகைக்காக நிற்கப்படும் திருமணங்கள் பல. அப்பொழுது மணமகள்கள் விவரமாகச் செயல்பட வேண்டும் என்ற கருத்தைக் கனகவல்லி மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

மேலும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்ற நடராஜனை இப்போது மனைவி சொல் மிக்க மந்திரமில்லை என்று மாற்றும் பாத்திரமாகவும் கனகவல்லியை ஆசிரியர் படைத்துள்ளார்.

'நரம்புக் கயிறு' என்ற கதையில் தேசிங்கு தாய், தந்தை இல்லாத அனாதை, கடலில் மீன்பிடிக்கும் தொழிலில் திறமைசாலி. அதனால் எதிர்படகுக்காரன் கூப்பிட்டதற்குச் செல்லாததால், நடுக்கடலில் அவனை வம்புக்கு இழுத்தார்கள். அதனால் தேசிங்கு அவர்கள் வலையை அறுத்து விடுகின்றான். இதனால் அனைவரும் அவனை ஒதுக்கி வைத்து விடுகின்றனர். மனம் சோர்ந்த நிலையில் இருக்கின்றான். வடும்பா என்ற பெண், நீ ஏன் கவலைப்படுகின்றாய் என்று கூறி பலகை எடுத்துக் கொண்டு மீன்பிடிக்க அழைத்துச் செல்கின்றாள். அதில் பிடிபட்ட முட்சொறி மீனைத் தூக்கி எறிகின்றாள். தேசிங்கு ஏன் என்று கேட்க அதற்கு வடும்பா **"ஒன்ன தள்ளி வச்சவங்க இந்த முட்டைச் சொறி மாதிரி ... அவங்ககிட்டே போகப் படாது ... விலகிக்கணும் ... நானும் அப்படித்தான் செய்யப்போறேன் ... தேசிங்கு, அவளைப் பயபக்தியாகப் பார்த்தபோது, வடும்பா, ஒய்யாரமாய் சிரித்தாள். பிறகு முகத்தில் ஓர் உறுதிபடர, அவனை அதட்டினாள்."**[81]

கடுமையான உழைப்பும், தளராத மனமும், குறிக்கோளுடனும் செயல்பட்டால் நாம் எதையும் சாதிக்கலாம் என்று வடும்பா பாத்திரம் மூலம் ஆசிரியர் படைத்துள்ளார். இதில் கடின உழைப்பும், கைத்தொழிலும் தெரிந்திருந்தால் எதையும் எளிதாக எடுத்துக் கொண்டு செயல்படலாம் என்பதனையும் நம்மைத் தள்ளி வைத்தவர்களை நாம் தள்ளி வைப்போம் என்பதையும் கூறியுள்ளார்.

'அசைக்க முடியாது' என்ற கதையில் பெருமாள்சாமி ஒரு விவசாயி. அவர் கடன் வாங்க வேண்டும் என்ற ஆசையில், வங்கி மேலாளரைச் சந்தித்து, தனது கருத்தைச் சொல்கிறார். புதிதாகக் கடன் தரமாட்டேன் என்கிறார். உடனே பெருமாள்சாமியும் வங்கி மேலாளரும் ஒவ்வொரு ஊராகச் சென்று மாட்டைப் பார்க்கின்றனர். எல்லா மாட்டையும் பிடிக்காமல் குறை சொல்கின்றார். கடைசியாகச் சந்தையில் பெருமாள்சாமி காட்டிய மாட்டை வாங்கினார்கள். ஆனால், **"பெருமாள்சாமி தனது மாடுகளையே சந்தைக்கு இன்னொருவர் மூலம் அனுப்பி 'வாங்கிக்' கொண்டார் என்பது வெட்னரி டாக்டருக்கும், சப்-மானேஜருக்கும் தெரியாது.**

**பாங்க் மானேஜர் மட்டும், சப்-மானேஜரிடம் பீற்றிக் கொண்டிருந்தார் : "பார்த்தியா ... அந்தப் பெருமாள்சாமி என்னை எபபடியெல்லாம் மடக்கப் பார்த்தான்? முடிஞ்சுதா? கடைசில ... மனுஷன் நாம் சொன்னதைக் கேட்டுட்டானே இதுக்குத்தாய்யா ... டெக்னிக் வேணுங்கிறது ... நாம் சொல்ற விதத்துல சொன்னால், அவங்க புரிஞ்சுக்குவாங்க ... நல்ல ஜனங்க ... சர்க்காரும் பாங்குகளும் வழங்குகிற சலுகைகளை அயோக்கியங்கதான் தெரிஞ்சு வச்சிருக்காங்கன்னு நீரு சொல்றது தப்பு"**[82] பெருமாள்சாமி கிராமத்து மனிதராக இருந்தாலும், தான் வங்கியில் இருந்து கடன் வாங்க வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்பட்டார். நினைத்தது போல் இரண்டு அதிகாரிகளையும் ஏமாற்றி தனது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளும் பாத்திரமாகப் படைத்துள்ளார் ஆசிரியர்.

**8. அதிகார குணம் கொண்ட மாந்தர்கள்**

'கலெக்டர் வருகிறார்' என்ற கதையில் மாவட்ட ஆட்சியர் கிராமத்தை ஆய்வு செய்ய வந்துள்ளார். அங்கு ஆர்.டி.ஓ.,

தாசில்தார், கணக்குபிள்ளை அனைவரும் உள்ளனர். மாவட்ட ஆட்சித் தலைவர் ஊரைச் சுற்றி வர ஜீப் வேண்டும் என்கிறார். ஆனால் ஜீப்பை சேர்மன் எடுத்துச் சென்று விட்டார். இதை ஆர்.டி.ஓ. மாவட்ட ஆட்சியரிடம் கூற, அவர், **"நியூசென்ஸ் ஃப்பெல்லோ ... ஜீப்பைக் கொடுத்திட்டே வெறி பாட். நான் ஊர் சுத்தணும்"**

**தாசில்தார், ஆர்.டி.ஓ. ஆகப் பிரமோஷன் ஆகப் போகிறவர் சமயம் பார்த்துச் சொன்னார்.**

**"என்ன கமிஷனர் சார், ஜீப் இல்லைன்னு என்கிட்ட ஒரு வார்த்தை சொல்லியிருந்தா, நான் கார் ஏற்பாடு செய்திருப்பேனே"**

**கலெக்டர் தாசில்தாரைக் கனிவாகப் பார்த்துவிட்டுக் கமிஷனரிடம் கத்தினார் : 'யூ ... யூ ... நோ யூஸ்!' கத்திவிட்டு அறைக்குள் போய்விட்டார்."[83]** அதிகார பீடத்தில் அமர்ந்துள்ள அதிகாரிகள் அன்பாகவும் அமைதியாகவும் செயல்பட்டால் எதையும் சாதிக்கலாம். ஆனால் தன் கையில் அதிகாரம் உள்ளது என்ற ஆணவத்தில் இருந்தால் அனைவருமே பகையாளியாகத்தான் ஆகவேண்டும். கோபப்படும் மாவட்ட ஆட்சியர் ஊரைச் சுற்றிப் பார்க்காமல் அறைக்குள் சென்று விடுகிறார். மேற்கண்ட கருத்துக்களை மாவட்ட ஆட்சியர் பாத்திரம் மூலமாக ஆசிரியர் உணர்த்தியுள்ளார்.

'சனிக்கிழமை' என்ற கதையில் கோபால் கல்லூரி மாணவனாக இருக்கும்போது தன் கல்லூரிக்குச் சனிக்கிழமை விடுமுறை வேண்டும் என்று கல்லூரி முதல்வரிடம் கேட்டு, அவர் அனுமதிக்காததால் கல்லூரி மாணவர்களுடன் சேர்ந்து கொண்டு போராட்டம் செய்தவன். அப்படிப்பட்ட கோபால்

இப்போது தாலுக்கா அலுவலகத்தில் எழுத்தராகப் பணிபுரிகின்றான். மாவட்ட ஆட்சியருக்கு அனுப்ப வேண்டிய விவரங்களை அனுப்ப வில்லை. தாசில்தார் நாளை வந்து அனுப்பிவிடு என்றார். சார் நாளைக்குச் செகன் சார்ட்டர்டே என்கிறான். உடனே தாசில்தார் **“எனக்குச் செகண்ட் சேட்டர் டேக்கு அர்த்தம் சொல்லிக் கொடுக்கிறியா? இந்தா பாருய்யா, நீ அரசாங்க ஊழியன். இருபத்துநான்கு மணி நேர ஊழியன். பேய்க்கு வாழ்க்கைப் பட்டால் புளிய மரத்தில் ஏறித்தான் ஆகணும். நாளைக்கு வர முடியுமா? முடியாதா? ரெண்டுல ஒண்ணைச் சொல்லு ...**

**வரேன் சார். ஆனா நாளைக்குள்ள முடிக்க முடியாது சார்**

**முடியாவிட்டால் ஞாயிற்றுக்கிழமையும் வா. முடியுமா முடியாதா?**

**முடியும் சார். ஆனால் ‘இந்த ஞாயிற்றுக்கிழமை மட்டும்**

**ஒங்களுக்கெல்லாம் வேலை கொடுத்ததே தப்புய்யா. நீ எல்லாம் இங்க வந்து என் பிராணனை, ஏன்யா வாங்குறே? சொல்லுய்யா, வர முடியுமா? இல்ல வரவழைக்கணுமா?**

**வரேன் சார்”**[84]

அதிகாரத்தில் உள்ள மேல் நிலை ஊழியர் எப்படி நடந்து கொள்ளக்கூடாது என்பதற்குத் வட்டாச்சியர் பாத்திரம் ஒரு எடுத்துக்காட்டாகும். கல்லூரிக் காலத்தில் எந்தச் சனிக்கிழமைக்காகப் போராடினானோ அதே சனிக்கிழமை இப்போது பணிக்கு வரவேண்டிய நிலையில் உள்ள பாத்திரமாகக் கோபாலைப் படைத்துள்ளார். அரசாங்க ஊழியர்களுக்கு எல்லா நாட்களும் பணிநாட்கள்தான் என்ற கருத்தையும் இதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

‘திரிசங்கு நரகம்’ என்ற கதையில் குப்புசாமி தன் வயிற்றுப் பிழைப்புக்காகப் பக்கத்து ஊர், வங்கியில் கடன் பெற்று பெட்டிக்கடை வைத்து நடத்தி வருகின்றான். அவன் கடை முன்னால் ஒரு கொலை சம்பவம் நடைபெறுகிறது. அவனை மருத்துவமனையில் கொண்டு சேர்க்கின்றான். அவன் இறந்து போகின்றான். இந்த இரக்கக் குணமே அவனுக்கு எமனாக மாறியது. கொலைபட்டவன் உறவினர்கள் சாட்சி சொல் என்கின்றனர். காவல் துறையும் பார்த்ததை எழுதிக் கொடு என்றனர். கொலை செய்தவன் உனக்கும் இதே கெதிதான் என்றான். காவல்துறையின் தொல்லையை அவனால் தாங்க முடியவில்லை. இரண்டுமுறை குப்புசாமி ஏமாற்றி ஓடிவிட்டான். அதனால் உதை வாங்கியதுதான் மிச்சம். சப்-இன்ஸ்பெக்டர் **“இந்த பாருடா சர்க்காரோட ஒத்துழைக்க வேண்டியது ஒன் கடமை. நடந்தது ஒழுங்கா சொல்லு. அத எழுதிக்கிறோம். கடைசில ஒரு சின்னக் கையெழுத்துப் போட்டுடு. இல்லன்னா ஒன்னையும் கொலை செய்ய உடந்தயாய் இருந்ததாகப் போட்டு ஒனக்கும் தூக்குத் தண்டனை வாங்கித் தராம விடமாட்டோம். இன்னும் சார்ஜ் ஷீட் போடல. எமன் கிட்ட இருந்து வேணுமுன்னாலும் தப்பிடலாம். ஆனா எங்ககிட்ட இருந்து மட்டும் முடியாது. புரியுதா”**[85] என்கிறார்.

இப்படி அதிகாரம் செய்ததால் குப்புசாமி தற்கொலை செய்து கொண்டான். சப்-இன்ஸ்பெக்டர் அதிகாரத்தினால், ஓர் உயிர் இழப்பு ஏற்பட்டது. கோபப்பட்டால் இழப்பு ஏற்படும் என்பதற்கு இணங்க அவர் நினைத்தது நடைபெறவில்லை என்ற கருத்தை காவல் ஆய்வாளர் பாத்திரம் மூலம் காட்டியுள்ளார்.

## 9. பேராசைக் குணம் கொண்ட மாந்தர்கள்

'கண் கெட்ட பின்னே' என்ற கதையில் உமா என்பவள் சம்பத் மனைவி. இவன் அலுவலகத்தில் வேலை செய்கின்றவன். உமா வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொள்ளும் பெண்ணாக இருந்தவள். ஆடம்பர வாழ்க்கைக்கு ஆசைப்பட்டவள். தனது தோழிகள் அழைக்கும் அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் செல்ல ஆசைப்பட்டவள். சம்பத்தின் உடல்நிலை குறித்துப் பலமுறை கூறியும் பொய்யான சோகத்தைக் காட்டி அவனைப் பல நிகழ்ச்சிகளுக்கு அழைத்துச் செல்வாள். மிகவும் முடியாத நிலையில் அவன் மருத்துவரிடம் சென்றான். மருத்துவர் அவனுக்கு நிமோனியா இருக்கு, டி.பி. இருக்கு சிகிச்சை பெற்று ஓய்வு எடுக்க வேண்டும் என்று சொல்கின்றார். ஆனால் உமா காஷ்மீர் செல்ல வேண்டும். அந்த குழுவுக்குத் தலைவி நான் தான், ஊசி போட்டால் சரியாகி விடும் என்று கூறிச் சம்பத்தை அழைத்துச் செல்கின்றாள். ஆனால் ஊர் திரும்பும்போது சம்பத்துக்கு **"சென்டிரல் ஸ்டேஷனில் இறங்கும்போதே சம்பத் ரத்தம் ரத்தமாக வாந்தி எடுத்தான். உடனடியாக அவனை ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். உமா அதிர்ந்து போனாள். மூன்று நாட்களாக அவள் சாப்பிடவே இல்லை. அவன் அருகிலேயே இருந்து கவனித்தாள். அவன் மெலிந்து போன உடம்பையும், குறுகிப் போன பாகற்காயைப் போல் தாடி மீசையுடன் காட்சியளித்த முகத்தையும் பார்த்துத் தேம்பித் தேம்பி அழுதாள். அவன் காலில் முகத்தை வைத்துத் கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிறாள்."**[86]

ஆடம்பரத்திற்கும் உல்லாசத்திற்கும் ஆசைப்பட்டால் அதனால் ஏற்படும் இழப்புகளைச் சந்திக்க வேண்டும் என்பதை உமா பாத்திரம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

'ரசாயினப் பரிட்சை' என்னும் கதையில் சங்கரன் ஓர் அலுவலக ஊழியன். திருமணமான புதிதில் ஒரு நாள் அவன் பணி முடித்து வீட்டுக்கு வரும் வழியில் திருக்குறளில் 'பிரிவாற்றாமை' என்ற அதிகாரம் பற்றிய பட்டிமன்றம் நடந்தது. அதைப் பார்த்துவிட்டு வீட்டுக்கு வருகின்றான். அவன் மனைவி கமலா, காலதாமதமாக வந்த காரணத்தால், அவனை உள்ளே அனுமதிக்கவில்லை. பின்பு அவளைச் சமாதானப்படுத்துவது போதும் போதும் என்றாகிவிட்டது. அதிலிருந்து அவன் காலதாமதமாகச் செல்வது கிடையாது. நீங்கள் இல்லாமல் நான் இல்லை என்பாள். உங்களைப் பிரியேன். பிரிந்தால் உயிர் தரியேன் என்பாள். அப்படிப்பட்ட கமலா பணத்தாசையின் காரணமாக சங்கரனை வெளிநாடு போகச் சொல்கிறாள். "சங்கரன் அவளைத் திடுக்கிட்டுப் பார்த்தான். அவள் எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தாள். அவனுக்குச் சொந்தமில்லாதவள் போல், எதையோ நோக்கி எதையோ சிந்தித்தக் கொண்டிருப்பவள் போல் தோன்றியது. 'என்ன வார்த்தை சொன்னீங்க ஒரு நாள் கூட ஒங்களைப் பார்க்காமல் இருக்க முடியலை. ஒரு வருஷத்துக்கு 365 நாளாச்சே! ... ஒங்களுக்குப் பைத்தியமா?' என்று சொல்லிவிட்டு, தன் வாயைக் கரத்தால் சாத்துவாள் என்று எதிர்பார்த்த அவன், மனைவி தீயை மிதிப்பவள் போல் திடுக்கிட்டு அவனைக் கோபமாகப் பார்ப்பாள் என்று எண்ணிய அவன் 'நீங்க இப்டி விட்டுட்டுப் போகத்தான் கட்டிக் கொடுத்தாங்களோ?' என்று தன்னைக் கட்டி அணைத்துக் கண்ணீர் மல்குவாள் என்று எதிர்பார்த்த அவன் திடுக்கிட்டான். ஏமாற்றம் தாங்காமல், தனக்குள்ளேயே அலறினான். உடம்பு ஆடுவதைத் தடுப்பதற்காக, நாற்காலியைக் கட்டுப் பிடித்துக் கொண்டான்."[87]

திருமணமான புதிதில் உங்களைப் பார்க்காமல் ஒரு நாள் கூட இருக்க முடியாது என்று கூறியவள் இன்று சர்வ சாதாரணமாக நீங்கள் வெளிநாடு சென்று சம்பாதித்து வாருங்கள் என்கிறாள். பணம் பத்தும் செய்யும் என்பார்கள். அதுபோன்று பணத்தாசையால், பாசத்தைத் துச்சமாக மதிக்கும் பெண்ணாகவும் பேராசைப் பிடித்தப் பெண்ணாகவும் கமலா பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

## 10. தீய குணம் கொண்ட மாந்தர்கள்

'கதையைக் கேளுங்க' என்ற கதையில் குமார் கதை எழுதும் ஆசிரியன். அவன் கதை கூறும்போது யாரும் கேட்க மாட்டார்கள். குறைந்தது அவன் மனைவி கூட கேட்ட மாட்டாள். ஒருநாள் மெரினா கடற்கரையில் தனது பழைய நண்பன் சினிமா துணை நடிகர் ஆனந்தசாமியைச் சந்தித்து, நலம் விசாரித்தான். அவனுக்குச் செலவுக்கு காசு கொடுத்துத் தன் கதையைக் கூறினான். துணைநடிகர் ஆனந்தசாமி குமாரிடம் இந்த கதை சூப்பர். உங்களுக்குப் பரிசு கிடைக்கும். கிடைக்கவில்லை என்றால் என் பெயரை மாற்றிக் கொள்கிறேன் என்றான். கதைகேட்ட ஆனந்தசாமி அக்கதையை 'கள்ளக்காதல்' என்று பெயரிட்டுத் திரைப்படம் எடுத்து வெளியிட்டான். ஆனால் குமார் எழுதி அனுப்பிய கதை அவனுக்கே திரும்பி வந்தது. 'கள்ளக்காதல்' படத்தின் திருட்டுக்கதை. திரைப்படம் பார்க்கும் பழக்கம் இல்லாத குமாருக்கு இது தெரியவில்லை. ஆனால் ஆனந்தசாமி கூறியது போல் "உங்களுக்கு நோபல் பரிசு கிடைக்கலேன்னா, என் பேரை மாத்திக்கிடறேன் என்று முன்பு அவனிடம் உறுதி கூறிய ஆனந்தசாமி, சொன்ன சொல் தவறாதவன். சிறந்த வில்லனாகவும், டைரக்டராகவும் மாறிவிட்ட அவன் இப்போது தன் பெயரை 'மகிழ்நாதன்' என்று மாற்றிக் கொண்டான்."[88]

உண்ட வீட்டிற்குத் துரோகம் நினைக்கும் ஆனந்தசாமி குமாருக்கு வந்த சொற்ப வருமானத்தையும் கெடுத்துவிட்டான். இனி அவன் எந்த பத்திரிகைக்கும் கதை அனுப்ப முடியாத நிலைக்கு தள்ளிவிட்டான். பிறர் உழைப்பில் இன்பம் காணும் தீய குணம் கொண்ட பாத்திரமாக இவனை ஆசிரியர் படைத்துள்ளார்.

## தொகுப்புரை

- ❖ பாத்திரப்படைப்பு என்பதன் விளக்கம் சிறுகதைகளில் பாத்திரங்கள் இடம்பெறும் தன்மை சுட்டப்பெற்றுள்ளது.
- ❖ பாத்திரங்களின் பண்புநலன்கள், சிலவகையான பாகுபாடு கொண்டு வகைப்படுத்தி விளக்கிக் கூறப்பட்டுள்ளது.
- ❖ அறநிலை மாந்தர்களின் செயல்கள், இரக்கக் குணம் கொண்ட மாந்தர்களின் செயல்கள், போராட்டக் குணம் கொண்ட மாந்தர்களின் மனநிலை, அதனால் ஏற்படும் நன்மை போன்றவை விளக்கப்பட்டுள்ளன.
- ❖ பாலுணர்வில் பாதிக்கப்பட்ட மாந்தர்களின் வாழ்க்கைநிலை, எதிர்நிலை மாந்தர்களின் சூழ்ச்சியால் ஏற்படும் தீமைகள், அதனால் ஏற்படும் தீர்வுகள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.
- ❖ அஃறிணை மாந்தர்களைக் கொண்டு காதலை விளக்கும் விதம் கூறப்பட்டுள்ளது.
- ❖ குறிக்கோள் குணம் கொண்ட மாந்தர்களுக்கு அதிகார குணம் கொண்ட மாந்தர்களால் சமுதாயத்தில் ஏற்படும் பாதிப்புகள் போன்றவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.
- ❖ பேராசைக் குணம் கொண்ட மாந்தர்களால் ஏற்படும் தனிமனித இழப்பு போன்ற கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.

ஙூ

## சான்றெண் விளக்கம்

1 த.மணிமாறன், இலக்கிய கலை, ப. 18.

2 இரா.பாலசுப்ரமணியன், நாவல் கலையியல், ப. 115.

3 மேலது, ப. 118.

4 ச.சோமசுந்திரம், தமிழ் இலக்கிய கொள்கை, ப. 105.

5 வெ.கனகசுந்தரம், ஜெகசிற்பியின் சமூகப் புதினங்கள், ப. 198.

6 அ.வெங்கட்ராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப. 41.

7 தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கிய திறனாய்வியல், ப. 262.

8 மேலது, ப. 262.

9 மேலது, ப. 263.

10 வ.கமலக்கண்ணன், இக்கால இலக்கியம் ஒரு நோக்கு, ப. 77.

11 இரா.குமாரவேலன், கவிதை நாடகம் ஒரு கண்ணோட்டம், ப. 99.

12 கல்கி, அலைஓசை, ப. 7.

13 இரா.சண்முகவேலன் (க.ஆ), கதைமாந்தர் படைப்பு, ப. 35.

14 ஜெயகாந்தன், சில நேரங்களில் சில மனிதர்கள் (முன்னுரை)

15 சு.பாலந்திரன், இலக்கிய திறனாய்வு, பக். 24-225.

16 மீனாட்சி முருகரத்தினம், கல்கியில் சிறுகதைக்கலை, ப. 110.

17 கா.சிவதம்பி, தமிழில் சிறுகதை தோற்றமும் வளர்ச்சியும், ப. 19.

18 செ.கணேசலிங்கன், கலையும் சமுதாயமும், ப 9.

19 தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கிய திறனாய்வியல், ப. 337.

20 தி.சு.நடராசன், திறனாய்வுக் கொள்கைகளும் அணுகுமுறைகளும், ப. 142.

21 இரா.தண்டாயுதம், நாவல் வளம், ப. 98.

22 கோ.வெ.கீதா, தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம், ப. 142.

23 சௌ.இரஞ்சனா, கம்பராமாயணத்தில் எதிர்நிலை மாந்தர்கள், ப.12.

24 மா.மனோகரன், பாரதிதாசன் சிறுகதைகள் ஓர் ஆய்வு, பக்.55,56.

25 சி.செல்வம், எம்.வி.வெங்கட்ராம் கதைகள் ஓர் ஆய்வு, ப. 65.

26 தா.வே.வீராசாமி (க.ஆ), அகிலன் நாவல்களில் தலைமை மாந்தர், ப. 165.

27 அ.ச.ஞானசம்பந்தன், இலக்கிய கலை, ப. 323.

28 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 17.
29 மேலது, பக். 50, 51.
30 மேலது, ப. 83.
31 மேலது, ப. 116.
32 மேலது, பக். 159, 160.
33 மேலது, ப. 255.
34 மேலது, பக். 381, 382.
35 மேலது, ப. 506.
36 மேலது, ப. 521.
37 மேலது, பக். 559, 560.
38 மேலது, பக். 604, 605.
39 மேலது, ப. 198.
40 மேலது, பக். 36, 37.
41 மேலது, ப. 111.
42 மேலது, ப. 341.
43 மேலது, ப. 423.
44 மேலது, ப. 493.
45 மேலது, பக். 597-98.
46 மேலது, ப. 42.
47 மேலது, ப. 174.
48 மேலது, ப. 204.
49 மேலது, ப. 333.
50 மேலது, ப. 218.
51 மேலது, பக். 145, 146.
52 மேலது, பக். 392, 393.
53 மேலது, ப. 465.
54 மேலது, ப. 531.
55 மேலது, ப. 532.
56 மேலது, ப. 610.
57 மேலது, பக். 625, 626.
58 மேலது, ப. 69.
59 மேலது, ப. 133

60 மேலது, பக். 135, 136.

61 மேலது, ப. 269.

62 க.கனகராசு, அண்ணன்மார்சாமி கதைவடிவங்களும் வழிபாடு, ப. 90.

63 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 52.

64 மேலது, ப. 75.

65 மேலது, ப. 288.

66 மேலது, பக். 319, 320.

67 மேலது, ப. 373.

68 மேலது, ப. 417.

69 மேலது, ப. 457.

70 மேலது, ப. 588.

71 மா.இராமலிங்கம், நோக்குநிலை, ப. 15

72 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 443.

73 மேலது, ப. 569

74 ம.திருமலை, தமிழ் மலையாள நாவல் ஓர் ஒப்பாய்வு, ப. 133.

75 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், பக். 154, 155.

76 மேலது, ப. 230.

77 மேலது, ப. 279.

78 மேலது, ப. 354.

79 மேலது, ப. 368.

80 மேலது, ப. 576.

81 மேலது, ப. 631.

82 மேலது, ப. 386.

83 மேலது, ப. 21.

84 மேலது, ப. 409.

85 மேலது, ப. 542.

86 மேலது, ப. 400.

87 மேலது, ப. 481.

88 மேலது, ப. 502.

# இயல் - 4

## உத்தி முறைகள்

### முன்னுரை

படைப்பாளர்கள் தங்களுடைய கொள்கைகளை கருத்துக்களை வாசகர்களிடம் கொண்டு செல்வதற்குப் படைப்பில் பல புலப்பாட்டுக் கூறுகளைக் கையாளுகின்றனர். படைப்பாசிரியர்களின் அறிவுத்திறன், கற்பனைவளம், கலைச்சூழல் ஆகியவற்றிற்கேற்ப உத்தி முறைகள் வேறுபட்டு அமைகின்றன. உத்தி கதையை விளக்குவதோடு கதையை வளர்த்துச் செல்லவும் உதவுகிறது. எந்த முறையில் கதையைச் சொன்னால் வாசகரைக் கவரும் என்ற நோக்கத்தில் எழுதுவது உத்தியாகும். படைப்பாளன் தான் உணர்ந்த நிலையில் கருத்தைப் புலப்படுத்த வழிமுறைகளை மேற்கொள்வான் அவையே உத்திகளாகும்.

ஒரு கலைப்படைப்பு உருவாக்குவதற்குப் படைப்பாளன் மேற்கொள்ளும் நுண்ணிய அணுகுமுறை உத்தியாகும். சிறுகதைகள் காலத்தை வென்று நிலைத்திட அவற்றின் உத்திகள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ள சிறுகதைகளில் கதையாசிரியர் பொருள் புலப்பாட்டிற்கு எவ்வகையான உத்திகளைக் கையாண்டுள்ளார் என்பதை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**உத்தி இலக்கணம்**

பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் முப்பத்திரண்டு உத்திகளை உணர்த்துகிறது.

> **"ஒத்த காட்சி, உத்திவகை விரிப்பின்**
> **நுதலிய தறிதல் அதிகார முறையே**
> **தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந்நிறித்தல்**
> **.......................................**
> **மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்து கொண்டு**
> **இனத்திற சேர்த்தி உணர்த்தல் வேண்டும்**
> **நுனிர்தகு புலவர் கூறிய நூலே!"**[1] *(தொல்.பொரு.நூ.112)*

என்கிறார் தொல்காப்பியர்.

பவணந்தி முனிவர் தம் நன்னூலில் தொல்காப்பியர் குறிப்பிடும் உத்திகளையே பெரும்பாலும் குறிப்பிடுகிறார். அவ்வுத்திகள்,

> ***"நுதலிப்படுத்தல் ஒத்த முறைவைப்பு தொகுத்துச் சுட்டல்***
> ***வகுத்து காட்டல் முடித்துக்காட்டல் முடிவிடங் கூறல்***
> ***............................................................***
> ***மிக வெடுத்துரைத்தல், சொல்லின் முடிவில் அப்பொருள் முடித்தல்***
> ***ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல், உய்த்துரை வைப்பு"***[2]
> *(நன்னூல், நூ. 14)*

என்பனவாகும். நன்னூல் உரையாசிரியரான சிவஞான முனிவர் உத்தி இலக்கணத்தை, **"ஓரிலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்தி உணர்த்தி அப்பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும்**

ஏற்குமிடம் அறிந்து இவ்விடத்திற்கு இஃதம் எனக் கருதித் தக்க வகையாகச் சொல்லுவது தந்திரவுத்தியாகும்”[3] என்று குறிப்பிட்டுள்ளார்.

**உத்திகள்**

உத்தி என்பது ஆங்கிலத்தில் ‘Technique’ என வழங்கப்படுகிறது. நா.கதிரைவேற்பிள்ளை அவர்களின் தமிழ்-தமிழ் அகராதி ‘உத்தி’ என்னும் சொல்லுக்கு அனுமானம், அறிவு, சேர்தல், இசைவு, இணக்கம், செல்வம், சொல், தந்திர உத்தி, திருவுறுப்பு தாக்கங்கள் ஆகிய பல பொருள்களைக் குறிப்பிடுகின்றது.

உத்தி என்பது கருத்தை விளக்குவதற்குப் படைப்பாளி பயன்படுத்தும் சொல் திட்டமாகும். படைப்பாளன் அழகு வெளிப்படுவதற்கு இது உறுதுணையாக அமைகிறது.

உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டு முறையே உத்தியாகும். “ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்கும், பயன் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படுகிறது”[4] என்கிறார் சி.இ.மறைமலை.

“ஆக்குவோனின் படைப்பாற்றலும் தனித்தன்மையும் ஒவ்வொரு கூற்றிலும் வெளிப்படும்போது புலமை வண்ணம் தெரிகிறது. அதனை நுனித்து உணர்ந்து கொள்ள உத்தியாய்வு உதவுகின்றது”[5] என்கிறார் ச.வே.சுப்ரமணியன்.

“பொதுவாக படைப்பாளன் தான் கூறவந்த செய்தியினை உள்ளடக்கத்தை வெளிப்படுத்தும் முறையை உத்தி எனலாம். சிறுகதை ஆசிரியன் தன் உள்ளத்தில் கண்டதை அப்படியே

படிப்பவனுடைய உள்ளத்திற்கு மாற்ற உத்திகள் கை கொடுக்கின்றன"[6] என்கிறார் இரா.தண்டாயுதபாணி.

"ஒரு செயலை உரிய கருவியின் முறையறிந்து அத்துறைச் சார்ந்த அறிவோடு செய்தலே உத்தி எனலாம். 'சிறு உளியால் கல்லும் தகரும் கனங்குழாய் தகராக் கொல்லுலைக் கூடத்தினால்' என்பது போல் உளிக் கொண்டு கல்லை உடைபடும் இடமறிந்து உடைக்கும் செயல்நுட்பம் உத்தியாகும்"[7] என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன்.

"உத்தி என்பது கலை ஆக்க முறை படைப்பில் முத்திரைப் பதிவாய் அமைவது. அவன் ஆளுமைத்திறத்தின் தனித் தத்துவங்களைச் சுட்டிக்காட்ட வல்லது"[8] என்கிறார் சி.மறைமலை.

"உத்தி என்பது தான் கூறவந்த செய்தியில் உள்ள பக்கத்தை வெளிப்படுத்தும் முறையே"[9] என்கிறார் ந.பிச்சமுத்து.

"ஒருவர் ஒன்றைச் செய்யும்போது பயன்படுத்தும் தொழிற்கலை நுட்பக் கூறுகளே உத்தி என்கிறோம்"[10] என்கிறார் க.செல்லப்பன்.

"இலக்கியத்தில் புலப்படுத்தும் முறை பல உத்திகளை உள்ளடக்கியது. உயிர் தாங்கிய எலும்புக்கூட்டிற்குப் புற அழகு தருகிற பல்வேறு உறுப்புகளைப் போன்றது உத்திகள் **(Techniques)** எனலாம்"[11] என்கிறார் இரா.பாலசுப்ரமணியன்.

/எந்த ஒரு கலைஞனும் தன்னுடைய படைப்புகள் எதுவாயினும் அதைப் பயனாளிகள் முழுமையாய் உணர்ந்து கொள்வதற்குப் பயன்படுத்தும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி

எனலாம். கட்டுரை, கவிதை, நாடகம், சிறுகதை, நாவல் எதுவாக இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட அமைப்பில் அவற்றை எழுத வேண்டும். அப்போதுதான் அந்தப் படைப்பு வாசகர்களைச் சரியாகச் சென்றடையும் என்பர்.

**தமிழ்ச் சிறுகதைகளில் உத்தியின் வளர்ச்சி**

தமிழில் தோன்றிய முதல் சிறுகதை என்று பலராலும் கூறக் கூடியது வ.வே.சு.ஐயரின் 'குளத்தங்கரை அரச மரம்.' இக்கதையில் ஒரு மரம் கதை சொல்லுவது போன்ற புதுமையான உத்தியை முறை பின்பற்றப்பட்டுள்ளது. ஆனால் அவரின் உத்தி அந்த அளவிலேயே நின்றுவிட்டது.

புதுமைப்பித்தன் தன் பெயருக்கு ஏற்ப தனது கதைகளில் புதுமையைப் புகுத்தியவர். தன் சிறுகதைகளில் பல்வேறு உத்திகளைச் சோதனை அடிப்படையில் கையாண்டவர். அவரது ஒவ்வொரு சிறுகதையிலும் ஏதாவது ஒரு புதுமையைக் காணலாம். நனவோடை உத்தியை முதன்முதலில் தமிழ்ச் சிறுகதைகளில் அறிமுகப்படுத்தியவரும் இவரே. அடுத்து கு.ப.ராஜகோபாலன் கடித உத்தியின் மூலம் கதை சொல்வதை ஆரம்பித்தவர் ஆவார். ஒவ்வொரு படைப்பாளனுக்குமுள்ள தனித்தன்மைக்கேற்ப புதிய உத்திகள் படைக்கப்படுகின்றன. தன்னுணர்வுப் பாடல்கள், காப்பியங்கள், சிறுகதை, புதினம் என இலக்கிய வகைக்கேற்ப உத்திகள் வேறுபடுகின்றன.

**உள்ளடக்கமும் உத்திகளும்**

சிறுகதைகள் சிறந்து விளங்குவதற்குக் காரணம் உள்ளடக்கமும் உத்திகளும் ஆகும். சிறுகதையின் போக்கும், நோக்கும் அதன் உள்ளடக்கத்தாலும், உத்தியாலும் சிறக்கும்.

சிறுகதையின் உள்ளடக்கமும், உத்திகளும் ஒரு கட்டிடத்தைத் தாங்கக்கூடிய அடித்தளம் போன்றவை. சிறுகதையில் கதைச் சிறப்பாக இருந்து அதன் உள்ளடக்கமும் கதையின் உத்திகளும் சரியாக அமையவில்லை என்றால் அக்கதை சிறப்படையாமல் போகும். எனவே, சிறுகதையின் சிறப்பிற்குக் காரணம் உள்ளடக்கமும் உத்திகளும் ஆகும்.

**“சிறந்த சிறுகதைக்குச் சிறப்பான பெயர் இன்றியமையாதது. பொருத்தமான பெயரும் அதன் கவர்ச்சியுமே படிப்பவனுக்கு முதலில் அறிமுகமாகின்றன. ஒரு கதைக்கு ஒரே ஒரு சரியான பெயர்தான் இருக்கமுடியும். அந்தப் பெயரைத் தேடிப் பிடிப்பதில்தான் சிறுகதையாசிரியரின் திறமை அடங்கியிருக்கிறது.”**[12] என்கிறார் தா.எ.பியூலா மெர்சி அவர்கள்.

சிறுகதையின் தலைப்புகள் கவர்ச்சியுடன் கதைத்திறன், உள்ளீட்டுச் சுவை குன்றாத முறையிலும் அமைதல் வேண்டும். தலைப்பு கதையின் உட்கருத்தை உள்ளடங்கிய ஆலம் வித்து போன்று இருக்க வேண்டும். பல்வகை பொருளையும் தன்னுள் செறித்துக் காட்டும் சிறிய கண்ணாடி போலத் தலைப்புகள் அமைய வேண்டும்.

**உத்தி வகைகள்**

சிறுகதைகளில் உத்தியை ஆசிரியர் வெளிப்படுத்தும் முறையைக் கொண்டு வகைப்படுத்தலாம். படைப்பாளர் ஒவ்வொருவரும் தமது படைப்பு தொடங்கும்போது அவரவருக்கேற்ப உத்திகள் பலவற்றைக் கையாளுகின்றனர்.

**"இதுவரை சிறுகதைக்கு யாரும் இறுதியாக இலக்கணம் வகுக்கவில்லை; வகுக்கவும் இயலாது. அவ்வாறு வகுத்தால் வளரும் கலைக்கு வேலி கட்டுவது போலாகும்"**[13] என்பர். எனவே சிறுகதைகளில் உத்தியை வரையறுப்பது இயலாத ஒன்றாகும்.

**சிறுகதையின் தொடக்கம்**

சிறுகதைகளின் உத்திகளில் ஒன்று தொடக்கம். ஒரு கதையை இவ்வாறுதான் தொடங்க வேண்டும், இவ்வாறுதான் முடிக்க வேண்டும் என்று கூறும் உத்திகள் இல்லை. எப்படியும் தொடங்கி எப்படியும் முடிக்கும் உரிமை சிறுகதை எழுத்தாளனுக்குண்டு.

**"சிறுகதை இப்படித்தான் தொடங்க வேண்டும் என்ற நியதி ஒன்றும் இல்லைதான். என்றாலும் எப்படியும் தொடங்கிவிட முடியாது. கதைப்பொருளுக்கும் கதைக்கருவிற்கும் ஏற்ற தொடக்கங்கள் அமையும்போதே சிறுகதைகள் வெற்றி பெறுகின்றன"**[14] என்று இரா.தண்டாயுதம் கூறும் கருத்து இதற்கு அரண் செய்வதாக உள்ளது.

சிறுகதையின் தொடக்கம் கருப்பொருளை மையமிட்டுச் செல்வதாக அமைய வேண்டும் என்பதை **"சிறுகதையின் கருப்பொருள் எதைச் சுற்றி செல்கிறதோ அதனைத் தொட்டுக் காட்டுவதாக அமையும் தொடக்கம் சிறப்புடையது"**[15] என்று சு.வேங்கடராமன் குறிப்பிட்டுள்ளார்.

கதைக்கும் அதன் தலைப்பிற்கும் நெருங்கிய தொடர்புண்டு. வாசகன் நூல்களைப் படிக்கத் தேர்ந்தெடுக்கும்போது, தலைப்புத்தான் முதலில் அவன் கண்ணில்படும். தலைப்பைக்

கொண்டே நூல் எத்தகைய தன்மையுடையது என்பதை நிர்ணயித்து விடுகிறான்.

தலைப்பைத் தேர்ந்தெடுக்கும்போது ஆசிரியர்கள் கதைகளில் அடங்கியுள்ள அனைத்துக் கருத்துக்களும் வெளிப்படும் வண்ணம் தலைப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும். நூல்களுக்குக் கொடுக்கப்படும் தலைப்பே ஆசிரியரின் திறமையை வெளிப்படுத்திச் சிறப்பைத் தேடித்தரும்.

சிறுகதைகளுக்குத் தலைப்பே முதல் பொருளாகும். எனவே, ஒரு நல்ல கதையின் தொடக்கம் படிப்பவரின் ஆர்வத்தினையும் ஆவலையும் தூண்டும் வகையில் அமைதல் வேண்டும். அப்போதுதான் அதைப் படிக்கும் வாசகனுக்குச் சலிப்பு ஏற்படாமல் இருக்கும். ஆர்வத்தைத் தூண்டி, மையக் கருத்தின் சிறப்பை வெளிப்படுத்தும்.

**"கு.பா.ராவின் சிறுகதை தொடக்கங்கள் என்ற கட்டுரையில் இரா.மோகன் அவர்கள் சிறந்த தொடக்கங்களை ஆறுவகைப்படுத்தி கூறுகிறார்."**[16] அவ்வாறு அமையும் சிறுகதைத் தொடக்கங்கள் சு.சமுத்திரம் அவர்களின் சிறுகதைகளில் வெளிப்பட்டிருக்கும் பாங்கினைக் காணலாம்.

1. பரபரப்பான சூழலைத் தோற்றுவித்துப் படிப்பவரின் ஆர்வத்தினைத் தூண்டும் வகையில் அமைதல்.
2. கதைமாந்தரை அறிமுகப்படுத்தித் துவங்குதல்.
3. இடம், காலம் ஆகிய சூழல், வருணனையோடு சில கதைகள் தொடங்குதல்.

4. கதைமாந்தர்களுக்கு இடையே நிகழும் உரையாடலுடன் சிறுகதைகள் தொடங்குதல்.

5. எடுத்த எடுப்பிலேயே நேரடியாக கதைக்குள் நுழைந்து விடுதல்.

6. தன்மை இடத்தில் கதையைத் தொடங்குதல்.

ஆகும்.

கதைத் தொடக்கத்தைப் பற்றி நான்சிஹேல் என்னும் அமெரிக்க நாவலாசிரியர் "**ஒரு நல்ல சிறுகதையின் தொடக்கம் வாசகரைப் படிக்கத் தூண்டும் கலைநயமும் கவர்ச்சியும் பெற்றிருத்தல் வேண்டும் என்றும் எல்லாவற்றையும் வெளிப்படையாக விரிவாகச் சொல்லாமல் வாசகர் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகளை மட்டும் குறிப்பாகச் சுருக்கமாகப் புலப்படுத்தினால் போதும்**"[17] என்று கூறுகின்றார்.

**1. பரபரப்பான சூழலை தோற்றுவித்துப் படிப்பவரின் ஆர்வத்தினைத் தூண்டும் வகையில் அமைதல்**

சிறுகதைகளைப் படிக்கத் தொடங்கும்போதே அடுத்து என்ன நடக்க போகுமோ என்ற எண்ணத்துடன் தொடக்கத்தை அமைத்துக் கதையை எழுதத் தொடங்கும் முறையாகும்.

"**திருமலையாச்சி துடித்துப் போனாள். அவள் மகன் ஆறுமுகத்தை நான்கைந்து பேராகத் தூக்கிக் கொண்டு வந்தார்கள்**"[18]

"**சுடலை மாடசாமி கோவிலில் ஊரே திரண்டிருந்தது**"[19]

"**மரணத்தின் விளிம்புபோல் இருந்த அந்த வார்டின் வெளித் தாழ்வாரத்தில்**"[20]

“கடைசியாக அவள் எழுதியிருந்த வரிகள், அவன் மனதில் முதலாவதாக வந்து நின்று, மூச்சைக்கூட சற்று நிறுத்தி, முரண்டு செய்து விட்டது”[21]

“கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்த அந்த நிகழ்ச்சிக்காக, ஒரு வார காலம் கண் விழிக்காமல், கண்ட கண்ட இடமெல்லாம் கண் மண் தெரியாமல் சுற்றிவிட்டு, பையிலிருந்த பணம் தீர்ந்து போனதால், கூட்டுக்குத் திரும்பும் பறவை போல், குப்புசாமி தெரு வழியாக நடந்து கொண்டு இருந்தான்”[22]

சிறுகதையைத் தொடங்கும்போதே பரபரப்பாகத் தொடங்குவதால் படிப்பவரின் மனத்தில் கதையை முழுமையாகப் படித்து முடித்து விட்டுத்தான் செல்ல வேண்டும் என்ற எண்ணம் தோன்றும்.

**2. கதைமாந்தரை அறிமுகப்படுத்தித் துவங்குதல்**

கதைமாந்தரை அறிமுகப்படுத்தித் துவங்குதல் வாசகரைக் கவரும் ஒரு வழியாகும். அப்படித் துவங்கக்கூடிய கதைகள்.

“பாங்க் மானேஜர் நீட்டிய கவரை, பெருமாள்சாமி ஆவலோடு பிரித்தார்”[23]

“பண்டாரம் மட்டும் அரசியலில் இருந்திருப்பானே யானால் மிகச் சிறந்த தலைவராகக் கருதப்பட்டிருப்பான்”[24]

“இருசப்பனுக்கு எதிரான கிரிமினல் வழக்கைவிட அது சம்மந்தப்பட்ட பேச்சு வழக்கம்தான்”[25]

“பண்ணையார் வீட்டுக்கு ஒதுக்குப்புறமாக இருந்த தொழுவத்தில் நாலு பெட்டி எருமைச்சாணிகளை எருக்குழியில்

போட்டு விட்டு, துடைப்பத்தை வைத்துப் பெருக்கிக் கொண்டிருந்த ஜக்கம்மா, முதலில் எருமை மாடு கனைக்கிறது என்று தான் சும்மா இருந்தாள்”[26]

### 3. இடம், காலம் ஆகிய சூழல் வருணனையோடு சில கதைகள் தொடங்குதல்

இடம், காலம், வருணனையோடு கதைகள் தொடங்குவதில் ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் மிகவும் சிறப்பாகத் தனது கதைகளை அமைத்துள்ளார்.

**இடம்**

“இந்துமகா சமுத்திரத்தை நெருப்பு மூட்டிச்சுட வைத்தாலும் வைத்து விடலாம். ஆனால் கிட்டாம்பட்டியில் உள்ள காத்தமுத்து கொடுக்கும் டீயை மட்டும் சுட வைக்கவும் முடியாது.”[27]

“சென்னைக் கடற்கரையின் மெரினா பகுதி”[28]

“குட்டாம்பட்டியில் வடக்குத்தெருவும், தெற்குத் தெருவும் அல்லோலகல்லோலப்பட்டன. மற்றத் தெருக்கள் அல்லோல கல்லோலப்படவில்லை.”[29]

**காலம்**

“அன்று வெள்ளிக்கிழமை, சனிக்கிழமையல்ல”[30]

“இரவு மணி பன்னிரண்டு இருக்கும்”[31]

“இரவா பகலா என்று இனங்காண முடியாத அந்த அத்திக் காட்டிற்குள் என்னை ஒரு யோகி மாதிரி நினைத்துக் கொண்டு, நடந்தேன்”[32]

“போனமாசம் இரண்டாம் தேதி”[33]

“இரவு மணி ஏழு இருக்கும்”[34]

**வருணனை**

“ஊருக்குச் சற்று தொலைவில், ஹிப்பி மாதிரி ஒதுங்கிய இடம். சுற்றிலும் கருவேல மரங்கள் இரும்புக் கம்பிகள் மாதிரியும் அவற்றிற்கு இடையே இருந்த வேலிக்காத்தான் செடிகள், முட்கம்பி வலைகள் மாதிரியும் இருந்த இடம்.”[35]

“பார்ப்பவர்களைப் பார்க்காமலும், நடப்பவர்களுக்கு வழி விடாமலும், அந்த நாய் ஜோடி, சாலையோர பிளாட்பாரதிதல் ஜல்சா செய்யப் போயின. பெண் நாய், வெள்ளை வெளேரென்று இருந்தாலும், அது தெரு நாய் தான் என்பதை அதன் உடம்பு முழுவதும் பருத்தி கொட்டைகள் மாதிரி வியாபித்திருந்த பாலுண்ணிகளும், காது மடிப்புகளுக்குள் மறைந்திருந்த சதை வெடிபபுகளும் எடுத்துக் காட்டின”[36]

“அந்த வீட்டின் வெளிப்பந்தலும் புறத்தில் பெரிய பந்தலும், மாவிலைத் தோரணமும், மேளதாளமுமாக அமர்க்களப்பட்டது. குலைதள்ளிய வாழைகள், தாய்மையின் மோனத்தை, தாளலயத்தோடு காட்டிக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது.”[37]

“சூரியன் செத்துப் பிழைத்து மறுபிறவி எடுத்த நேரம்”[38]

**4. கதைமாந்தர்களுக்கிடையே நிகழும் உரையாடலுடன் சிறுகதைகள் தொடங்குதல்**

"என்ன பொண்ணுடி நீ! இதுக்குள்ளே 'பிராக்கை'ச் சுவர்ல தேய்த்து நாசம் பண்ணிட்டியா?' என்று சொல்லிக் கொண்டே விமலா, தன் மகள் நளினாவின் கன்னத்திலும் முதுகிலும் பளார் பளாரென்று 'மத்தளம்' கொட்டினாள்."[39]

"வணக்கம் அண்ணே. வணக்கம் அக்கா"[40]

**5. எடுத்த எடுப்பிலேயே நேரடியாகக் கதைக்குள் நுழைந்து விடுதல்**

"இலக்கிய கூட்டம் உட்பட எந்தவிதமான 'அது இதுகலுக்கும்' போகாமல் தானுண்டு, தன் குடும்பம் உண்டு என்று நினைத்தும், அந்த நினைப்பிலேயே பெருமிதப்பட்டும் வாழ்க்கை நடத்தும் சங்கரன், நிஜமாகவே மழைக்காகத் தான் அந்தக் கட்டடத்திற்குள் நுழைந்தான் என்றாலும், அங்கே நடந்த இலக்கியக் கூட்டத்தில் பேசிய பேச்சாளரின் பேச்சைக் கேட்கக் கேட்க, அவனால் மழை விட்ட பிறகும் அகல முடியவில்லை."[41]

"அலுவலகத்தின் சிம்மாசனம்போல் இருந்த தனியறையில், ஒரு முக்கியமான ஃபைலைப் பார்த்துக் கொண்டிருந்தேன்."[42]

**6. தன்மை இடத்தில் கதையைத் தொடங்குதல்**

"அந்த காரில், பெருமாள்சாமி ஏறுவதற்குத் தயங்கிக் கொண்டிருந்தபோது"[43]

"அந்த சிற்றூர் இருப்பதை, இரு கல் தொலைவிலேயே எடுத்துக் காட்டும்படி, விளங்கிய 'இருநிலை' மாடங்களைக் கொண்ட வீடுகளில் மிகப் பெரியதோர் வீடு அது."[44]

"அவனைப் பார்த்தால் 'ஹிப்பி' என்று தள்ளவோ அல்லது 'அஹிப்பி' என்று கொள்ளவோ முடியாது."[45]

"இது தியாகராஜன் மறைந்த மூன்றாவது ஆண்டு நினைவு நாள்"[46]

"அவன் உடம்பு வியர்த்துக் கொண்டிருந்ததற்கு வெயிலா காரணம்? இல்லை"[47]

"அந்த கலையரங்கம், மாலை ஐந்தரை மணியளவிலேயே பொங்கி வழிந்தது."[48]

## நோக்குநிலை உத்தி

கதைக் கூறுகள் அனைத்திலும் முதன்மையானது கதை கூறுவோர் எந்த கோணத்தில் நின்று கதையைக் கூறுகிறார் என்று காட்டும் நிலையையே நோக்குநிலை என்கின்றோம். படைப்பாளன தான் கூறவந்த அல்லது தான் கூறவிரும்பும் ஒன்றினை விளக்குவதற்கும் தெளிவுபடுத்துவதற்கும் அதற்கு மேலாக அதை நம்பத் தகுந்த முறையில் விளக்கிக் காட்டுவதற்கும் தக்கதொரு நோக்கு நிலை காணப்படுகிறது. யாருடைய வழி வாயிலாக படிப்போர் கதைப்பின்னல், பாத்திரம் இவற்றின் வளர்ச்சி இயக்கம் ஆகியவற்றைக் காண்கிறார்கள் என்னும் வினாக்களுக்கு விடையாக அமைவது நோக்குநிலையாகும். இவற்றை,

1. தன்மை நோக்குநிலை

2. படர்க்கை நோக்குநிலை

என இரண்டு வகைகளாகப் பிரித்துக் கொள்ளலாம்.

**தன்மை கூற்று நோக்குநிலை**

கதையைக் கூறுபவர்கள் 'நான்' என்னும் சொல்லை அதிகம் பயன்படுத்தி விளக்கிச் சொல்வார்கள். இம்முறையில் கதைமாந்தர்கள் கதையைக் கூறலாம். துணை மாந்தர்கள் ஒரு பார்வையாளராக இருந்து கதையைக் கூறலாம் அல்லது படைப்பாளரும் (ஆசிரியர்) எல்லாமறிந்த பார்வையாளர் நிலையிலிருந்து கதையைக் கூறலாம். தன்மை நோக்கு நிலையில் நிறையும் உண்டு சில குறைகளும் உண்டு.

"நான் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். நான் சொன்னதை நம்பாதவள் போல் சிறிது நேரம் நின்ற என் மனைவி, வாத்தியார், நோஞ்சானான மாணவனைப் பார்ப்பதுபோல், என்னையே உற்றுப் பார்த்துவிட்டு, தலையில் கைவைத்தபடி, அடுப்பறைக்குப் போய் விட்டாள். அவள் போன திசையைப் பார்த்துக் கொண்டே, நான் எனக்குள்ளே புலம்பினேன்.

நான் வெறும் அப்பா இல்லடி ... அர்த்தநாரீஸ்வரன் ... பாமாவுக்கு அப்பன் ... அதே சமயம் ராமனுக்கு அம்மா ..."[49]

"நான் ஊர்ல உலகத்துலே செய்யாதயைா செய்துட்டேன்? அப்பனுக்கு தெரிஞ்சால் ... தெரிஞ்சா .. இந்த ராமசாமி செட்டியாரால வந்த வினை ... சும்மா இருந்த என்னை எப்படி மயக்கினான்? ஒருவங்கிட்டேயும் தோற்காத நான் ... அவன் கிட்ட எப்படி தோற்றேன்? .... படுபாவிப் பயல் ... மருந்தை போட்டு மயக்கி இருப்பானோ ... அவனைச் சொல்லி என்ன ... என்னைய? என் மூளைய ... செருப்பால அடிக்கணும் ...

புருஷங்கிட்ட எதுக்காக கோவிச்சேனோ ... அதுக்காக இரையாயிட்டேனே ... அடியே ஜக்கம்மா ... உன் பேரு கொண்டவள் இப்படி பரிதவிக்க விடலாமாடி ... பாவி கெடுத்தாயே."[50]

"எனக்கு ஒரு வேலை கொடுக்க, அப்பவே அரசாங்கம் முன்வந்தது. நான்தான் உங்களைப் பார்க்காமல் இருக்க முடியாது என்பதற்காக, இங்கே குடும்பத்தைக் கூட்டி வந்தேன். இப்போ ... உங்களைப் பார்க்கக்கூடாது என்கிறதுக்காகவே பழையபடியும் டில்லிக்குப் போகப் போறோம். அங்கே வேலையில் சேரப் போறேன். தாங்க் யூ மிஸ்டர் ... ரவி வரட்டுமா ...?"[51]

"ஒங்க கல்யாணத்த நிறுத்தறதுக்காக, வர்ல மாப்பிள்ள. நான் கோர்ட்டுக்குக் கூடப் போயி, உங்கள ஜெயிலுள போட முடியும். ஆனால், நான் செய்யப் போறதில்ல. ஏன்னா, உங்க நிலைமை எனக்குப் புரியுது. பேச்சைக் கேட்டு ரெண்டாவது கல்யாணம் பண்ணுனேன். அந்தப் பாவி, பிள்ளையை அதட்டி அதட்டியே உருப்படாமப் பண்ணிட்டா. எட்டு வயசு வரைக்கும், ஓடுற பாம்பைப் பிடிக்கிற மாதிரித்தான், இந்தப் பய மவள் இருந்தாள். இவள் தலையெழுத்து, நான் ரெண்டாவது பண்ணிகிட்டேன்."[52]

படர்க்கைக் கூற்று நோக்குநிலை

இது படர்க்கை நடையையுடையது. இம்முறையில் படைப்பினுள்ளே வெளிப்படத் தோன்றாமல் மறைந்திருக்கும். ஆசிரியர் வாயிலாகக் கதைக் கூறப்படும். அவர் தமது

பாத்திரங்களை ‘அவன்’, அவள்’ எனப் படர்க்கை நிலையில் சுட்டிக் கதையை விளக்கிச் சொல்வார். ஆசிரியரே கதையைக் கூறுவதால் அவர் விரும்பும் பண்புகளை எல்லாம் நன்கு விளக்க முடியும். அவர்களின் உணர்ச்சிகளையும் நோக்கங்களையும் பழைய அனுபவங்களையும் எடுத்துரைக்க முடியும்.

ஒவ்வொரு செயலுக்கும் நிகழ்ச்சிக்கும் அடிப்படையானக் காரணங்களை அவ்வப்போது விளக்க முடியும். கதையின் ஒரு பகுதியை, ஓரிடத்து நிகழ்ச்சிகளை எடுத்துரைத்து நிறுத்திவிட்டு, அடுத்தாற்போல் மற்றொரு பகுதியை - வேறோர் இடத்து நிகழ்ச்சிகளை எடுத்துரைக்க முடியும். இந்நிலையை எல்லாமறிந்த நோக்குநிலை என்றும் கூறலாம். இந்நிலையில் அமையும் சிறுகதைகள் ஆசிரியர் கூற்றுகளாகவே காணப்படுகின்றன.

**“இப்போது அவன் வேகமாக நடந்தான் சாலை முடியும் பகுதியில் உள்ள திண்டில், ஒலிபெருக்கி வைத்திருக்கும் கம்பத்திற்கருகே சென்று கொண்டிருந்த அவளை, நெருங்கி விட்டான். சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, அவளுக்கு இணைந்தாற் போல் நடந்தான்.**

**அவள், அவனை நேராகவே பார்த்தாள். பார்த்தது மட்டுமில்லாமல் பேசவும் செய்தான்.”[53]**

**“அவன் கல்லுப் பிள்ளையாரானான். தனக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லாததுபோல் எங்கேயோ பார்த்தபடி நின்றான். ஆனால் அந்த வாட்ச்மேன் கிழவனோ அவரைப் பார்த்துக் கெஞ்சப் பானான். வந்த மனிதர், அவன் கெஞ்சக் கெஞ்ச, உண்மையாகவே, அவன் கண்களில் விரலைவிட்டு ஆட்டப்**

**போனார். அவன்தான் அவர் விரல்கள் தன் கண்ணில் படாதபடி முகத்தை விலக்கிக் கொண்டான். அப்படியும் அவர் அவனைப் பிடரியில் ஒரு போடு போட்டார். வைது தீர்த்தார். 'ராஸ்கோல் ... லஞ்சா கொடுக்கா."[54]**

**2. பின்னோக்கு உத்தி (திருப்புக்காட்சி உத்தி)**

கதையைக் கூறிச் செல்லும்போது கடந்தகால நிகழ்ச்சிகளைக் கதைமாந்தரின் நினைவுகளாக எடுத்துக் காட்டும் முறையைப் பின்னோக்கு உத்தி எனலாம். இந்த உத்தி அளவறிந்தும் அழகறிந்தும் பயன்படுத்தப்பட வேண்டும். அடிக்கடியும், தேவையில்லாத நிலையிலும் இத்தகைய காட்சிகள் இடம்பெற்றால் வாசகரின் கவனத்தை அது சிதைத்து விடும்.

**"பின்னோக்கு உத்தி எனப் பெறும் இவ்வுத்தியினைச் சோதனை முயல்வாக - அதுவும் சிறிய கதையில் செய்து பார்த்த முதலாமவர் பாரதி ஆவார்"[55]** என்று அ.அறிவுநம்பி கூறுகிறார்.

நடப்பியல் நிகழ்ச்சி, பழைய நிகழ்ச்சி, இரண்டையும் காட்டுகின்ற உத்தியினால் கதை வாசிப்போருக்கு ஆர்வத்தை ஏற்படுத்தும்.

**"ஒரு கதையைச் சொல்லிக் கொண்டே போகிறபோது கடந்தகால நிகழ்ச்சிகளை ஒரு பாத்திரத்தின் நினைவோட்டமாக எழுத்தாளர்கள் எடுத்துக்காட்டுவர். இதனையே பின்னோக்கு உத்தி என்கிறோம்"[56]** என்கிறார் மா.இராமலிங்கம்.

ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் தன் கதைகளில் பின்னோக்கு உத்திகளைப் பயன்படுத்தியுள்ளார்.

"வாசலில் இருந்து திரும்பி வந்த விமலா, கதவைத் தாளிட்டு வீட்டு ஹாலில் மாட்டியிருந்த கணவனின் போட்டோவிற்கு எதிரே வந்து நின்றாள். கண்ணீரை அவளால் கட்டுப்படுத்த முடியவில்லை. விம்மி விம்மி அழுதாள். 1965ஆம ஆண்டில் நடைபெற்ற பாரத பாகிஸ்தான் போரில் அவள் கணவன் வீரமரணம் எய்திய பிறகு, அந்தப் போட்டோவைப் பார்த்துப் பார்த்தே, அவள் கண்ணீரால் கன்னத்தைச் சுத்தி செய்வது வழக்கம். எமர்ஜென்ஸி கமிஷன் ஆபீசராக ராணுவத்தில் சேர்ந்த தன் கணவன் 'யூனிஃபாரத்தோடு' 'லெப்ட் ரைட்' போட்டுக் கொண்டே வீட்டுக்கு வருவான் என்று கற்பனையில் திளைத்துக் கொண்டிருந்த அவளுக்கு, வெறும் சீருடைகளே பார்சலில் வந்தன."[57]

"நடந்ததச் சொல்றேன். நீ யாருகிட்டேயும் சொல்ல மாட்டேங்ற நம்பிக்கையில சொல்றேன். கட்டுமர மீனவர்கள் ஒண்ணாச் சேர்ந்து போலீஸ் ரிப்போர்ட் கொடுத்து ஜனங்கள, ஒண்ணு திரட்டுன என்மேல் ஒப்பனுக்குத தீராத கோபம். நானும் ஒன்னை எப்படியாவது கூட்டிக்கிட்டு வாரத்துக்காக ஒரு திட்டம் போட்டிருந்தேன். என்னோட ஆள் ஒருவனை ஒன் நயினா லாஞ்சுக்கு அனுப்புனேன். இதைத் தெரிஞ்சுக்கிட்ட ஒன் நயினா நான் கடலுள கட்டு மரத்துல இருந்து வலைய விட்டுக்கிட்டு இருந்தப்போ, 'லாஞ்சு' கொண்டு வந்து மோதுனாரு. ஆஸ்பத்திரிலதான் கண்விழிச்சேன் ... ஒரு காலைக் காணல ..."[58]

"நிகழ்காலத்தை எட்டாண்டுகளுக்குப் பின்னோக்கி இழுக்கிறது. அவனை, இருபது வயது வாலிபனாக, ஊரில்

பனை ஓலை வீட்டிற்குள், இழுத்துப் போடுகிறது. ஆயாசமாகப் படுத்துக் கிடக்கிறான். அம்மா, தலையிலுள்ள புல்லுக்கட்டை, ஒரு கையால் பிடித்து, மறு கையின் கக்கத்திற்குள், ஒரு கட்டு அகத்திக் கீரையை, இடிக்கியபடியே உள்ளே வருகிறாள். ஒரு கை பிடித்த அரிவாளை, இவன் கிடக்கும் திண்ணையில், சுவர் ஓரமாய் படுக்க வைக்கிறாள். தோளைக் கவ்விய களை வெட்டியை, எடுத்து ஒரு ஓரமாக வைக்கிறாள். புல்லுக்கட்டை, 'எப்பாடா ...' என்று முற்றத்தில் போட்டுவிட்டு, மகனைப் பார்த்து, 'கஞ்சி குடிச்சியாடா? எத்தனை நாளைக்குத் தான், அய்யாவையே நினைச்சுக்கிட்டு இருக்கப்போறே ...? எனக்கு மட்டும் கவலை இல்லையா ...? எப்பாடி ... குறுக்கு என்னமா வலிக்குது ..."[59] என்கிறாள்.

### கதை முடிப்பு உத்தி

கதையை முடிக்கும்போது சில உத்திகளை ஆசிரியர் கையாள்கின்றனர். அதன்வழியே வாசகர்களை உணர்ந்துகொள்ளும் வண்ணம் சில செய்திகளைத் தருகின்றனர். இது கதைமாந்தரின் பண்பை விளக்குவதாகவோ, கதையின் முடிவை முழுமை நோக்கில் கூறுவதாகவோ அமையும் எனலாம். கதை முடிப்பு உத்தியை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று இன்பியல். மற்றொன்று துன்பியல் ஆகும்.

"வேளாண்மைக் கட்சித் தலைவர் வெண்தாமரை மகனுக்கும், நல்லார் கட்சித் தலைவர் நாராயணன் மகளுக்கும் சென்னையில் திருமணம்; தலைவர்கள் வாழ்த்து."[60]

" 'உங்களுக்கு நோபல் பரிசு கிடைக்கலேன்னா, என் பேரை மாத்திக்கிடறேன்' என்று முன்பு அவனிடம் உறுதி

கூறிய ஆனந்தசாமி, சொன்ன சொல் தவறாதவன். சிறந்த வில்லனாகவும், டைரக்டராகவும் மாறிவிட்ட அவன் இப்போது தன் பெயரை 'மகிழ்நாதன்' என்று மாற்றிக் கொண்டான்"[61]

"எல்லோரும் வாயடைத்து நின்றபோது, இசக்கி வழிநடத்த எல்லாப் பையன்களும் வெளியே வந்து கம்மாக்கரைமேல் நடந்தார்கள். குளத்தடிப் பக்கம், புதிய ரக நெல் விதைகளால், நாற்றங்காலான நெற் பயிர்கள் ஆடிக் காற்றுக்கும் ஈடு கொடுத்துக் கம்பீரமாகத் தலையாட்டின."[62]

"தேசிங்கு கயிற்றைப் பிடித்தான். வடும்பா, பல கையைப் பிடித்தாள். இருவரையும், அந்த நரம்புக் கயிறு இணைத்தது."[63]

"எரிந்து கொண்டிருந்த ஊதுபத்தி, வாழ்க்கையில் எரிந்து எரிந்து, இப்போது நெருப்பில் இறுதியாக எரியப்போகும் எண்பது வயதுக் கிழவியும், அரைமணி நேரப் பிணமுமான அந்த உருவத்திற்கு மேலே, வட்ட வடிவமாக வடிவெடுத்து, பிறகு வட்டங் கலைத்து, நீர்க்கோடுகள் போல, ஒன்று பலவாக, பல ஒன்றாக எல்லாம் அடங்கிய தாவர சங்கமத்தின் ஏதோ ஒரு மூலையில் உள்ள அணுவிற்கு ஒரு அங்கமாக, மேலே மேலே போய்க் கொண்டிருந்தது."[64]

"பால் கொடுத்த தாய்க்குப் பால் வார்த்த பிள்ளை 'பெழச்சுக்குவேம்மா ... பெழச்சுக்குவேம்மா' என்ற இரட்டை வார்த்தைகளை விடாப்பிடியாய்ச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ... பகவதி செல்லமுடியாத இடத்திற்குப் போய் விட்டாள்"[65]

**“வயிற்றில் கருவுடனும், உடம்பில் நோயுடனும், உள்ளத்தில் அந்தச் சிட்டுக் குருவியின் நினைவுடனும், எங்கே போகிறோம் என்று தெரியாமல், அதே நேரத்தில் எங்கேயாவது போயாக வேண்டும் என்று தெரிந்தவளாய், மானத்திற்கு மானத்தையே விலையாகக் கொடுத்த ஜக்கம்மா, பிறந்த பூமியைத் திரும்பிப் பார்க்காமலும், திரும்பக்கூடாது என்ற லட்சியத்துடனும் அந்த இரவில் ஓட்டமும் நடையுமாகப் போய்க் கொண்டிருக்கிறாள்.”[66]**

போன்றவற்றைச் சான்றுகளாகக் கூறலாம்.

இன்பியலாக இருந்தாலும் சரி, துன்பியலாக இருந்தாலும் சரி ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் இயல்பாகவும், உண்மைச் சம்பவம் கண்ணெதிரே தோன்றும்படியும் கதைகளை முடித்துள்ளார்.

**கதைத் தலைப்பு உத்தி**

வாசகர்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் தலைப்பு அமைய வேண்டும். அது கதையின் கருவை உணர்த்துவதாகவும் அமைதல் நலம். **“எதைச் சுற்றிக் கதை சொல்ல இருக்கிறது என்பதைத் தூண்டுவதாகக் கதைத் தலைப்பு விளங்க வேண்டும். கதையின் தலைப்பு என்பது பெரும்பாலும் எவ்வாறு அமைகின்றது என்பதற்கேற்ப கதையின் வெற்றி அமைகிறது”[67]** என சு.வேங்கட்ராமன் கூறுகிறார்.

படிப்பவரின் ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும் உயிர்ப்புத் தன்மையுடையதாகவும் கதையின் தலைப்பு அமைய வேண்டும். வாசகர்கள் கதையைப் படித்தவுடன் இக்கதைக்கு

இதுதான் தலைப்பாக அமைய வேண்டும் என்று ஊகிக்க வேண்டும். அந்த வகையில்தான் ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் கதைத் தலைப்பு உத்தி முறைகளையும் தன் சிறுகதைகளில் இயல்பாகவே கையாண்டுள்ளார். இதற்குக் கீழ்க்கண்டவை சான்றுகளாகும்.

"மானுடத்தின் 'நாணயங்கள்' குழந்தை கிடந்த துணியில் கீழே விழுந்து கொண்டிருந்தன"[68]

"என் ராசா ... நம்பள மாதிரி ஏழைங்க ... பொறந்த நாளுக்காவ சந்தோசப்படக்கூடாது. அழணும்டா ... நமக்கு பொறந்த நாள விட ... பிறக்காத நாளுதாண்டா முக்கியம் ... பொறக்கத்தான் போவுது. அது பிறந்தாதான் நாம பிறந்ததுல அர்த்தம் கீதுடா ... அதுவரைக்கும் நீ பொறக்கலன்னு நெஞ்சி ... பொறுத்துக் கோடா ... என் மவராசா"[69]

"நான் வெறும் அப்பா இல்லடி ... அர்த்தநாரீஸ்வரன் ... பாமாவுக்கு அப்பன் ... அதே சமயம் ராமனுக்கு அம்மா."[70]

"எட்டாவது வகுப்பிற்கு வெளியே இருந்த ரோஜாச் செடியில், பூத்துக் குலுங்கிய அந்த ஒரே ஒரு ரோஜாப் பூவை, ஒரு கழுதை தின்று கொண்டிருந்தது."[71]

"நீங்க எங்களத் தள்ளி வச்சா நாங்க ஒங்களத் தள்ளி வைக்கதுல தப்பில்ல ... டீக்கடையில கீழ உட்காருற விவகாரமும், தனியா வட்டக்கப்புல டீ குடிக்கிற விவகாரமும் தீருறது வரைக்கும் இந்த வழி அடத்தே கிடக்கும். சரி ... போயிட்டு வாரியள ... இது பொது வழி ... அல்ல."[72]

**உரையாடல் உத்தி**

இருவர் பேசிக்கொள்ளும்படி நடையை அமைப்பது உரையாடல் உத்தியாகும்.

**"நாவல், சிறுகதைகளில் வரும் வெற்றிகரமான நல்ல உரையாடல் கருவின் வளர்ச்சி, கதை மாந்தரின் பண்பு, விளக்கம், சிறுகதையின் தொனி, கதையின் இயக்கம் முதலியன வெற்றிக்குக் காரணமாகிறது எனலாம்"**[73] என்கிறார் மா.இராமலிங்கம்.

ஆசிரியர் உரையாடலை அமைக்கும்போது, **"இது கதைப்பின்னலை மேலும் வளர்த்து செல்லுமோ? கதைமாந்தரின் பண்புகளை இப்பேச்சு வெளிப்படுத்திக் காட்டுமோ? இது எந்த வகையில் மூலக் கதையைச் சொல்லப் பயன்படும் என்பன போன்ற வினாக்களைத் தனக்குள்ளாகவே கேட்டுக் கொள்வது நல்லது"**[74] என்பார் மு.இராமலிங்கம்.

ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் இதுபோன்று உரையாடல்களைத் தனது கதைகளில் புகுத்தியுள்ளார். இது படிப்பவரின் ஆர்வத்தைத் தூண்டக்கூடிய வகையிலும் கதையின் வளர்ச்சிக்கு முக்கியமாகவும் அமைந்துள்ளது.

**"பெரியவன் எப்படியப்பா இருக்கான்?**

**அவருக்கென்ன, நல்லாத்தான் இருக்காரு ...**

**என்னப்பத்தி எதுவும் கேட்டானா?**

**கேட்டாரு ...**

**இங்க வரணுமுன்னு சொன்னானா?**

அவரு சம்சாரத்துக்கு வயித்த வலியாம். சீரியஸா போனால் இங்கு வருவாரு

நடுலவனும், இளையவனும் எப்படி இருகத்காங்க? அவங்களாவது என்னபப்பத்தி கேட்டாங்களா? தங்கமணி எப்படி இருக்கான்?"[75]

"எங்க சுப்பு பெரியய்யாதான் மூத்தவரு!

இல்ல ... எங்க பெருமாள் அண்ணன்தான்

தேவ ... நீங்க இப்படி பேசுறது நியாயமில்ல

வாயை மூடும், நாடாரே! எங்க சுப்பு பெரியய்யாவுக்குப் பங்கு கொடுக்காட்டா நானே எடுக்கப் போறேன்.

எடுக்கிற கையை வெட்ட எவ்வளவு நேரமாகும்?

வெட்டிப் பாருடா ...!

கிட்ட வாடா ..!"[76]

"இப்போ அவங்கெல்லாம், எப்படி இருக்காங்க ...

கிழவி, லேசா சிரிக்கிறாள். நொண்டிக் கிழவன், என் கையைப் பிடிச்சி அழுவுகிறான் ... கர்ப்பிணி பொண்ணு கையெடுத்து கும்பிடுகிறாள்.

இப்ப சொல்லு ... இப்படி நீ, அவங்களுக்கு உதவும்போது, நாய், வருது ... கடிக்குதா?

இல்லை

நொண்டிக் கிழவனைக் கூட்டிக்கிட்டு, டீ ... வாங்கப் போற, பாய்லர் அடுப்புக்குள்ள ... யாரும் தலையைத் திணிக்கிறார்களா?

இல்லை.

கல்யாணி எப்படி இருக்காள்?

அவள் கிடக்கிறாள், திருட்டுத் தேவடியாள். விட்டுத் தள்ளுங்க ...

பழையபடி கடற்கரைக்குப் போவோமா? உன் இஷ்டம்

வேண்டாம்"[77]

"பாத்தி போட்டுக்கிட்டு

சரி ... பாத்தி போட்டுட்டு என்ன தின்னான்?

எதையோ தின்னாரு ... பச்சை நிறத்துல ... உருண்டை உருண்டாயா ...

நீ என்ன பண்ணுன?

எனக்கு ஒண்ணு தாங்கன்னேன்

தந்தானா ...?

இல்ல. உன் வேலய பாருன்னு கத்துனாரு ...

அவன் தின்னது தங்கரளிக் கொட்டையா? இல்ல ... வேறு எதுவுமா?

நான் சரியாப் பாக்கல"[78]

"கவலைப்படாதேப்பா

நிஜமாவா

நிஜமாவே!

நான் எப்பம்மா பிறந்தேன்?

மாசி மாதம் மூணாந்தேதி

மாசின்னா இங்கிலீஸுக்கு என்ன மாதம்மா?

ஏண்டா இல்லாத பொல்லாததைக் கேக்குற ...

அடுத்த புதன்ல உன்னோட பிறந்த நாளு

கேக் வெட்டணும்மா

வெட்டலாம்

புதுச் சொக்கா

கண்டிப்பா

ஏமாத்த மாட்டியே

சும்மா வாடா"[79]

என்பன இதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

**கடித உத்தி**

சிறுகதைகளில் வரும் பாத்திரங்களின் மூலம் நேரடியாக கூறமுடியாத செய்திகளை, கடித முறையில் எழுதி ஆசிரியர் தன் கருத்துக்களை வெளிப்படுத்தலாம். இந்த முறையைக் காதலர்கள் பயன்படுத்துவார்கள். நேரில் கூற முடியாத புகழ்ச்சிகளையும், பிறரைக் குறைக் கூறும் சமயத்திலும் இந்த கடித உத்தி முறை பயன்படுத்தப்படுகிறது. இந்த முறையையும் ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் பயன்படுத்தியுள்ளார். உணர்ச்சி என்பதைப் பாத்திரங்களின் பேச்சுக்கள் மூலம் மட்டும்தான் காட்ட வேண்டும் என்பதில்லை. மாறாக இது போன்ற உத்திகளிலும் காட்டலாம்.

அன்பில்லாத அண்ணனுக்கு என்று எழுத தொடங்கியவள் தான் கூறவந்த செய்திகளை மூன்று பக்கம் எழுதியுள்ளாள்.

"எப்படியோ, நீ கல்யாணத்துக்கு வந்தால், தாரை வார்த்துக் கொடுக்க வேறு ஆள்பார்க்க வேண்டிய அவசியம் இருக்காது. பணம் இல்லையென்றாலும், எப்படியாவது வருவதற்கு டிக்கெட் வாங்கிவிடு. போகும்போது அவர் டிக்கெட் வாங்கிக் கொடுப்பார்.

அன்புள்ள ஒன்றுவிட்ட தங்கை,

தமயந்தி

கடிதத்தைப் பாதி படிக்கும்போதே பல்லைக் கடித்த மாடசாமி, முழுவதும் படித்ததும் அதிர்ந்து போனான். தமயந்தி மீது கோபம் வந்தது"[80]

கடைசியாக அவள் எழுதிய வரிகள் அவன் மனதில் முதலாவதாக வந்து நின்று மூச்சைக்கூட சற்று நிறுத்தி நிறுத்தி முரண்டு செய்து விட்டது.

"இருக்கும்போது பார்க்க வரமுடியாவிட்டாலும் நான் இறக்குறத பார்க்கவாவது வருவிகளா."[81]

என்பனவற்றுள் இதைக் காணலாம்.

**அஃறிணைப் பொருள்கள் கூறும் உத்தி**

இவ்வகை உத்தியை முதன்முதலில் படைத்துக் காட்டிய பெருமை வ.வே.சு.ஐயரே ஆவார். அவர் எழுதிய 'குளத்தங்கரை அரசமரம்' என்ற சிறுகதையில் ஒரு அரசமரம் பேசுவது போன்ற உத்தியைப் பயன்படுத்தியுள்ளார்.

அஃறிணைப் பெயர்களை வைத்துக் கதை எழுதுவதற்குத் தனித் திறமை வேண்டும். அந்த முறையில் ஆசிரியர் சு.சமுத்திரம்

அவர்கள் சிறுகதைகளில் தன் உணர்ச்சிப் பெருக்கை அஃறிணைப் பொருள்களின் காதல், போரட்டத்தையும் அதன் அயராத உழைப்புகளையும் வெளிப்படுத்தியுள்ளார். சாதாரணமாக மனிதர்களை மாந்தர்களாகப் படைத்துத் தனது கருத்துக்களைக் கூறலாம். ஆனால் அஃறிணைப் பொருள்களைப் படைத்து அதன் மன உணர்வுகளை வெளிப்படுத்துவது சற்றுக் கடினம்.

'யானைப் பூச்சிகள்' என்ற கதையில் தேனீக்களின் உழைப்பினை வெளிப்படுத்தியுள்ளார். இதனை

**"இந்தப் பூவுலகில் பிறப்பெடுத்த ஒன்பது இலட்சம் பூச்சியினங்களில் இருபதாயிரம், நம்மினமான ஈ இனங்கள், இவற்றிலும் நனி சிறந்த இனம் நான்கு வகை தேனீ இனங்கள், அபீஸ் டொர்ஸாடா, அபீஸ் பினேரியோ, அபீஸ் இன்டிகா, அபீஸ் மெல்லி பெக்ரோ என்ற நான்கு தேனீக்குலங்களில் முதன்மையான குலம், நான் முதலில் சொன்ன நம் குலம். கல்தோன்றி, மண் தோன்றா காலத்தே முன்தோன்றி மூத்த குலம். நம்மையெல்லாம் ஆளாக்கிய தேனீகுலத் திலகமான ..."[82]**

நாய்களின் காதலை இந்த கதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**"இதைப் பார்த்தது அந்த ஜோடியில் ஆண்நாய் கொஞ்சுவதை நிறுத்தி விட்டுப் பின்வாங்கியது. சிறிது தூரத்தின் நின்றபடி, அதை அச்சத்தோடும், தன் காதலியை அவசர அவசரமாகவும் பார்த்தது. ஆனால் அந்தப் பெண் நாயோ, புதிய நாயைப் பார்த்து வாலாட்டியது. பிறகு தனது வாலை, பின்னங் கால்களுக்குள் விட்டது. அதாவது 'ஒனக்கு**

நான் அடிமை. நீ வீராதிவீரன்தான்’ என்ற நாய் மொழி சமிக்ஞை. அதைப் பார்த்த பெரிய நாய். தனது அந்தஸ்தைப் பற்றி யோசிப்பது போல் மோவாயைத் தூக்கியது”[83]

யானையின் காதல் மொழிகளை இந்தக் கதையில் கூறியுள்ளார்.

“ஒருவரை ஒருவர் கண்ணால் கட்டிப்பிடித்தபடியே பார்க்கிறோம். நிலா வெளிச்சம் நீரைத் துழாவுது. பிரிய மனமில்லாமல் பிரியப் போகிறேன். அழுகை வருகிறது. அவர் சொன்னார்.

பேசாமல் என்னோடு வந்துடேன்.

முடியுற காரியமா? ஒங்க அடங்காப்பிடாரிங்க என்னை விட்டு வைப்பாளுங்களா! நீங்க என்னோட வாங்களேன்

காட்டரசனாய் திரியுற நான், நம் பலத்தில் நூறில் ஒன்று கூட தேராத ஒரு ஜாதியிடம் மாட்டி, அடிமை வாழ்வு வாழ ஒனக்கு சம்மதமா? ஒனக்கு இஷ்டம் என்றால் எனக்கு சம்மதம்

வேண்டாம் அத்தான், வேண்டாம். நான் நாட்டுப் பெண்ணாய் இருக்கேன். நீங்க காட்டரசனாய் இருங்கள், எதுக்கும் அடங்காப்பிடாரிகளின் காதல் வலையில் சிக்காமல்”[84]

அடிபட்ட காகம் பூனையிடம் இருந்து தப்பிக்க போராடும் முயற்சியைக் கூறுகிறார்.

“சற்று நேரத்திற்கு முன்பு வரை, அதற்கு எமபயம் கொடுத்த அந்தப் பூனை ஏதோ ஒரு எமச் சக்கரத்தில் சிக்கி,

அந்த நடுச்சாலையில் சதைப் பிண்டமாய்க் கிடக்கிறது. காக்கைக்குப் புரிகிறது. சந்தேகமில்லை. லேசாய் நிந்ற ஒரு மோட்டார் பைக், கர்ஜித்தபடியே பயணத்தைத் தொடர்கிறது.

அந்தக் காகம், அலகைச் சாய்த்துப் பார்க்கிறது.

அந்தப் பூனைச் சதை மேல் ஏறிக் கொள்கிறது. பிறகு வெறி பிடித்தது போல், அதைக் கொத்துக் கொத்தென்று கொத்துகிறது. அந்தக் காமம், கொத்திய சதையைத் தின்னவில்லை. ஆனாலும் கொத்திக் கொண்டே இருக்கிறது."[85]

என்பதன் மூலம் அறியலாம்.

## தொகுப்புரை

- 'உத்திகள்' என்ற இவ்வியலில் 'உத்தி' என்பதன் விளக்கம் மற்றும் 'உத்திகள் பற்றிய பிற அறிஞர்களது கருத்துக்கள்' மற்றும் உத்திகளின் வகைகள் போன்றன சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன.
- ஆய்வுக்குரிய சிறுகதைகளில் உத்தி, உணர்ச்சி, உள்ளடக்கம் பயின்று வருவதையும் அதனைப் படைப்பாளர் தன்னுடைய படைப்பில் எவ்வாறு வெளிப்படுத்தியுள்ளார் போன்றனவும் சுட்டப்பட்டுள்ளன.
- தொடக்க உத்தி, கதைமாந்தர் அறிமுக உத்தி, சூழல் வருணனை, நோக்குநிலை, தன்மை கூற்று நிலை, பின்னோக்கு, உரையாடல், கடிதம், கதைமுடிப்பு, அஃறிணைப் பாத்திரப்படைப்பு போன்ற உத்திகளை சு.சமுத்திரம் அவர்கள் தமது சிறுகதைகளில் உத்திகளாகப் படைத்துள்ளமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

ஃ

## சான்றெண் விளக்கம்

1 இளம்பூரணர், தொல்காப்பியம் - பொருளதிகாரம்,(தொ.பெ.நூ.112).

2 சிவஞான முனிவர், நன்னூல், நூ. 14.

3 சிவஞான முனிவர், நன்னூல் - எழுத்ததிகாரம், ப. 27.

4 இரா.குருநாதன், கரந்தை மலர் - 4, ப. 211.

5 ச.வே.சுப்ரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், ப. 5.

6 இரா.தண்டாயுதபாணி, தமிழ் சிறுகதை முன்னோடிகள், ப. 20.

7 கு.வெ.பாலசுபிரமணியன், ஆய்வியல் நெறிகள், ப. 100.

8 சி.மறைமலை, புதுக்கவிதை முப்பெரும் உத்தி, ப. 61.

9 ந.பிச்சமுத்து, திறாய்வும் தமிழ் இலக்கண கொள்கைகளும், ப. 4.

10 சி.சு.செல்லப்பன், வளரும் தமிழ், பக். 19, 20.

11 இரா.பாலசுப்ரமணியன், நாவல் கலையியல், ப. 22.

12 தா.எ. பியூலா மெர்சி, இருபதில் சிறுகதை, ப. 18.

13 கருத்தரங்கு கோவை, ஐந்தாம் உலக இஸ்லாமிய தமிழிலக்கிய மாநாடு, ப. 281.

14 இரா.தண்டாயுதம், தமிழ் சிறுகதைகளின் முன்னோடிகள், ப. 47.

15 சு.வேங்கடபராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப. 154.

16 இரா.மோகன், கு.பா.ராவின் சிறுகதை தொடக்கங்கள், ப. 404.

17 இரா.மோகன், கு.ப.ராஜகோபாலன் சிறுகதைகள், ப. 26.

18 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 598

19 மேலது, ப. 23.

20 மேலது, ப. 43.

21 மேலது, ப. 450.

22 மேலது, ப. 533.

23 மேலது, ப. 382.

24 மேலது, ப. 24.

25 மேலது, ப. 458.

26 மேலது, ப. 257.

27 மேலது, பக். 502, 503.

28 மேலது, ப. 512.

29 மேலது, ப. 13.

30 மேலது, ப. 400.
31 மேலது, ப. 495.
32 மேலது, ப. 588.
33 மேலது, ப. 66.
34 மேலது, ப. 290.
35 மேலது, ப. 376.
36 மேலது, ப. 438.
37 மேலது, ப. 570.
38 மேலது, ப. 627.
39 மேலது, ப. 176.
40 மேலது, ப. 424.
41 மேலது, ப. 475.
42 மேலது, ப. 241.
43 மேலது, ப. 270.
44 மேலது, ப. 297.
45 மேலது, ப. 311.
46 மேலது, ப. 347.
47 மேலது, ப. 444.
48 மேலது, ப. 543.
49 மேலது, ப. 256.
50 மேலது, ப. 261.
51 மேலது, ப. 355.
52 மேலது, ப. 364.
53 மேலது, ப. 513.
54 மேலது, ப. 595.
55 அ.அறிவுநம்பி, இலக்கியங்களும் உத்திகளும், ப. 23.
56 மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப. 136.
57 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 177.
58 மேலது, ப. 392.
59 மேலது, ப. 462
60 மேலது, ப. 18.
61 மேலது, ப. 502.

62 மேலது, ப. 532.

63 மேலது, ப. 632.

64 மேலது, ப. 51.

65 மேலது, ப. 65.

66 மேலது, ப. 269.

67 சு.வேங்கட்ராமன், அகிலன் சிறுகதைகள் ஓர் திறனாய்வு, ப. 153.

68 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 146.

69 மேலது, ப. 176.

70 மேலது, ப. 256.

71 மேலது, ப. 333.

72 மேலது, ப. 512.

73 மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப. 99

74 மேலது, ப. 99.

75 சு. சமுத்திரம், சமுத்திரம் சிறுகதைகள், ப. 43.

76 மேலது, ப. 81.

77 மேலது, ப. 343.

78 மேலது, ப. 358.

79 மேலது, ப. 172.

80 மேலது, ப. 375.

81 மேலது, ப. 451.

82 மேலது, பக். 119, 120.

83 மேலது, பக். 438, 439.

84 மேலது, ப. 568.

85 மேலது, ப. 475.

ஒவ்வொரு மனிதனும் சமூக அமைப்பிற்குக் கட்டுபட்டவனாகவும் அமைகின்றான். மனிதன் தான் பெற்ற அறிவைச் சமூக அமைப்பிற்கு ஆக்கமாக அளிக்கின்றான்.

**படைப்பாளனும் சமுதாயமும்**

சமுதாயத்தின் சிக்கல்களைத் தனிப்பட்டவர்களின் சிக்கல்களாகக் காட்டுவதும் தனிப்பட்டவர்களின் குறைகளைச் சமுதாயத்தின் சிக்கல்களாகக் காட்டுவதும் படைப்பாளனின் தனி ஆற்றலாகும்.

படைப்பாளன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினனாவான். எனவே, அவனுடைய படைப்புகள் சமுதாய வாழ்க்கைப் பிரதிபலிப்பதாக அமையும். ஒரு படைப்பு முழுமையாக ஒரு சமுதாயத்தைப் பிரதிபலிக்காவிட்டாலும் அச்சமுதாயத்தில் உள்ள சில பிரச்சினைகளை அல்லது சிறு கூறுகளையாவது பிரதிபலிப்பதாக அமையும்.

**"சமுதாயத்தால் எழுத்தாளன் பாதிக்கப்படுகிறான் அதோடு சமுதாயமும் அவனால் பாதிக்கப்படுகிறது. இலக்கியம் வாழ்வை உருவாக்கி அளிப்பதோடு அதைச் சீரமைக்கவும் செய்கிறது"**[8] என்று மா.செல்வராசன் சமுதாயத்திற்கும் படைப்பாளனுக்குமுள்ள உறவைக் குறிப்பிட்டுள்ளார்.

சமுதாயம் கலைஞர்களைத் தோற்றுவிக்கின்றது. கலைஞன் சமூகத்தைச் சித்திரிக்கிறான்; உயர்த்துகிறான். வாள் முனையின் கூர்மையை விட கலைஞனின் பேனா முனையின் கூர்மை ஆற்றல்மிக்கது. எந்த ஓர் இலக்கியமும் மனிதனையும் அவனைச் சார்ந்த சூழ்நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டு அமையும்.

சமூக அளவிலும் தனிமனித அளவிலும் பிரச்சனைகள் மலிந்து கிடக்கும் சமுதாயத்தில் படைப்பாளன் தன் படைப்புகளின் வாயிலாக அவற்றைப் படைத்துக்காட்டி விமர்சிக்கின்றான்.

**"வாழ்வில் எதிர்ப்படும் சமுதாயம் குறைமிக்கதாக இருக்கும்போது கற்பனையில் தக்க சமுதாயத்தைப் படைத்துக் காட்டும் உரிமை கலைஞனுக்கு உண்டு"[9]** என்கிறார் இரா.மோகன்.

ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் தம் சிறுகதைகளில் பல இடங்களில் சமுதாயப் பிரச்சினைகளை மையப்படுத்தியுள்ளார். தான் வாழ்ந்த காலத்தின் சமுதாயத்தில் காணப்பெறும் சமூகக் கூறுகளைக் கதை நிகழ்வுகளாகவும், தம் சொந்த, தனிப்பட்ட கருத்துக்களாகவும், பாத்திரங்களின் இயக்கத்தின் வாயிலாகவும் வைத்துக் காட்டுகிறார் என்பதை **"அவர் (சு.சமுத்திரம்) படைத்திருக்கும் புதினங்களுக்கும், கதைகளுக்கும் பெரும்பாலும் அவருடைய சொந்த வாழ்க்கை அனுபவங்களே, ஊற்றும் காரணமுமாக அமைந்துள்ளன. கதை வெளிப்படையாகத் தம்முடைய 'என் கதைகளின் கதை' என்ற நூலில் பல கட்டுரைகளின் வாயிலாக அவர் தெரிவிக்கின்றார்"[10]** என்று தி.தயானந்தன் பிரான்சிஸ் கூறுகிறார்.

## படைப்பாளரின் சமுதாயச் சித்திரிப்பு

படைப்பாளர் தம் படைப்பியக்கத்தின் மூலம் சமுதாயத்தின் நிகழ்வுகளைச் சித்திரிக்கும் விதம் போற்றுதற்குரியது.

சமுதாயத்தைச் சித்திரிப்பதில் எழுத்தாளர்களிடையே அவர் தம் பின்புலம், நோக்கம், சமுதாயதேவை, எதிர்கோள் ஆகியவற்றின் பின்னணியில் நான்கு நிலைபாடுகள் இருக்கின்றன.

"1. சமுதாயத்திலுள்ள பிரச்சினைகளையும் துன்ப துயரங்களையும் எதிர்நோக்க விரும்பாமல் அல்லது முடியாமல் பழைய வாழ்க்கைக்குத் திரும்ப முயலுதல், மிகையான கற்பனையுடன் புனைந்துரைத்தல் நடப்பியலைப் புறக்கணித்தல்.

2. சமுதாய வாழ்க்கையை விரிவாகப் பார்த்து அதனை நுணுக்கமான விவரங்களுடன் இயல்பு நவிற்சியாகச் சித்திரிப்பது.

3. அப்படியே சொல்லுவது மட்டுமின்றி அதனை விமர்சித்தலும் எள்ளுதலும்.

4. சமுதாய நிலைகளைக் காரணகாரிய முறையில் கண்டு சமுதாய மாற்றங்களை இலக்கியப் பொருளாக எடுத்துக் கொள்ளுதல்"[11] என்று தி.சு.நடராசன் விளக்கியுள்ளார்.

"சமுதாயத்தின் விளைபொருளே இலக்கியம். இலக்கியம் சமுதாயத்தையும் சமுதாயம் இலக்கியத்தையும் பாதித்தே வளர்ந்துள்ளன. எழுத்தாளன் சமுதாயத்தைச் சேர்ந்தவன். தான் வாழும் இடத்தைச் சுற்றியே அவனுடைய எண்ணங்கள் படர்கின்றன. இதனால் சமுதாயத்திலுள்ள சீர்கேடுகள் பெரும்பாலும் அவனது எண்ணத்தைத் தைக்கின்றன"[12] என்று கோ.வெ.கீதா கூறியுள்ளார்.

சிறுகதையும் சமூகமும்

"இக்காலத்துச் சமுதாய கருத்தினை உலகிற்குப் பறைசாற்றுவனாக சிறுகதைகளும் புதினங்களும் விளங்குகின்றன. ஒவ்வொரு சிறுகதைகளும் ஏதாவது ஒரு சமுதாயக் கருத்தினை அல்லது சிக்கல்களை வெளிக்கொணரச்

**செய்யும். எங்குத் தோன்றிய இலக்கியமாக இருந்தாலும் அது சமுதாயத்தினை விளக்கிக் காட்டும். புதினத்தைவிடச் சமுதாயத்தை எளிதில் வெளிப்படுத்தும் தன்மை சிறுகதைக்கு உண்டு. ஆயினும் சிறுகதை புதினங்களிலிருந்து செய்திகளைப் பிரித்துத் தனியே சொல்லி விடமுடியாது. கதையமைப்பு, பாத்திர உருவாக்கம், உரையாடல், நிகழ்ச்சி, பின்னணி, வருணனைகள், நேரடியாக எடுத்துரைக்கும் பகுதி எனப் பல இடங்களில் அது பின்னிப் பிணைந்திருக்கக் காணலாம்''**[13] என்பார் மா.இராமலிங்கம்.

சிறுகதை இலக்கியப் படைப்புகள் இன்றையக் காலக்கட்டத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. அது சமுதாயத்தின் பல்வேறு நிலைகளைப் படம்பிடித்துக் காட்டுவதில் முன்னிலையில் நிற்கிறது. சிறுகதைகள் மூலம் சமூகத்திற்கு ஏதோ ஒன்றைச் சொல்ல வந்ததாகவே படைப்பாளனும் படைக்கின்றான். அந்த ஏதோ ஒரு அல்லது பல செய்திகளையே தன் படைப்பின் மூலம் வெளிக்கொணர்ந்து அதற்குத் தீர்வும் காண்கின்றனர்.

**சமுதாய அமைப்புகள்**

சமுதாயத்தின் இயங்குநிலைகளால் அறிவில் சிறந்தாரும் அறிவற்றோரும், பொருள் பெற்றோரும், இல்லாதோரும் எனப் பலநிலைகள் ஏற்படலாயின. சமயம், இனம், சாதி எனப் பல்வேறு வடிவங்களில் பிரிவுகள் முகிழ்த்தன. வளமான வாழ்வும் வறுமை வாழ்வும் பண்பாட்டு முரண்பாடுகளைத் தோற்றுவித்தன. சமூக அமைப்பில் தனிமனிதனின் குடும்ப வாழ்க்கை, பண்பாட்டு மாற்றங்களை வெளிக்காட்டியது.

சு.சமுத்திரத்தின் படைப்புகளை உற்றுநோக்கின் அவருடைய கொள்கைகளும் முற்போக்குச் சிந்தனைகளும் நன்கு

விளங்கும். அவர் தம் படைப்புகள் இலட்சியங்களை விளக்குவனவாய் அமைந்துள்ளன.

"சமுதாயத்தில் நடக்கின்ற தீமைகளையும்,அத்தீமைகளை செய்கின்றவர்களையும், அவர் வெளிப்படையாகச் சுட்டிக் காட்டக் கூடியவர். குற்றங்கள் மீதுள்ள கோபத்தை அடக்கி வைக்காமல் அப்பட்டமாகப் போட்டு உடைக்கக் கூடியவர் என்ற பெயரும் அவருக்கு ஏற்பட்டுள்ளது. சில தருணங்களில் தான் ஒரு அரசு அதிகாரி என்றும் பாராமல் அரசின் கொள்கைகளையும் விமர்சித்திருக்கிறார். இவரது நோக்கம் சாதாரண மக்களை விழிப்புணர்வு அடையச் செய்வதாக இருக்கிறது. இம்மக்களின் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்துவதற்காகவே அவர் எழுதுகிறார். இவர், தம் கருத்துக்களுக்குத் தீர்வு கிடைக்க வேண்டும் என்ற நோக்குடையவர்"[14] என்று ஞானி அவர்கள் கூறுகிறார்.

குடும்பம்

"சமுதாயத்தின் முக்கிய அங்கமாக விளங்குவது குடும்பம் ஆகும். குடும்பம் என்பது சமுதாயத்தின் ஒரு முக்கியமான பகுதி. கணவன், மனைவி உள்பட பலர் சேர்ந்து வாழும் ஒரு வீடாக மட்டும் குடும்பம் கருதப்படுவதில்லை. வாழ்க்கையில் சில பாடங்கள் கற்றுத் தரக்கூடிய களங்களாக அமைகிறது. குடும்பமே உறவை வளர்க்கிறது. குடும்பம் மிகச் சிறிய குழுவாகும். ஒருவனும் ஒருத்தியும் இணைந்து இல்வாழ்க்கை நடத்துவது குடும்பம்"[15] என மே.வெங்கடேசன் கூறுகிறார்.

**“குடும்பம் என்பது பாசம், பிரிவு, உறவு, ஆசை, எதிர்ப்பு, தேவை, வெறுப்பு, கோபம், அரவணைப்பு என அனைத்தும் பின்னிப் பிணைந்தது. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை குடும்பம் என்ற குழுவுடன் தொடர்பு வைத்திருக்கின்றான். எனவே, சமுதாய மதிப்புகளின் ஆணிவேர் குடும்பம் எனலாம். இந்த அடிப்படையில், காதல், பெற்றோர் நலம் பேணுதல், சுற்றம் தழுவுதல், குழந்தைபேறு போன்ற மதிப்புகள் குடும்ப மதிப்புகள் என்று கருதப்படுகின்றன. திருமணம் என்ற அச்சாணியின் மூலமே குடும்பம் அமைகிறது. அதனுடைய முக்கியப் பணி குடும்பத்தைத் தொடங்கி வைப்பதுதான்”**[16] என்று சையத் அகமது பிரோசு குறிப்பிடுகிறார்.

**“குடும்பத்தைப் பற்றி குருதி உறவு அல்லது திருமணம் மூலம் உறவு கொண்ட மக்கள் குழுதான் குடும்பம் என்ற ராபர்ட் ஹேடர்னின் கருத்து குடும்பம் எனப்படும் சமூகத்தின் மதிப்பை கூறுவதாக அமைந்துள்ளது”**[17] என்கிறார் ராபர்ட் ஹட்சன்.

சிறுகதைகள் குடும்ப உறவுகளை மதிப்பிடுவதில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுகின்றன. சு.சமுத்திரம் அவர்கள் தம் சிறுகதைகளில் அவருடைய வாழ்வில் நடந்த அவலங்களைக் கதைக்கருவாகப் படைத்துள்ளார். அதிலும் முக்கியமாகக் குடும்ப உறவுகளை மக்கள் வாழும் நிலைகளைத் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

இவருடைய சிறுகதைகள் குறித்து, சு.சமுத்திரம் என்றாலே அவருடைய ‘சோற்றுப் பட்டாளம்’, ‘ஒரு கோட்டுக்கு வெளியே’ என்ற அருமையான படைப்புகள் இலக்கிய ரசிகர்களின்

நினைவுக்கு வரும். "**அவருடைய சமுதாயநோக்கு சத்திய வேகம், தார்மீகக் கோபம், மனித நேயம், உழைப்பவர்கள் மீதுள்ள பரிவு, அடக்கி ஒடுக்கப்பட்டிருப்பவர்களிடம் அனுதாபம் உயர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்களிடம் நீடித்துள்ள போலித்தனங்கள், பொய்மைகள் பற்றிய சீற்றமும் பரிகாசமும், நியாயங்களுக்காகவும், உரிமைகளுக்காகவும் குரல் கொடுக்கிற இயல்பு ஆகிய நற்பண்புகளைப் பற்றி எண்ணச் செய்யும் என்று வல்லிக் கண்ணன் தனது அணிந்துரையில் கூறுகிறார்.**"[18]

குடும்பத்தில் கணவன்-மனைவி, தந்தை-மகன், தந்தை-மகள், தாய்-மகன், தாய்-மகள், அண்ணன்-தம்பி, அண்ணன்-தங்கை, அண்ணி-கொழுநன், மாமனார்-மருமகள், மாமியார்-மருமகள், ஆசிரியர்-மக்கள், முதல்வர்-மாணவர், ஆசிரியர்-மாணவன் ஆகிய உறவுகளை ஆசிரியர் தன் படைப்புகளில் பாத்திரங்கள் மூலம் படைத்துக் காட்டியுள்ளார்.

**கணவன் மனைவி உறவு**

மனிதனை மனிதனாக மதித்தல் வேண்டும். உண்மையான அன்பு கொள்ள வேண்டும். உண்மையான அன்பு இருந்தால் மட்டுமே சமுதாயத்தில் மதிக்கப்படுகின்றான். கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் உண்மையாக நடந்து கொள்ள வேண்டும்.

> 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு' (குறள். 72)

என்ற குறளுக்கேற்ப கணவன் மனைவி உறவு அமைய வேண்டும்.

'நூலிழையில் ஒரு பந்தம்' எனும் கதையில் ஆசிரியர் கணவன்-மனைவி உறவு எப்படிப்பட்டது என்றும் விளக்கிக் காட்டுகின்றார்.

வைரமணிக்குத் திருமணம் முடிந்த முதலிரவில் தன் மனைவி மனவளர்ச்சி குன்றியவள் என்பது தெரியவருகிறது. அவனுடைய தாய், தந்தையர் அவனுக்கு மறுமணம் செய்ய கட்டாயப்படுத்துகின்றனர். ஆனால் அவனோ, **"இந்தப் பச்சைக் குழந்தையைத் தள்ளிவிட்டு இன்னொரு வயது வந்தவளைப் பிடித்து வாழவேண்டியது அவசியந்தானா? பூனைக்குட்டிக்கு அடைக்கலம் கொடுத்த அவளுக்கு, யார் அடைக்கலம்? இந்த ஊரில் இருப்பவர்கள் வேலை பார்ப்பது, கல்யாணம் செல்வது, பிள்ளை பெறுவது, வயல் தோட்டங்களை விற்பது அல்லது வாங்குவதைத் தவிர, வேறு எதைக் கண்டார்கள்? எத்தனையோ பேர் வாழ்ந்துவிட்டுப் போன இந்த ஊரில், என்ன மிஞ்சி இருக்கு?**

**'நாம, ஏன் ... இவளோட வாழக்கூடாது?' மாடசாமி நாடார் மவன் மாதிரி, மாட்டிக்க மாட்டோமுன்னு சொல்லுற இளைஞர்களிடம் மாடசாமி மவனப் பாருங்கல ... கிடைச்சவள வச்சிக்கிட்டு எவ்வளவு சந்தோஷமா இருக்கான் என்று ஊர்க்காரர்கள் சொல்லும்படி நாம ஏன் முன்னுதாரணமா வாழக்கூடாது"[19]** என்பதில் தான் கைபிடித்த மனைவி எப்படிப்பட்டவளாக இருந்தாலும் பரவாயில்லை அவளுடனே கடைசிக் காலம் வரை வாழ்க்கையை வாழ்ந்து முடித்து விடலாம் என்ற கருத்தை இதன்வழிச் சுட்டி, கணவன் மனைவி உறவு அன்புடன் விளங்க வழிகாட்டுவதை உணரலாம்.

‘பழத்தை தாங்கிய சருகு’ என்ற கதையில் கணவன் மனைவி உறவில் கால மாற்றத்தினால் ஏற்படும் முரண்பாடுகளைப் புகுத்திக் காட்டியுள்ளார். திருமணமான புதிதில் நீயின்றி நான் இல்லை, நானின்றி நீ இல்லை என்று இருந்த அவர்கள் வாழ்வில் கையில் காசுயில்லை என்றவுடன் விரிசல்கள் அதிகமாகின்றன.

“பிள்ளைகளுக்கு என் வார்த்தையை மீறி தகாத இடத்துல சம்பந்தம் பண்ணினா ... பிள்ளைகளும் என்னை மதிக்கிறதில்லை ... அந்த அளவுக்கு மனசுல விஷத்தை வளத்துக் கெடுத்துட்டா ... நான் ரிடையர்ட் ஆனப்புறம் ... நாய் மாதிரி என்னை நடத்தினர். ஒரு நாளு மயக்கம் போட்டு விழுந்திட்டேன். டாக்டர் பிளட் பிரஷர்னு சொல்லி ... தினமும் ஒரு ஊசி போடச் சொன்னாரு ... ஆனால் என் நோயைப் பத்தி ... அவளோ ... பிள்ளைங்களோ கவலைப்படல. ஊசிக்கு சில நாளைக்கு ரூபா தந்தா ... அப்புறம நிறுத்திட்டா ... எனக்கோ உடம்பு மோசமாச்சுது. ஒரு சித்த வைத்தியரு ... இதோ இந்தக் கையில இருக்கிற வேங்களைக் கொடுத்து இடிச்சி காயம் போட்டுச் சாப்பிட்டா ... ரத்தக் கொதிப்பு அடியோடு போயிடும்னு சொன்னார் ... நான் அவகிட்டே கொடுத்தேன். கஷாயம் போடச் சொன்னேன். அவள் என்ன பண்ணினாள் தெரியுமா ... கண்ட கழிசடைங்களெல்லாம் எதுக்கு கொண்டு வரேன்னு சொல்லி ... வீட்டுக்கு வெளில எறிஞ்சிட்டாம்மா ... நானும் அவளுக்கு கழிசடைங்கறத உணர்ந்துகிட்டு, வேருங்கள பொறுக்கிட்டு வந்துட்டேன்”[20] என்கிறாள்.

‘கையில் காசுயில்லை என்றால் கடவுளே ஆனாலும் கதவைச் சாத்தடி’ என்ற பாடலுக்கேற்ப, வேலையில் இருந்தவரை கணவனை மதித்த மனைவியும் அவன் வேலையில்லாத நிலையில் ஒரு சுமையாக ஆகிவிடுகின்றான். இந்த அணுகுமுறையில் எழுதப்பட்டதே இந்த கதை. சு.சமுத்திரம் இக்காலச் சமுதாயச் சூழலில் எங்ஙனம் குடும்பச் சிக்கல்கள் உண்டாகின்றன என்பதையும், முதியோர் உறவில் ஏற்படும் புகைச்சலையும் காட்டுகிறார்.

### தந்தை மகன் உறவு

குடும்பத்தில் தந்தைக்குச் சிறந்த மதிப்புண்டு. ஒரு குடும்பத்தின் தலைவராகத் தந்தையே இருக்கிறார். தந்தைக்குப் பிறகு குடும்பத்தின் தலைமகனுக்குப் பொறுப்பையும் மதிப்பையும் இச்சமுதாயம் அளிக்கிறது.

**“தந்தை என்ற சொல்லே கணவனுக்குப் பின்பு அழைப்புப் பெயர் ஆயிற்று. மனிதன் முதலில் உணர்ந்தது தந்தையையே. பின்பு அவரைப் போல் அன்பு தருபவன் என்னும் கருத்தில் கடவுளை அப்பன் என்றனர். தெய்வத்தைத் தந்தையாகக் கருதி, ஐயப்பன், சுப்பன், மலையப்பன், சாமிஅப்பன் ஆகிய சொற்கள் அறிமுகமாயின”**[21] என்று தந்தையின் சிறப்பைப் பற்றி தமது நூலில் எடுத்துரைக்கின்றார் தாயம்மாள் அறவாணன்.

இவர் மகன் என்ற உறவைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். **“மூத்த மகன் பல வழிகளில் தந்தைக்கு உதவியாக இருப்பவன். பிறப்பு முதல் இறப்பு வரை அவன் உதவுபவன்”**[22] எனக் குறிப்பிடுகிறார்.

'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்பதற்கேற்ப, தந்தையின் கட்டுப்பாட்டில், திருமணத்திற்கு முன் வரை இருக்கிறான். தந்தையின் அரவணைப்பில் வளர்ந்த மகன், தாய் தந்தையரை மதிக்கின்றான்.

'பனையேறி குடும்பத்தைச் சேர்ந்தவன்' எனும் கதையில், மகனுக்குத் திருமணம் நிச்சயிக்கப்படுகிறது. தன் மகனுக்குப் போட வேண்டிய நகை போடவில்லை என்ற காரணத்துக்காக வேலாயுத நாடார் 'டேய் நடராஜா இறங்குடா, நமக்கும் இவங்களுக்கும் ஒட்டும் வேண்டாம், உறவும் வேண்டாம். உனக்கு நான் இதவிட அழகான பொண்ணா பாக்குறேன்!' என்கிறார்.

**"நடராஜன் இருக்கையில் இருக்காமலும், எழுந்திருக்காமலும் அந்தர் பல்டி அடிக்கப் போடுகிறவன் போல முதுகை நிமிர்த்தி வளைத்தான்."[23]** சொன்ன சொல்லை மீறாமல், காப்பாற்றுபவன்போல் மகன் நடந்து கொண்டான் என்னும் இக்கதை மூலம் தந்தை-மகன் உறவு சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது.

தந்தையின் பாசத்தில் வளர்ந்த மகன் திருமணத்திற்குப் பின் தந்தையை மதிப்பதில்லை என்னும் நிலை சமுதாயத்தில் காணப்படுவதைப் பின்வரும் சான்று விளக்குகிறது. 'தலைத் தீபாவளி' கதையில் மனோகர் தன் தந்தையான பெருமாள் சாமியை, **"நான் எப்போ ஒம்ம அடிக்க வந்தேன்? ருசுப் படுத்த முடியுமா? இப்போ சொல்லுததுதான் ... ஒம்மால இருக்க முடியுமுன்னால் இரும், இல்லன்னா ... ஒரேயடியாய் மெட்ராஸ்லயே போய் இருந்துக்கிடும். ஒரு கண்ணுல சுண்ணாம்பும், இன்னொரு கண்ணுல வெண்ணெய்யும் வைக்கிற**

மனுஷன் நீரு ... நீரு செத்துப்போனதா எப்பேவோ தீர்மானம் பண்ணித் தலை முழுகிட்டேன்”[24] என்பதால் அறியலாம்.

இந்தக் கதையில் கால இடைவெளியில் தந்தை மகன் உறவில் திருமணத்திற்குப் பின் ஏற்படும் விரிசல்கள் தெரிகின்றது. இந்தத் திரிபுக்கு நிலைக்குக் காரணம் பொருளியலாகும். ‘பொருளில்லாருக்கு இவ்வுலகமில்லை’ என்கிறார் வள்ளுவர். இதைக் குடும்பப் படபிடிப்பு எனலாம். வயது முதிர்ந்த நிலையில் பெற்றோரிடம் செல்வம் இல்லாமல் போனால் பிள்ளைகள் இடம் அன்பு இல்லாமல் போகும் என்னும் ஒரு சமுதாயச் சிந்தனையே இந்தக் கதை.

**தாய்-மகன் உறவு**

‘தாயிற் சிறந்த கோவில் இல்லை’ என்பார்கள். அதுபோன்று தாய் மகன் உறவும் மிக முக்கிய உறவாகும். ஒரு மகனுக்குத் தாய் தான் முதல் தெய்வம். நமது இன்ப துன்பத்தில் பங்கெடுத்துக் கொள்ளுபவர் தாய். மனித உறவுகளில் மிக முக்கிய உறவு தாய் உறவுதான். அன்பிற்கும் தியாகத்திற்கும் எடுத்துக்காட்டாக விளங்குபவள் தாய். தன் மகன் தன்னைக் கேவலமாக நடத்தினாலும் அதற்காகத் தன் குழந்தையை என்றும் வெறுத்து ஒதுக்குவதில்லை. தாய் தான் இறக்கும் தருவாயிலும் தன் மகன் நினைவிலேயே உள்ளாள்.

‘பால் கணக்கு’ எனும் சிறுகதையில் தாய் உடல்நிலை சரியில்லாமல் படுத்த படுக்கையாக எலும்பும் தோலுமாக, உயிர் பிரியாமல் கிடக்கிறாள். உறவும், சுற்றமும் வந்து பார்த்துச் செல்கின்றனர். ஆனால் அவள் தன் ஏழுவயது மகன்மாடசாமியைக் கண்களால் பார்த்துக் கண்ணீர் வடிக்கின்றாள். மாடசாமிக்கு யாரும்

ஆதரவு இல்லை, எப்படி வாழப் போகின்றான் என்ற எண்ணத்தினால் அவளுக்கு உயிர் போகவில்லை. இதை அறிந்த ஊர் மக்கள்; அவர்கள் சொல்லிக் கொடுத்தது போல் சொல்லச் சொன்னார்கள். உடனே மாடசாமி தன் தாய் அருகில் சென்று **"எம்மா எம்மா ... நான் என்ன ஆவனோன்னு வருத்தப்படாம போம்மா. நான் எப்படியும் மாடு மேச்சாவது, ஆடு மேச்சாவது ... பொழச்சுக்கு வேம்மா ... எப்பவும் ஒன்னையே நெனச்சிக்கிட்டு காலத்த தள்ளிடுவேம்மா ... கவலப்படாம போம்மா ... சந்தோஷமா போம்மா ... நீ பெத்த இந்த மவன் ஒன்ன மாதிரியே ஒன்பேரு விளங்கும்படியா இருப்பாங்கிற நம்பிக்கையோடு போம்மா .... எம்மா எம்மா"**[25] என்று சொன்னதுதான் ... பார்வதி உயிர் செல்ல முடியாத இடத்திற்குச் சென்று விட்டது.

இந்தக் கதையில் தன் மகன் எப்படிப் பிழைப்பான் என்ற நினைவில் உள்ளதால் அவள் உயிர் பிரியவில்லை, நான் மாடு மேய்த்தாவது பிழைத்துக் கொள்வேன் என்ற உடன் நிம்மதியில் இறந்து விட்டாள். இக்கதையில் சு.சமுத்திரம் தாய் மகன் உறவை நன்கு விளக்கியுள்ளார்.

**தாய்-மகள் உறவு**

நமது நாட்டில் தாய்வழிச் சொத்துக்கள் மகளையே சாரும். இன்றைய சமுதாயத்தில் தாய் தான் சேர்த்து வைக்கும் பொருள்களை, சொத்துக்களை மகன்களைவிட மகளுக்கே கொடுக்கிறார்கள். மகள் மீது உள்ள பாசத்தில் எதையும் செய்யக் கூடியவர்களாக இருக்கின்றனர்.

தாய் தன் மகள் தன்னை மதிக்கவில்லை என்றாலும் அவள் நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட வேண்டும் என்பதற்காகவே 25 ஆண்டுகாலம் வாழ்ந்த தன் கணவனையே தூக்கி எறிந்து பேசுவதை, 'அம்மையப்பன்' என்ற கதையில் தன் மகளுக்கு மணம் முடிக்க வேண்டிய மாப்பிள்ளையை வேறு பெண்ணுக்கு மணம் முடிக்க நினைத்த தன் கணவனைப் பார்த்து, **"வலிய வந்த மாப்பிள்ளையை வளைத்துப்போடத் தெரியலியே ... நீங்கல்லாம் ஒரு அப்பாவா?"**[26] என்று தன் மகளுக்காகத் தாய் தன் கணவனையே மிகவும் மோசமாகப் பேசுவதாக உள்ளது. தாய் மகள் மீது அதிக அக்கறை செலுத்துவதை உலகில் காணப்படுவதை இந்தக் கதை மூலம் காட்டுகிறார்.

**அண்ணன்-தம்பி உறவு**

'மனம் கொத்தி மனிதர்கள்' எனும் கதையில் அண்ணன் நல்ல நிலையில் இருந்தபோது அவனுக்குப் பெண் பார்த்து நிச்சயிக்கப்படுகிறது. அதே அண்ணன் நடராஜன் மூளைக்கோளாறு ஏற்பட்டு மருத்துவமனையில் சிகிச்சை முடிந்து இரண்டாண்டுகள் கழித்து வீட்டிற்கு வருகின்றான். அவனிடம் அவன் தாய் **"ஒனக்கு இந்த மாதிரி வந்த பிறவு, என்ன செய்யறதுன்னு தெரியாமத் தவிச்சோம். நிச்சயம் பண்ணுன வீட்லே தான் கல்யாணம் நடக்கணும்னு பெரிய மனுஷங்க சொன்னாங்க. அதனால உன் தம்பி தம்பித்துரைக்கே ...**

**நடராஜனால் சாப்பிட முடியவில்லை. உள்ளத்தை உணர்வுகள் தின்று கொண்டிருந்தன. தம்பி, தன்மீது வைத்திருக்கும் பாசத்தை நெஞ்சிற்குக் கொண்டுவந்து அந்த உணர்வுகளை விரட்டியடித்தான்"**[27] என்கிறாள்.

தன் அண்ணனுக்காக எந்த தியாகத்தையும் செய்யக் கூடியவன் தம்பி என்பதை இக்கதை காட்டுகின்றது. இன்றைய சமுதாயத்தில் அண்ணனுக்காகத் தம்பி இப்படிச் செய்வது சாத்தியமாகுமா என்று சொல்லும்படி உள்ளது.

**அண்ணன் - தங்கை உறவு**

பிறந்த வீட்டில் இருந்து புகுந்த வீட்டிற்குச் செல்லும் வரை இவர்கள் உறவு பிரிக்கமுடியாததாக இருக்கின்றது.

கவிஞர் கண்ணதாசன் திரைப்படப் பாடலில் 'கண்ணின் மணிபோல் கலந்து பிறந்தோமடா...' என்று அண்ணன் தங்கை உறவை பற்றிப் பாடியுள்ளார்.

பெண்களின் பொதுவான இயல்பு தான் பிறந்த வீட்டின் பெருமைகளைப் பேசிக் கொண்டிருப்பது. அதனை நிலைப்படுத்திக் கொள்ளவும் விரும்புவார்கள்.

'உறவுக்கு அப்பால்' என்னும் சிறுகதையில் மீனாட்சி அண்ணன் குடும்பம் நல்ல நிலையில் வசதியாக இருந்தபோது அவள் மகள் வித்யாவைத் தன் மகன் ரவிக்குதான் தரவேண்டும் என்று பிடிவாதமாக இருக்கிறாள். அண்ணன் இறந்தவுடன் அக்குடும்பம் நொடித்து விடுகிறது. மீனாட்சியின் குடும்பம் சற்று பொருளாதாரத்தில் உயர்ந்து விடுகிறது. அப்பொழுது எங்கே தன் மகனுக்குக் கட்டச் சொல்லி விடுவார்களோ என்று எண்ணி, அவளைத் தன் மகனின் நண்பன், நாற்பது வயது கடந்தவனுக்கு இரண்டாந்தாரமாகக் கட்டிக் கொடுக்குமாறு அறிவுரை கூறுகின்றாள்.

வித்யா பொருளாதாரத்திற்கு மட்டுமே முதன்மை அளிக்கும் உறவினர்களை விட்டுவிட்டு; எக்காலத்திலும் மாறாத

அன்பு செலுத்தும் தன் அப்பாவின் டெல்லி நண்பர் வீட்டுக்குப் புறப்பட்டுச் செல்வதாக சு.சமுத்திரம் படைத்துள்ளார்.

**“உறவின் பரிமாணங்கள் பொருளாதார பொருளாதார அந்தஸ்தைப் பொறுத்தது. ஆனால், மனிதாபிமானம், பொருளாதார வேலிக்குள் அடங்காத கருணை வெள்ளம்”**[28] என்று வித்யா மூலமாக ஆசிரியர் கூறுகிறார்.

‘காகித உறவு’ என்ற மற்றொரு கதையில் அண்ணன்-தங்கை உறவில் ஏற்பட்டுள்ள இடைவெளி முரண்பாடுகளைக் காட்டுகின்றார்.

இந்த மாற்றத்திற்குக் காரணம் அவனுடைய மனைவியின் ஆதிக்கமே. அண்ணியின் சொல் கேட்டு அண்ணன் செயல்படுகின்றான். அவளுடைய கைப்பாவையாகச் செயல்படுவதால் அவன் தன் தங்கையின் மீதுள்ள அன்பு நிலையில் இருந்து மாறுகின்றான். இதனால் அவனுடைய தங்கை அண்ணனுக்குக் கடிதம் எழுத நேரிடுகின்றது. பொருளியலினால் ஏற்படுகின்ற உறவுநிலை வேறுபாட்டையும் இக்கதை வாயிலாகக் காட்டுகிறார். தமயந்தி தன் அண்ணனுக்கு எழுதிய கடிதத்தின் சில வரிகள்.

**“நானும் அம்மா சொன்னதுல என்ன அண்ணி தப்பு? மனம் இருந்தா மார்க்கமும் தானாக வரும். நீங்க போட்டிருக்கிற நகைய எனக்குப் போடப்படாதா? சின்னப் பொண்ணு ஸ்டெல்லாவின் சங்கிலியைத் தரப்படாதா. ஜடமா இருக்கிற ஸ்கூட்டர வித்து இந்த ஜடங்கள கரையேத்தக் கூடாதா? அப்படியே இல்லாவிட்டாலும் பி.ஏ. படிச்ச நீங்க, கொஞ்ச நாளைக்கு வேலைக்குப் போயி எங்களுக்கு வழி**

பண்ண முடியாதா? அண்ணன் ஒரு நாளைக்கு மூணு ரூபாய்க்கு மூணு பாக்கெட் சிகரெட் பிடிக்காரு. தங்கச்சிக்குக் கல்யாணம் பண்ணனும் என்கிற வைராக்யத்துல அத விட்டா மாசம் நூறு ரூபாய் தேறும். போகட்டும். பப்பிக்கு முப்பது ரூபாய் செலவுல டான்ஸ் முக்கியமா? பதினைஞ்சு ரூபாய் தந்தா டைப்ரைட்டிங் கத்து, நான் வைலைக்குப் போயி, எனக்கு நானே ஒரு வழி பண்ணியிருப்பேன். முடியாததுன்னு உலகத்துல எதுவுமே இல்ல அண்ணி. மனசுதான் வேணும்', என்று ஏதோ ஒரு வேகத்தில் கேட்டு விட்டேன்"[29] தன் அண்ணன் படித்தால் தன்னை காப்பாற்றுவான் என்று எண்ணி தன் படிப்பையே பாதியில் நிறுத்திய தங்கையின் அவலநிலையை; இருபதாம் நூற்றாண்டில் நடப்பதைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

### மாற்றாந்தாய் - மூத்தாள் பிள்ளை உறவு

தாய் எதையும் தாங்கும் பூமித்தாயைப் போல் பொறுமை கொண்டவளாகத் தான் இருப்பாள். சமுதாயத்தில் ஓர் ஆடவன் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும் உள்ளது. சில வேளையில் முதல் மனைவி நோய்வாய்ப்பட்டு இறக்கவும் நேரிடும். அப்பொழுது இரண்டாம் மனைவியாக வரக்கூடிய பெண், தன் மூத்தாள் பிள்ளையைத் தன் பிள்ளைபோல் வளர்க்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்த சு.சமுத்திரம் 'காகித உறவு' என்ற கதையைப் படைத்துள்ளார்.

அக்கம்பக்கத்துக்காரர்கள் அம்மாவிடம் வந்து ஒனக்குப் பகவான் கிருபையில் ஒரு ஆம்புளப்பிள்ளை பிறக்கணும் என்று சொல்லும்போதெல்லாம் 'எனக்கு இனிமே பிள்ளையே வேண்டாம். என் ஒரே மவன் மாடசாமி காலும், கையும் கெதியா

இருந்தால் அதுவே போதும்' என்கிறாள். மகன் கால்லூரியில் படிப்பதற்காகத் தன் மகளைப் படிக்க வைக்கக் கூடாது என்று தன் மூத்தாள் பிள்ளைக்காக வாதாடி தன் கணவனிடம் வெற்றி பெற்றதில் இருந்து மாற்றாந்தாய் - மூத்தாள் மகன் உறவிலுள்ள உறவின் விரிசலைச் சித்திரித்துக் காட்டியிருக்கின்றார்.

**மாமனார் - மருமகள் உறவு**

பெண்கள் பொதுவாகத் தன் தாய் தந்தையரை மதிப்பது போல் புகுந்த வீட்டிற்குச் சென்றால் தனது கணவனின் தாய், தந்தையரை மதித்து நடப்பது அரிது. தனது மகள் புகுந்த வீட்டிற்குச் செல்லும்போது, அங்குள்ள முதியவர்களுக்கு மதிப்பு அளித்து நடக்கும்படி பெற்றோர் அறிவுரை கூறி அனுப்பினாலும் கண்டுகொள்வதில்லை.

'தலைத் தீபாவளி' என்ற கதையில் மாமனார்-மருமகள் உறவு எந்த அளவு நெருக்கமாக உள்ளது என்பதை விளக்கியுள்ளார். தனது பெரிய மகன் மனோகரனிடம் இருந்த பெருமாள்சாமி, கிராமத்தில் இருக்கும் மகளைப் பார்த்து வருவதாகக் கூறி ஊருக்குச் செல்லத் தயாராகிறார் அப்போது அவளுடைய மருமகள்.

"மாமா ... இங்க உங்களுக்கு என்ன குறை ...? இன்னும் ஒரு மாதம் இருந்துட்டுப் போனால் என்ன ...? ஊர்ல போய் ... உங்க மருமகள் கிட்டயும், மகன் கிட்டயும் திட்டு வாங்குறதுல சந்தோஷம் இருக்கா ... என்ன? குழந்தைங்க அழுகிறதைப் பாருங்க .... இன்னும் ஒன் மன்த்ல ... ஸாரி ... இன்னும் ஒரு மாதத்துலே உங்க பிள்ளை டூர் போவார் ... அப்போ போகலாமே ....

மனோகரும், இப்போது ஒத்துப் பாடினான். ஏற்கனவே நேரமாகி விட்டது. அப்பா உள்ளே வருவதைவிட, அவரை வெளியே நிற்க வைப்பதற்கு, குறைந்த நேரமே ஆகும்.

அவள் சொல்றது மாதிரி ... ஒரு மாதம் பேசாம இங்கேயே இருங்கப்பா ...

பெருமாள்சாமி பேசவில்லை. கண்களைத் துடைத்துக் கொண்டே சிரித்துக் கொண்டார். பேரன், பேத்திகளுக்குக் குனிந்து முத்தமிட்டு விட்டு, மருமகளின் இரு கரங்களையும் பற்றிக் கண்களில் ஒத்துக்கொண்டு, காரில் ஏறினார். பிறகு வேறு பக்கமாகத் திருப்பிக் கண்களைத் துடைத்துக் கொண்டார்."[30]

மாமனார் மீது மருமகள் இப்படி இந்த சமுதாயத்தில் அன்பு செலுத்தினால் 20ஆம் நூற்றாண்டில் முதியோர் இல்லங்களைக் குறைத்து விடலாம் என்ற நோக்கில் படைத்துள்ளார்.

பெரும்பாலான குடும்பங்களில் மருமகள் மாமனாரை மதிப்பதில்லை. இந்த இரண்டு பேருடைய உறவு முரண்பட்டதாகக் காணப்படுகிறது. இதனை 'கமலா அழுகின்றாள்' எனும் கதையில் காட்டியுள்ளார். கமலா தனது மாமனாருக்குச் சாப்பாடு போட்டால், அவர் இருக்கும் இடத்தில் தட்டை வைக்க மாட்டாள், தட்டு இருக்கும் இடத்தில்தான் அவர் உட்கார்ந்து சாப்பிட வேண்டும். ஆனால் கமலாவின் தந்தை விருந்தாளியாக அவள் வீட்டிற்கு வந்து தங்கி இருந்துவிட்டு ஊருக்குச் செல்லும்போது இங்கே இன்னும் இரண்டு நாள் தங்கி செல்லுங்கள் என்றாள். அதற்கு அவர் "ஒன்கிட்ட சொல்லாமல் யார்கிட்ட அம்மா சொல்றது?

**இந்த நாலே நாள்தான் நான் இந்த வருஷத்துல வாழ்ந்த உண்மையான நாட்கள். ஊருக்குப் போனதும் நரகந்தான். உன் அண்ணிக்காரி ஒருநாள் கூட வயிறாரச் சோறு போடமாட்டாள். தெரு நாயை நடத்துற மாதிரி நடத்துறா. உன் அண்ணன், என்னைக்காவது ஒருநாள் எனக்கு நல்ல பலகாரம் வாங்கிட்டு வந்துட்டாபோதும். அன்றைக்கு முழுதும் அவன்கூட வேற சாக்கில் சண்டைக்குப் போவாள். என்னையும் சாடைமாடையாய்த் திட்டுவாள். நான் உயிரோட இருக்கிறதே தப்பும்மா ..."[31]** என்கிறாள். கமலா இதைக் கேட்டவுடன், தான் செய்கின்ற தப்பு நினைவுக்கு வரவில்லை. தன் அண்ணி செய்யும் செயல் தான் அவள் மனதில் தெரிகிறது. இந்தக் கதையில் மாமனார்-மருமகள் முரண்பட்ட உறவு நிலையைக் கமலா பாத்திரம் மூலம் படைத்துக்காட்டியுள்ளார்.

**மாமியார்-மருமகள் உறவு**

'பெண்கள் பிறந்த வீட்டுச் சீதனமாகப் பாசத்தைக் கொண்டு வரலாமே' என்பதைக் கவிஞர்கள் பலர் தம் கவிதையில் படைத்துள்ளனர். இன்றைய சமுதாய சூழ்நிலையில் அது எந்த அளவுக்குச் சாத்தியமாகும் என்பது கேள்வியாகவுள்ளது. பெண்கள் தன் பிறந்த வீட்டின் பெருமைச் சொல்லிக் கொள்வதில் அவர்களுக்கு ஈடு அவர்கள்தான்.

முதியோர்கள் பணத்திற்குப் பதில் பாசத்திற்குதான் ஏங்குகிறார்கள். குடும்பத்தில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இருந்தால் குடும்ப உறவு நன்றாக அமையும். அது இல்லாத காரணத்தால்தான் உறவு முரண்பட்ட உறவாக மாறுகிறது என்கிறார்.

‘பழத்தை தாங்கிய சருகு’ என்ற கதையில் மருமகள், மாமியாரைத் தன் உடன் வந்து சென்னையில் தங்கிக் கொள்ளுங்கள் என்று கூறுகிறாள். மாமியார் இதை நம்பி தனது கிராமத்தில் இருக்கும் வீடு, இடங்களை விற்றுவிட்டு பணத்தையும் இவர்களிடம் ஒப்படைத்துவிட்டுத் தங்கி விடுகின்றாள். ‘பழகப் பழகப் பாலும் புளிக்கும்’ என்பதுபோல் மருமகள் தொல்லை ஆரம்பித்தது. இதை மகனும் கேட்கவில்லை, அதனால் மீண்டும் தன் சொந்த ஊருக்கு வந்து விடுகிறாள். திருமலை ஆச்சி, அங்குத் தான் பட்ட கொடுமைகளைத் தனது தோழியிடம் கூறும்போது, **“யாருக் கிட்டேயும் சொல்லாதக்கா ... மருமவா ... எனக்கு நாகரிகம் தெரியலன்னும் ... மகன அநியாயமா கெடுத்திட்டேன்னும் ... முதல்ல சாடையிலேயும் அப்புறம் மூஞ்சிக்கு நேராயும் பேசினா ... சாப்பாட்லகூட ஓரவஞ்சனை பண்ணினா. மூச்சுவிடல, பெத்தமவனும் ... கண்டுங்காணாம இருந்தான். என் ... பேரன் பேத்தியக் கூட ... என் கிட்ட விட மாட்டா ... அதுங்களும் அவா பேச்ச கேட்டு ‘எங்க வீட்ல யாமே இருக்கே’ன்னு கேட்டுதுங்க. கடைசியா அந்த வீட்லேயே ஒரு ரூம்ல தனியா சமைச்சி சாப்பிடச் சொன்னாங்க ... சாப்பிட்டேன் ... ஆறுமவம் அவளுக்கு தெரிஞ்சும் தெரியாமலும் பணம் தருவான் ... இது போதாதுன்னு .... புண்ணியவதி என்ன துரத்துணுமுன்னு நினைச்சிருக்கா”**[32] என்கிறாள்.

இதுகாறும் குடும்ப உறவுகளைப் பற்றிக் கதைகளில் ஆசிரியர் கூறியுள்ள கருத்துக்கள் சுட்டப்பட்டுள்ளது. குடும்ப அமைப்பைப் பற்றியும் கூறுகிறார். குடும்பத்தில் மாமியார்-மருகமகள் உறவு வேறுப்பட்டிருப்பதற்குக் காரணமாக

அமைவது பொருளியலும், பழமைவாதமும் ஆகும். நகர, நாகரிகச் சூழலில் பிறந்து வளர்ந்த வாழுகின்ற படித்த மருமகளுக்கு மாமியார் பிடிக்காமல் போதல் இயல்பாகக் காணப்படுகிறது என்கிறார். மாமியார்-மருமகள் இயல்பு உணர்ச்சியின் புனைந்துரை இல்லாத அணுகுமுறைகள் இக்கதைப் படைப்பாகும்.

**"ஒரு பெண்ணுக்கு 'பெண்' எனும் தகுதியையும், ஓர் ஆணுக்கு 'ஆண்' என்ற தகுதியையும், பெண்ணும் ஆணுமாகிய இருவர்க்கும், 'மனிதர்கள்' என்ற தகுதியையும் குடும்ப அமைப்பே பெற்றுத் தருகிறது"**[33] என்கிறார் கி.இராசா.

குடும்ப அமைப்பைப் பற்றி தொல்காப்பியர்,

"காம என்ற கடைக் கோட் காலை
ஏமம் மக்களோடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்தன் பயனே" (தொல். 1138)

என்கிறார். தொல்காப்பியர் இல்லறத்தை வெற்றிகரமாக நடத்தி முடித்தவர்களே, உலகிற்கு உதவ முடியும் என்று நம்புகிறார்.

காலம் காலமாகத் தமிழ்ச் சமுதாயம் குடும்ப அமைப்பைப் பேணிக் காத்து வந்துள்ளது. இந்தக் குடும்ப அமைப்பு தகர்ந்து போனால் சமுதாய அமைப்பும் தகர்ந்து போகும் என்பதை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

**ஆசிரியர் - மக்கள் உறவு**

இருபதாம் நூற்றாண்டில் பள்ளி ஆசிரியர் - பொதுமக்களிடையே நல்ல உறவு காணப்படுவதில்லை. மாணவன் நன்றாகப் படிக்க வேண்டும் என்பதற்காக, மாணவனை, அடித்தல், கடினமாக நடந்து கொண்டால், ஆசிரியர் மீது வழக்கு போடும்

காலமாக உள்ளது. இந்த நிலைக்குக் காரணம் ஆசிரியராகவும் இருக்கலாம் ஊர்மக்களாகவும் இருக்கலாம் என்கிறார் சு.சமுத்திரம் ஓர் ஆசிரியருக்கும் ஊர்மக்களுக்கும் உள்ள நல்ல உறவையும், ஆசிரியரை ஊர் பொதுமக்கள் கடவுளாக மதிப்பதையும் 'ஆசிரியர் அண்ணாவி' என்ற கதையில் விவரிக்கின்றார்.

ஆசிரியர் இந்த ஊருக்கு வந்தபோது திண்ணைப் பள்ளிக்கூடமாக இருந்தது. உயர்நிலைப் பள்ளியாக மாற்றுவதையும் மக்களை நல்வழிப்படுத்துவதையும் இவர் குறிக்கோளாகக் கொண்டவர். தன் மனைவி இறந்தும், டெல்லியில் உயர் பதவியில் உள்ள தன் மகன் அழைத்தும் அங்குச் செல்லாமல், இந்த ஊர் மக்களின் நலனிலேயே நாட்டமாக இருந்த ஆசிரியர் அண்ணாவியை, **"என்ன அண்ணாவி நீங்க ... இந்த ஊருக்கே நீங்கதான் குலதெய்வம் எங்க குடும்பத்துக்கு நீங்க கடவுளு. நீங்க கண்டிப்பா போகணும். அப்பதான் அவனும் உருப்படுவான்"**[34] என்றும்,

பள்ளிக்கூடத்தை அவர் ஒரு குருகுலமாக நினைத்துச் செயல்பட்டதால் **"முதியோர் கல்வித்திட்டத்தை, அரசாங்கம் தொடங்குவதற்கு முன்னதாகவே, ராப் பள்ளிக்கூடத்தை ஒரு ஹரிக்கேன் விளக்கின் முன்னணியில் நடத்தி 'கைநாட்டுகளை' அண்ணாவி, ஒங்க கையெழுத்து, நல்லா இல்லியே' என்று உரிமையோடு செல்லமாகச் சொல்கிற அளவுக்கு உழைத்தார்"**[35] என்னும் அளவிற்கு ஆசிரியர் சு.சமுத்திரம் 'ஆசிரியர் அண்ணாவி' கதைமாந்தரைப் படைத்துள்ளார்.

### முதியோர் கல்வி

'ஆசிரியர் அண்ணாவி' எனும் கதையில் ஆசிரியர் சு.சமுத்திரம் முதியோர் கல்வி அவசியம் என்பதையும் கூறியுள்ளார்.

அனைவருக்கும் கல்வி அவசியம் என்பதையும் கல்லாதவன் கல்லுக்குச் சமம் என்பது போல் இன்றைய சமுதாயத்திற்கு முதியோர் கல்வித் திட்டம் அவசியம் என்பதை 'ஆசிரியர் அண்ணாவி' மூலம் படைத்துள்ளார் ஆசிரியர் சு.சமுத்திரம்.

**ஆசிரியர் - மாணவன் உறவு**

'ஒரே ஒரு ரோஜா' என்னும் கதையில் ஆசிரியர்-மாணவன் உறவு நல்ல நிலையில் அமைந்துள்ளதைக் காட்டியுள்ளார்.

கணக்கு ஆசிரியர் ஒருநாள் வகுப்பறையில் கணக்கு ஒன்று போட்டு வட்டியைக் கண்டுபிடிக்கச் சொன்னார். சுப்பையா கணக்குப் போட்டு காட்டினான். விடை சரியாக இருந்தது. ஆனால் அவன் போட்ட வகை சரியில்லை என்றும், நான் போட்ட வகையில் ஏன்டா போடவில்லை என்றும் பாடம் நடத்தும்போது என்ன பண்ணுன என்றும் கேட்டார். அதற்குச் சுப்பையா **"நான் வர்லே ஸார். தம்பி இறந்ததுல** அம்மா **படுத்த படுக்கையா கிடக்காங்க ...** அக்காள், **சோறு பொங்குனா ... நான் தண்ணி பாய்ச்சிப் போயிட்டேன். வட்டி 136 ரூபாய் சரிதானே ஸார் ...?**

**கணக்காசிரியர் அதிர்ந்து போனார். அவர் சொல்லிக் கொடுத்த வகையைவிட, இவன் போட்ட வகை நல்லாதான் இருக்கு!"**[36] என சுப்பையாவின் அறிவுக் கூர்மையை நினைத்து கணக்காசிரியர் அசந்து போனார். இன்றைய காலகட்டத்தில் தினமும் பள்ளிக்கூடம் செல்கின்றவர்கள்கூட சரியாகப் படிப்பதில்லை என்பதையும் பள்ளிக்கூடம் செல்லாமலே ஒழுக்கமாக இருப்பதையும் சுப்பையா மூலம் ஆசிரியர் சு.சமுத்திரம் காட்டியுள்ளார்.

**காதல்**

காதலைப் பற்றிப் பேசாத கவிஞரும் இல்லை; கதை ஆசிரியரும் இல்லை; மக்களும் இல்லை. காதல் சுகமானது. உண்மையானது.

'மாதர் காதல்' (தொல். 2:232)

என்கிறது தொல்காப்பியம்.

காதலைப் பற்றி பாரதி,

**"காதல் காதல் காதல்**
**காதல் போயின் காதல் போயிற்**
**சாதல் சாதல் சாதல்"[37]**

என்று கூறியுள்ளார் பாரதியார்.

**"தன்னை மறக்கும் நிலையில் ஏற்படும் முதலாவது அனுபவம் அல்லது உணர்ச்சி காதலாகும். தன்னார்வம் அழிந்து பிறர் பொருட்டு எண்ணும் எண்ணமே காதலால் அத்தகு காதல் தூயது"[38]** என்கிறார் ஈ.கோ.பாஸ்கரதாஸ்.

**"காதல் இயற்கையானது. கவிக்கோ அப்துல் ரகுமான் 'காதல் செய்யப்படுவதில்லை. ஏற்படுவது. ஒரு பூவைப் போல தானே மலர்வது. காதலுக்கு நாம் கட்டளையிட முடியாது. அது வா என்றால் வராது. போ என்றால் போகாது. காதல் தான் நமக்குக் கட்டளையிடுகிறது. நாம் எல்லோரும் அதற்குக் கீழ்படிகிறோம். ஏனெனில் காதல் கடவுளின் அரசாட்சி என்று கூறுகிறார்."[39]** காதலைப் பற்றி முன்னோர் 'கண்டதும் காதல். கொண்டதே கோலம்' என்பார்கள். 'காதலுக்கு கண் இல்லை' என்பார்கள்.

இன்றைய சமுதாயத்தில் இளைஞர்களிடத்தில் காதல் என்ற எண்ணம் இளம்பருவத்தில் தோன்றக்கூடிய ஒரு வியாதி போன்றதாகும். அதுவே வாழ்க்கையல்ல. வாழ்க்கையின் ஒரு பகுதிதான்.

20.1.1994இல் வெளிவந்த குமுதம் இதழில் எழுத்தாளர் இந்துமதி நேரில் சு.சமுத்திரத்தைச் சந்தித்து உரையாடினார் அப்போது,

**இந்துமதி : காதலுக்கு நீங்கள் ஏன் முக்கியத்துவம் கொடுப்பதில்லை?**

**சு.சமுத்திரம் : காதலே வாழ்க்கை அல்ல. வாழ்க்கையின் ஒரு பகுதிதான் காதல். அதோடு அன்றாடங் காய்ச்சிகளின் பிரச்சனைகளில் செக்ஸ் அல்லது கற்பழிப்பு (அ) காதல் என்ற உப்பைப் போட்டு வாசகர்களைச் சுண்டி இழுக்கும் தந்திரத்தை நான் கையாளுவதில்லை. என்னுடைய எழுத்து பத்தியச் சாப்பாடு. மேலும் காதலைப் பற்றி எழுத உங்களைப் போன்ற எழுத்தாளர்கள் இருக்கும்போது, நான் ஏன் குட்டையைக் குழப்ப வேண்டும்”[40]** என கூறியுள்ளார்.

ஆசிரியர் சு.சமுத்திரம் தான் எழுதிய சிறுகதைகளில் காதல் கதைகளும் படைத்துள்ளார். ‘அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா’ என்ற கதையில் அமுதாவும் சண்முகமும் காதலர்கள். ஒரே ஊரைச் சார்ந்தவர்கள். இருவர் மனம் ஒத்துப் போகக் கூடிய நிலையில், உறவுக்காரர்கள், அரசியல்வாதிகள் தலைமையில் திருமணம் நடக்க வேண்டும் என்கிறார்கள். இதில் இருவேறு கருத்துக்கள் நிலவுகிறது. இவர்கள் திருமணம் தடைபடுகிறது.

"இருதரப்பும் ஒருவாறு கலைந்து, வெளியேறிற்று, அமுதாவும், சண்முகமும் அழுதுகொண்டே பிரிந்தார்கள். திருமணம் நின்றுபோன வெறுப்பில் சண்முகம் ராணுவத்தில் சேர்ந்து காஷ்மீருக்குப் போய்விட்டான். அவன் பிரிவில், அமுதா அரையுருவாளாள். இரு தரப்பினரும் தங்கள் தன்மானத்தைத் தலைவர்களோடு ஐக்கியப்படுத்தி, தீராப் பகை கொண்டனர்.

உறவு, பகையாக மாறிய ஒரு மாதத்திற்குள் எல்லாப் பத்திரிகைகளும் ஒரு செய்தியைக் கொட்டை எழுத்தில் வெளியிட்டன. செய்தி இதுதான்சு

வேளாண்மைக் கட்சித் தலைவர் வெண்தாமரை மகனுக்கும், நல்லார் கட்சித் தலைவர் நாராயணன் மகளுக்கும் சென்னையில் திருமணம்; தலைவர்கள் வாழ்த்து"[41]

இந்தக் கதையில் காதலர்களின் காதல் வெற்றி பெற்றாலும் இருவரும் ஒன்று சேராமல் வெற்றி பெறாத காதலாகப் படைத்துள்ளார்.

உறவு முறையில் ஏற்படக்கூடிய காதல் சில சமயம் நிறைவேறும், சில சமயம் அது வெற்றி பெறாமல் போய்விடும். நல்ல நிலையில் இரு குடும்பமும் இருக்கும்போது வெற்றி பெறும். அதில் ஏதாவது ஒரு குடும்பம் சற்றுப் பொருளாதாரத்தில் தாழ்ந்தாலும் அந்தக் காதல் நிறைவேறாக் காதலாகப் போய்விடும். அப்படிப்பட்ட காதல் 'உறவுக்கு அப்பால்' என்னும் கதையில் வித்யா, ரவியின் அம்மாவுக்கு அண்ணன் மகள். வித்யா குடும்பம் நல்ல நிலையில் இருக்கும்போது வலிய வந்து அவள் செல்லும் இடமெல்லாம் சென்று காதலித்துக் கொண்டிருந்தான். அவள்

தந்தை இறந்தவுடன், எங்கே நம் தலையில் கட்டி வைத்து விடுவார்களோ என்று வித்யாவுக்கு ரவியே மாப்பிள்ளை பார்க்கின்றான். இதற்கு வித்யா, "எங்க குடும்பம் நொடிச்சிப் போனது உண்மைதான். ஆனால், நீங்க மாப்பிள்ளை பார்த்து, நான் கட்டிக்கிற அளவுக்கு, மானம் நொடிச்சி போகலே ஸார் ...

பின் விளைவுகள் தெரியாம பேசாதே. இது உங்க அப்பா காலமில்ல

வித்யா, இப்போது அவனை நேருக்கு நேராகப் பார்த்தாள். அவனைப் பார்க்கப் பார்க்க, தன்மானம், அழுகையை மடக்கியது. இயலாமையை, எதிர்ப்பு விலக்கியது. அச்சத்தை, அஞ்சாமை விரட்டியது. மீண்டும் டில்லிப் பெண்ணானாள்.

பின் விளைவுகள் தெரியாம பேசல. முன் விளைவு தெரியாதவரால, ஏற்படுற பின்விளைவு தெரிந்துதான் பேசுறேன். நீங்க எல்லோருக்கும் வட்ட மேஜை மாநாடு போட்டு, எங்களுக்குக் கொடுக்கப் போற உதவித் தொகையை நிறுத்தப் போறீங்க ... அவ்வளவுதானே ...? பரவாயில்லை.

உறவுக்கு மனிதாபிமானமோ, மனிதாபிமானத்துக்கு உவோ தேவையில்லை. டில்லியில், என் அப்பாவின் நண்பர், ஒரு சர்தார்ஜி. நாங்கள் போகக்கூடாதுன்னு, கண்ணீர் விட்டு அழுதார். இதை எதுக்காகச் சொல்றேன்னா, மனிதாபிமானம், மதம், மொழி, மத்தப் பிணைப்புக்களைத் தாண்டியது. உறவின் பரிபாஷைகள் பொருளாதார அந்தஸ்தைப் பொறுத்தது. ஆனால், மனிதாபிமானம் பொருளாதார வேலிக்குள் அடங்காத கருணை வெள்ளம். என் அப்பாவுக்கு அப்படிப்பட்ட சில மனிதாபிமான

**அடிப்படையில், எனக்கு ஒரு வேலை கொடுக்க, அப்பவே அரசாங்கம் முன் வந்தது. நான்தான் உங்களைப் பார்க்காமல் இருக்க முடியாது என்பதற்காக, இங்கே குடும்பத்தைக் கூட்டி வந்தேன். இப்போ ... உங்களைப் பார்க்கக்கூடாது என்கிறதுக்காகவே பழையபடியும் டில்லிக்குப் போகப் போறோம். அங்கே வேலையில் சேரப் போறேன். தாங்க் யூ மிஸ்டர் ... ரவி, ... வரட்டுமா"[42]** என்று இந்தக் கதை மூலம் இன்றைய சமுதாயத்தில் உறவு முறைகள் பொருளாதாரத்தின் அடிப்படையில் தான் அமைகிறது என்பதை எடுத்துக்காட்டியுள்ளார். முதலில் காதலித்த பெண்ணைத் தானே அவளுக்கு மாப்பிள்ளை பார்க்கும் நிலையை இந்த கதையில் கதைமாந்தர்களாகப் படைத்துள்ளார்.

இல்லாதவர்கள் வீட்டுக் காதல் 'பட்டிக்காட்டு காதலப்பா கெட்டியான உளுவமப்பா' என்பதுபோல் மிகவும் உறுதியாக இருக்கும். 'நரம்புகயிறு' என்னும் கதையில் ஆசிரியர் கூலி வேலை செய்யும் தொழிலாளர்களிடம் ஏற்படும் காதல் எப்படிப்பட்டது என்பதையும் படைத்துள்ளார்.

தேசிங்கு கடலில் சென்று மீன்பிடிக்கக் கூடியவன். முதலாளி சொன்ன வேலையைச் செய்யாததால் அவனை மீன்பிடிக்கும் தொழிலில் இருந்து நிறுத்தி விடுகின்றார். வரும்பாவும் தேசிங்கும் காதலர்கள். நீ பிடிக்காத மீனு எனக்கு வேண்டாம் அய்யா, என்று கூறி அவளும் தொழிலுக்குப் போகவில்லை. இந்த மெட்ராஸ்ல யாரையும் யாரும் தள்ளி வைக்க முடியாது என்று சமாதானம் செய்கிறாள். **"தேசிங்கு கயிற்றைப் பிடித்தான். வடும்பா, பலகையைப் பிடித்தாள். இருவரையும், அந்த நரம்புக் கயிறு இணைந்தது"[43]**

இல்லாதவர்கள் காதல் எவ்வளவு உறுதியாக உள்ளது. கடைசியாக வெற்றியில் முடிந்தது. பொருளாதார அடிப்படையில் அமையும் காதல் வெற்றி பெறாது. அன்பின் அடிப்படையில் அமைந்த காதல் வெற்றி பெறும் என்கிறார்.

காதல் சுகமானது, காதலிப்பது துன்பமானது. 'காதல் என்பது தேன்கூடு அதைக் கட்டுவது என்பது பெரும்பாடு' என்ற கவிஞர் கண்ணதாசன் கூற்றுக்கிணங்க காதல் செய்து அதில் வெற்றி பெறுவது மிகவும் கடினமான ஒரு செயல் ஆகும்.

## தொழிலாளர் நலன்

'காண்பதெல்லாம் தொழிலாளி செய்தான் - அவன்
காணத் தகுந்தது வறுமையாம் - அவன்
சதுணர் தகுந்தது பொறுமையாம்'

என்பன புரட்சிக் கவிஞர் மனம் புழுங்கி வெளிப்பட்ட கவிதை அடிகள் இவை.

தொழிலாளர்கள் சமுதாயத்தின் முதுகெலும்பு போன்றவர்கள். அவர்கள் தான் சமுதாயத்தின் பொருளாதாரத் தலைவிதியை வகுப்பவர்கள்.

பாட்டாளி வர்க்கத்தின் நிலையைப் பாரதிதாசன் பாடியபோது எப்படி இருந்ததோ அதே நிலைதான் இன்றும் இருந்து வருகிறது.

மூலதனத்தைப் பணமாகப்
போடுகிறவன் முதலாளி!
மூலதனத்தை உழைப்பாகப்
போடுகிறவன் தொழிலாளி!

என்ற கூற்றுக்கிணங்க, இருவரும் சமபங்கு உற்பத்திக்கு மூலதனமாகப் போடுகிறார்கள். ஆனால் தொழிலாளி தனது உழைப்பின் முழுப் பலனை அடையமுடியவில்லை. அந்தப் பலனில் பெரும்பகுதி உழைக்காது வாழும் முதலாளிகளிடம் சென்று குவிகிறது.

ஆகவே பொருளாதார நிலையில் உந்தப்பட்டுத் தொழிலாளர்கள் குறைந்த ஊதியத்தில் முதலாளிகளிடத்தில் வேலைச் செய்ய வேண்டிய நிலை உள்ளது.

சமுதாயத்தில் முதலாளி - தொழிலாளி உறவு நன்றாக இருந்தால்தான் நாடு பொருளாதார வளர்ச்சியை நோக்கி முன்னேறும்.

**“பணக்காரனும் ஏழையும் சேர்ந்து தங்கள் உழைப்பை ஒன்றுபடுத்தித் தங்கள் கூட்டு உழைப்பினால் கிடைக்கும் லாபத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளும்படிச் செய்ய இயலும். மனித வர்க்கத்தின் பொதுநலத்திற்காக இதைச் செய்து முடித்தலே பொதுவுடைமைக் கொள்கையின் லட்சியம்”[44]**
காரல் மார்க்ஸ் கூறுவதாக மா.சிங்காரவேலன் கூறுகின்றார்

**“தொழிலாளி உழைப்பை முதலாளி திருடிக் கொள்கின்றான். ஆகவே அவன் முதலாளியாகின்றான் என்ற புரட்சிக் கருத்தையும் மார்க்ஸ் கூறுவதாக கோ.குலோத்துங்கன் கூறுகிறார்.”[45]**

எல்லா நிலைகளிலும் தாழ்ந்திருக்கும் தொழிலாளர்களது நலனைக் காக்க வேண்டியது சமுதாயத்தின் கடமையாகும். அவர்கள் உழைப்புக்கு ஏற்ற ஊதியம் வழங்க வேண்டியது முதலாளிகளின் கடமையாகும். அவர்கள் சொல்வது ஒன்று

செய்வது ஒன்றாகத்தான் செய்கின்றனர். அப்படிப்பட்டவர்களின் நிலையை சு.சமுத்திரம் 'சுகமாகிப் போன வெயில்' எனும் கதையில் "சூரியன் போய் ஒரு மணி நேரமாகுது ... எட்டு மணி டூட்டி போய் ரெண்டு மணியாவுது. அதனால நாங்க சிரிச்சு பேசினாலும் தப்பில்ல ... எங்களை இந்தப் பாடுபடுத்தும் உங்களையும், காண்டிராக்டர் மவராசனையும் திட்டிப் பேசினாலும் தப்பில்ல. நீங்க எங்களை தண்டங்களான்னு சொன்னாலும் தப்பில்ல ஏன்னா ... தண்டமாத்தான் வேலை பார்க்கோம்.

லட்சுமி ... ஒனக்கு வாய் நீளுது

என்ன ஸாரே பின்னே ... பீஸ் வேலைன்னு சொல்லி கூட்டி வந்தீங்க ... அப்படின்னா தினமும் இருபது இருபத்தஞ்சு ரூபாய் கிடைக்குமேன்னு நாங்களும் பத்து ரூபாய் பஸ் சார்ஜ் ங்கே வந்தோம். வந்த பிறகு, ஆணுக்கு 15 ரூபாய் ... பெண்ணுக்கு 10 ரூபாயின்னு சொல்லிட்டீங்க ... வேற வழியில்லாம நாங்களும் பொறுத்துக்கிட்டோம் ... ஏழு மணியாவுது ... இன்னும் விடியல. "[46]

சாலையில் உள்ள குழிகளை மூடுவதற்கு ஒரு கூலியும், சாலை போட ஒரு கூலியும் உண்டு. ஆனால் மேலதிகாரி சின்ன வேலை என்று கூப்பிட்டுவிட்டுப் பின்பு கூலியைக் குறைத்துத் தருவதை இதில் வலியுறுத்தியுள்ளார்.

### தொழிலாளர் ஒற்றுமை

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்பர். அதுபோல் தொழிலாளர்கள் ஒற்றுமையாக இருந்தால் எதையும் சாதிக்கலாம். மனித சக்தி தான் முதலானது. 'எக்குடி தோற்பினும்' என்ற கதையில் பணியிலுள்ள தொழிலாளி இறந்து விடுகின்றான்.

அதனால் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் போராட்டம் ஏற்படுகிறது. இதனால் பக்கத்து ஊரில் உள்ளவர்களை அழைத்து வந்து தொழில் நடத்த முன்வருகின்றார்கள். ஆனால் அவர்கள் **“அப்போ பிரச்சினை ... நாம் கருங்காலிகளாகி வசதிகளைப் பெருக்கிக்கமுமா அல்லது நிர்வாகத்தின் கவனக்குறைவால் இறந்த தொழிலாளிக்காகப் போராடும் நம்வர்க்கத்துக்குத் துணையாய் நிற்கணுமா என்பதுதான். நாம் அங்கே போய் ... அவர்கள் இங்கே வந்தால் ஒரு தொழிலாளர் கூட்டத்தின் பிரச்சினை முடிந்து, இன்னொரு கூட்டத் தொழிலாளர் பிரச்சினை துவங்கும்.**

**புராஜெக்ட் தொழிலாளர் ... சகவாச தோசத்தாலோ என்னவோ ... பூர்ஷ்வா மனோபாவம் கொண்டு நம்மிடம் பாராமுகம் காட்டியது உண்மைதான் ... ஆனால் இப்போது அவர்கள் தங்களைத் தாங்களே அடையாளம் காணத் துவங்கி விட்டார்கள் ... இந்த சமயத்தில் ... எக்குடி தோற்பினும் தோற்பது நின்குடி என்பதை மனதில் வைத்து ... நாங்கள் இப்போதும் எப்போதும் உங்கள் சோதர்கள் என்று சொல்லாமல் அதைச் செய்து காட்ட வேண்டுமா இல்லை”**[47] என்று தொழிலாளர்கள் ஒற்றுமையை ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் சமுதாயத்திற்குத் தனது கதை மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். உழைக்கும் மக்கள் முன்னேற வேண்டுமானால் அவர்களிடையே ஒற்றுமை நிலவ வேண்டும் என்பதையும் வற்புறுத்துகிறார்.

**அலுவலகம்**

பொதுமக்களோடு நேரடித் தொடர்புடைய காவல்துறை, மருத்துவமனை, வருவாய்த்துறை ஆகிய அரசு அமைப்புகளின் பொறுப்பற்ற போக்கினை சு.சமுத்திரம் படைத்துக் காட்டியுள்ளார்.

அரசு அலுவலகங்களில் பணிபுரியும் ஊழியர்கள், மக்களுக்குச் சேவை செய்வது கடமையாகும். அவர்கள் அலுவலகப் பணத்தைத் தப்பான வழியில் பயன்படுத்துவது, தனது பணியைச் சரியாகச் செய்யாமலும் இருப்பவர்களும் உண்டு. அலுவலக ஊழியர்கள் தங்கள் கடமையை உணர்ந்து செயல்பட வேண்டும் என்பது மக்களின் எதிர்பார்ப்பு. சு.சமுத்திரம் ஓர் அரசு அலுவலராக இருந்ததால் சில ஊழியர்களின் பொறுப்பற்ற போக்கினை நேரில் அறிந்தவராகிறார்.

'பண்டாரம் படுத்தும் பாடு' எனும் கதையில் வரும் பண்டாரம் அலுவலகப் பணத்தை எடுத்து வட்டிக்கு விடுவது வழக்கம். அவனைப் பற்றி பலரும் புகார் கடிதம் எழுதியதால் ஆய்வுக்கு அதிகாரி வருகின்றார். அவர் அவனுடைய பணப்பையைச் சோதனை செய்கிறார். அப்போது **"நீங்க எப்படி ஸார் எண்ணலாம்? ... என்னை எண்ணச் சொல்லி இருக்கணும் ... நீங்களே ... எண்ணி எடுத்துக்கிட்டால் நானா பொறுப்பு? நல்லவனுக்குக் காலமில்லங்கறது சரிதான் ...**

**அட்மினிஸ்டிரேட்டிவ் ஆபிசர் அதிர்ந்து போனார். அலுவலக ஊழியர்கள் பண்டாரத்தை மனதுக்குள் வேண்டா வெறுப்பாகப் பாராட்டினார்கள். கிருபாகரனுக்குக் கிறுக்குப் பிடிக்கும் போலிக்கும் போலிருந்தது. தேஷ்முக்கின் கண்களில் நீர் தேங்கிவிட்டது. கொட்ட வேண்டியதுதான் பாக்கி.**

**விஷயம், டைரக்டருக்கு எஸ்.டி.டி.யில் சொல்லப்பட்டது. அவரிடம் பேசிக் கொண்டிருந்த தேஷ்முக்கின் கண்ணீர் டெலிபோனை நனைத்தது.**

பண்டாரத்தை ஒன்றும் செய்ய முடியவில்லை. பணத்தை செக் பண்ணப்போகும் அதிகாரிகள் பணத்தைத் தொடக்கூடாது. சம்மந்தப்பட்ட நபரை, பணத்தை எண்ணிக் காட்டும்படி கூற வேண்டும் என்று டைரக்டரால் சர்க்குலர்தான் போட முடிந்தது."[48]

இதுபோன்று அலுவலகத்தில் நடக்கும் ஏமாற்றுவேலையை ஆசிரியர் சு.சமுத்திரம் தனது கதைக்குக் கருவாக்கி அதன் மூலம் மக்களை விழிப்புணர்வு அடைய செய்திருக்கின்றார்.

தொழிலாளியைக் காப்பாற்றும் அதிகாரிகளையே சமயத்தில் தொழிலாளர்கள் சிக்க வைப்பதும் உண்டு. 'ஒரு அமாவாசை பௌர்ணமியாகிறது' எனும் கதையில் சந்திரன் அலுவலக மேலாளராக இருக்கின்றான். அவனிடம் வேலைபார்க்கும் உமா அலுவலகப் பணத்தைக் கையாடல் செய்கின்றாள். அவளைப் பாவம் என்று எண்ணிக் காப்பாற்றுகின்றான். அப்போது உமா, "சத்யமாய் சொல்றேன் ஸார் ... ஏதோ போதாத காலம் அதை மட்டும் செய்துட்டேன். அதுக்கு முன்னாலயும் செய்யல ... பின்னாலயும் செய்யல ... நான் சொல்றது பொய்யின்னா, என் நாக்கு அழுகிடும். இனிமேல் உங்களுக்குத் துரோகம் செய்தாலோ அல்லது செய்ததை மறைச்சாலோ, நான் நாய் மாதிரி வீதிவீதியாய் திரிவேன் ... இது சத்யம் ஸார்"[49] கூறிய உமாவை மன்னித்து மீண்டும் பணியில் அனுமதித்தார். ஆனால் அவளே மீண்டும் தான் முதலில் செய்த தவற்றையே செய்து சந்திரன் பற்றி மேலதிகாரிக்குப் புகார் எழுதி அவனையே தப்பு செய்தவனாக கூறியுள்ளார். அப்போது சந்திரன், "கவலைப்படாதீங்க ... எனக்கு ஒன்றும் வராது ... உமாதான் நாக்கு அழுகி வீதி வீதியாய் நாய் மாதிரி திரியப் போறாள்.

ஏன்னா பொல்லாதவங்க, தங்களுக்குப் போடுற சாபம் பலிக்காமல் போகாது. நான் இப்போ அவளுக்காகத்தான் வருத்தப்படுகின்றேன்"[50] என்கிறான்.

இன்றைய சமுதாயத்தில் பொருளாதாரப் பற்றாக்குறையில் அலுவலகத்தில் ஏற்படும் சிக்கல்களை மேற்படி மேற்கோளால் நிறுவலாம்.

இவரது படைப்புகளுக்கு அலுவலக நடைமுறைகளும் கதைக்கருவாக அமைந்துள்ளன. அரசு ஊழியர்கள் சேவை மனப்பான்மையுடனும் பணியில் ஒழுக்கத்துடனும் தொண்டாற்றினால் நாடு நலம் பெறும் என்னும் உயரிய நோக்கத்தை இக்கதைகளில் காணமுடிகிறது.

**மருத்துவம்**

மருத்துவமனை உயிர்காக்கும் ஓர் புனித நிறுவனமாகும். மருத்துவர்கள் நோயாளிகளிடம் பரிவுடனும் மனித நேயத்துடனும் நடந்து கொள்ள வேண்டும். மருத்துவத்தைப் பற்றி ஆசிரியர் தம் கதைகளில் எடுத்துக்காட்டத் தவறவில்லை. பொதுவாகக் கிராமப்புறங்களில் மருத்துவர்கள் பணி செய்ய மறுப்பார்கள். அங்கு நாட்டு வைத்தியர் தான் இருப்பார்கள். அல்லது ஆசிரியர்கள்தான் விவரம் தெரிந்தவர்கள். அவர்கள் கூறும் மருந்தைச் சாப்பிடுவார்கள்.

'ஆசிரியர் அண்ணாவி' எனும் கதையில் ஆசிரியர் நாட்டு வைத்திய முறையைச் சொல்லி மருந்தாக "காச்சின இரும்புல தேனைவிட்டு, இஞ்சிச் சாறுல போட்டுக் குடிக்கச் சொல்லுடா. அதுக்கும் குணமாகலன்னா, ஆஸ்பத்திரியில போயி எக்ஸ்ரே எடு. நாளைக்கழிச்சி உன் வீட்டுக்கு வருவேன்.

**உன் வீட்டுக்காரிக்கு வயித்து வலி வந்துதோ படுவா உன்ன பிச்சுபிடுவேன்”**[51] சு.சமுத்திரம் இன்றைய காலகட்டத்தில் ஆங்கில முறை வைத்தியத்தைக் காட்டிலும், சித்த வைத்திய முறை நல்லது, பக்க விளைவுகள் இல்லை என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

**காவல்துறை**

காவல்துறையினர் நாட்டின் சட்டம், ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டியவர்கள். இவர்கள் கடமை தவறாதவர்களாக இருந்தால் நாட்டில், கொலை, கொள்ளை, கற்பழிப்பு, கடத்தல் போன்ற சமூக விரோத, தீய செயல்கள் எதுவும் நடக்காது. அவர்கள் இன்றைய சூழலில் அப்படி இருக்கவும் முடியவில்லை. காவல் துறையில் உள்ள அதிகாரி முதல் கடைநிலை ஊழிர் வரை, பலர் பொய் வழக்குப் போடுவதும், லஞ்சம் வாங்குவதும் அவர்களுடைய குலத்தொழிலாகிவிட்டது. சம்பவத்தின் உண்மை நிலை தெரிந்தும் அவர்களின் சுயநலத்திற்காக அதை மறைத்துச் செயல்படுவார்கள்.

ஆசிரியர் அவர்கள் காவல்துறையினரின், ஊழல், லஞ்ச லாவண்யம், பொய் வழக்குகள் போன்ற செயல்களைத் தனது கதைக்குக் கருவாகப் படைத்துள்ளார்.

‘முடியாத செய்தி’ எனும் கதையில் சிதம்பர் மிகவும் ஏழ்மையானவன். அவன் மலை அடிவாரத்தில் சிற்றுண்டிக்கடை வைத்துள்ளான். மலைக்கு விறகு பொறுக்க வரும் மக்கள் காசு கொடுத்து உணவைப் பெற்றுக் கொள்வார்கள். ஆனால் காவலர்கள் (போலீஸ்காரர்கள்) பணம் எதுவும் தராமலே பல நாட்களாகச் சாப்பிட்டுச் செல்வார்கள். அதனால் கோபம் கொண்ட

சிதம்பரம் இன்றைக்கு எப்படியும் கேட்டுவிட வேண்டும் என்ற எண்ணத்தில் **"ஸார் ... காச ... வச்சிட்டு ... நடங்க இருவரும் அவனைக் கோபத்துடன் பார்த்தபோது சிதம்பரம், சீறினான்.**

**இப்ப சாப்பிட்ட காசு மட்டுமில்ல ... இதுவரைக்கும் சாப்பிட்ட கணக்க தீர்க்காமல் ... ஒரு அடிகூட நகரக்கூடாது ... யாருய்யா திருட்டுச் சோம்பேறி ... ஒரு மாசமா என்னை மிரட்டி ஓசில சாப்பிட்ட நீங்க திருட்டு சோம்பேறியா ... இல்ல, வயித்துக்காவ ... மலைக்குப் போன இந்தப் பையனா ... இவனைப் பிடிக்க ... ஒங்களுக்கு என்னய்யா யோக்கியத இருக்கு? சரிசரி ... காச வையுங்க இல்லன்னா... தொப்பியக் கழட்டுவேன்"**[52] என இலவசமாகச் சாப்பிட்டுச் செல்லும் காவலர்களைத் தட்டிக் கேட்கும் உரிமை தனிமனிதனுக்கும் உள்ளது என்ற எண்ணத்தில் கடைக்காரர் சீற்றம் கொள்வதைப் படைத்துக் காட்டியுள்ளார்.

## பொய் வழக்கு

காவல் துறையினர் சட்டம், ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டியவர்கள். அவர்கள் நடுநிலைமை தவறாமல் இருந்தால்தான் நீதி நிலைபெற்று நாடு செழிப்பாக இருக்கும். ஆனால் இவர்கள் 'வேலியே பயிரை மேய்ந்தது' போல், காவல் காக்க வேண்டிய இவர்கள், பொய்மைக்குத் துணை போகக் கூடியவர்களாக மாறிவிடுகின்றனர்.

ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் காவல்துறையில் உள்ள நிகழ்வுகளையும் கதைக்குக் கருவாகப் படைத்துள்ளார். 'திரிசங்கு நரகம்' என்னும் கதையில் உண்மையான கொலையாளி தெரிந்தும் அவன் மீது நடவடிக்கை எடுக்காமல், கொலையைப் பலபேர்

பார்த்திருந்தும், அவர்களையெல்லாம் விட்டுவிட்டு, ஒன்றும் இல்லாத ஏழையைப் பிடித்துக் கொண்டு 'உண்மையைச் சொல்' என்று காவலர்கள் அடிக்கின்றனர். அடி பொறுக்காமல் இருப்பதைவிட இறப்பது மேல் என்ற முடிவுக்கு வந்தவன் 'என் உயிரைக் கொடுத்தாலும் கொடுப்பேனே தவிர இனிமேல் தலைமறைய மாட்டேன் எசமான்' என்று சொல்லி, கடைக்குச் சென்று வருகின்றேன் என்றவன் இப்போது **"குப்புசாமி தூக்கில் தொங்கிக் கொண்டிருந்தான். தலை, எதையும் மறக்காமல், எதிலும் மறைக்காமல், கொடுத்த வாக்கை நிறைவேற்றிய திருப்தியில் கயிற்றுச் சுருக்குக்கு மேலே நிமிர்ந்து நின்றது."**[53]

சமுதாயத்தில் கொலைகாரன், வசதி படைத்ததால் உண்மை குற்றவாளிகளை விட்டுவிட்டு, ஏழ்மையான நிலையில் உள்ள ஏழைகளை துன்புறுத்தி, தற்கொலை செய்து கொள்ள காரணமாக விளங்குகின்றனர்.

சமுதாயத்தில் ஒரு குடும்பத்தில் உள்ளவர்கள் அனைவரும் நல்லவர்கள் என்று சொல்லவும் முடியாது எதிர்பார்க்கவும் முடியாது. அதுபோன்று காவலர்கள் அனைவரும் மோசமானவர்கள் அல்ல, அதிலும் நல்லவர்களும் உண்டு, அப்படிப்பட்ட நல்ல உள்ளங்களையும் ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் 'பிணம் தின்னும் சாஸ்திரங்கள்' எனும் கதையில் காட்டியுள்ளார்.

தாயம்மா ஒடுக்கப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த பெண். அவள் மகள் வள்ளி வயலில் வேலை பார்த்துவிட்டு வீடு திரும்பும்போது மேல்ஜாதி சீமைச்சாமி அவளிடம் தகாத முறையில் நடக்கின்றான். காவல் ஆய்வாளர், அவனைக் கைது செய்து சிறையில் அடைக்கின்றான். அப்போது அவன் கொடுக்கும்

ரூபாயையும் வாங்கவில்லை. இதையெல்லாம் தெரிந்து கொண்ட தாயம்மாவும் வள்ளியும் ஆய்வாளரைப் பார்த்து **"நீங்க மட்டும் இல்லாட்டா, இந்நேரம் நானும், என் மகளும் போனயிடம் புல்லுமுளைச்சிருக்கும். என் ஆயுள்ள எங்கள மாதிரி ஏழை பாழைய அடிக்கற போலிசத்தான் பாத்திருக்கேன். உங்களை மாதிரி அணைக்கிற தரும பிரபுவ பார்க்கலை எசமான் பார்க்கலை"**[54]

குற்றவாளி பணம் கொடுத்தும் அதைப் பெற்றுக் கொள்ளாமல் உண்மையின் தன்மையறிந்து ஆதரவற்ற ஏழை மக்களுக்கு உதவும் மனப்பான்மை உள்ளவராக உள்ளார். நடுநிலை தவறாமல் நீதியை நிலைநிறுத்த வேண்டிய பொறுப்பு அவர்களுக்குண்டு என்பதையும் இன்றைய நிலையில் காவல் துறையின் பொறுப்பற்ற போக்கு பல சமூகக் கொடுமைகளுக்குக் காரணமாக அமைகின்றது என்று ஆசிரியர் காட்டுகிறார்.

**அரசியல்வாதிகள்**

சமுதாயத்தில் தனிநபர் வழிபாடு, கட்சி வெறி, வர்க்கப் பற்று ஆகியவை தலைவிரித்து ஆடுகின்றன என்பதை ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்களின் அரசியல்வாதிகள் சார்ந்த கதைகளில் காணலாம்.

பேச்சுத் திறமையையும், பொய்யையும், ஏமாற்று வேலை செய்வதையும் மூலதனமாகக் கொண்டு முன்னேறுபவர்கள் இவர்கள்.

இன்றைய அரசியல்வாதிகள் பொதுமக்கள் நலன்களை முன்னிறுத்தாது, தன் சுயநலத்திற்காக அந்த இயக்கத்தை நடத்திச் செல்கின்றனர். அரசியல்வாதியைப் பற்றி கவிஞர் சூரியதாஸ் தனது கவிதையில் கூறும்போது,

“இந்தியா
ஒரு பருவ காற்று நாடு
அமைச்சர்
என்ன செய்வார்?
காற்றுள்ள போதே
தூற்றிக் கொள்கின்றார் - என்றும்
எங்களால் மனிதர்களை
மந்திரிகளாக்க முடிகிறது - ஆனால்
மந்திரிகளைத்தான்
மனிதர்களாக்க முடிவதில்லை”

என்கிறார்.

இன்றைய அரசியல்வாதிகளின் நிலை இப்படித்தான் உள்ளது. குறிப்பாக நமது நாட்டின் அரசியல் இந்த நிலையில்தான் உள்ளது. ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் இன்றைய சமுதாயத்தில் நிகழக்கூடிய அரசியல் செய்திகளையும் தனது கதைக்குக் கருவாகப் படைத்துள்ளார்.

மாணவர்கள் கல்லூரியில் படிக்கும்போதே அரசியலில் அடிவைக்கத் தொடங்கி விடுகின்றனர். இதனால் அந்த மாணவனின் படிப்பு முடிக்கப்படாமல் நின்று விடுகின்றது. அதிகம் படித்தவர்கள் அரசியலுக்குத் தேவையில்லை என்ற கொள்கையை அவன் கடைபிடித்து விடுகின்றான். ஆசிரியர் அவர்கள் ‘சனிக்கிழமை’ எனும் கதையில் கல்லூரி மாணவன் அரசியலில் ஈடுபடுவதை, “இந்த பாருப்பா. நீ அரசியல் மேடையில் பேசுறது எனக்குத் தெரியும். இப்போ, ஒரு குறிப்பிட்ட கட்சிக்காரர்கள், உன்னைச் சுற்றிவர்றதும் தெரியும்.

ஒன்றை மட்டும் நினைச்சுக்கோ. நீ மாணவனாய் இருக்கிற வரைக்கும் தான் இந்தப் பயல்கள் உன்கிட்ட வருவாங்க, உன் மூலம் மாணவர்களை, தங்கள் அரசியல் சுயநலத்துக்குப் பயன்படுத்தப் பார்க்கிறாங்க. நீ எப்போ கல்லூரியில் இருந்து வெளியேறுகிறாயோ, அப்பவே ஒன்னை வள்ளுவர் சொல்ற மாதிரி, தலையிலிருந்து கழிந்த முடிமாதிரி நினைப்பாங்க. இன்னும் ஒண்ணு ... நீ புத்திசாலிப்பையன்; தனியாய் இருந்தால் நல்ல பையன். வாழ்க்கை கல்லூரி இல்ல, நீ சந்திக்கப் போற சகாக்கள் மாணவர்கள் மாதிரி, வெள்ளையுள்ளமாய்ப் பழக மாட்டாங்க. அபீஸர், கல்லூரி முதல்வர் மாதிரி இருக்க மாட்டார். லைக் யுவர் பிரின்ஸ்பால். இதைப் புரிஞ்சிக்கிட்டு, இப்பவே அரசியலில் கலக்காமல் படிக்கணுமுன்னா படி ... அப்புறம் உன் இஷ்டம். நான் சொல்றது புரியும்னு நினைக்கிறேன்”[55] என்பதன் வாயிலாக மாணவர்கள் அரசியலில் ஈடுபடக் கூடாது என்றும் அதனால் தன்னுடைய படிப்பு இழப்பு ஏற்படும், சமுதாயம் அவனைத் தள்ளி வைத்து விடும் என்றும், அரசியல்வாதிகள் எப்பொழுதும் தன் சுயநலத்திற்காகத்தான் பயன்படுத்துவார்கள் என்றும் கல்லூரி முதல்வர் மூலம் கூறுகின்றார்.

சு.சமுத்திரம் அவர்கள் தான் முதன்முதலில் எழுதிய சிறுகதைகளில் அரசியலில் எதிரும் புதிருமாக இருக்கும் தலைவர்கள் பற்றியும், உறவுக்காரர்கள் அரசியல் காரணமாக எதிரும் புதிருமாக மாறியுள்ளதையும் ‘அங்கே கல்யாணம் இங்கே கலாட்டா’ என்னும் கதையின் கருவாகப் படைத்துள்ளார்.

அமுதாவும் சண்முகமும் உயிருக்குயிராகக் காதலித்தவர்கள், திருமணமும் நிச்சயிக்கப்பட்டது. ஆனால் எந்தக் கட்சித் தலைவர்

தலைமையில் திருமணம் என்ற கேள்வியால் திருமணம் தடைபட்டது. "இரு தரப்பும் ஒருவாறு கலைந்து, வெளியேறிற்று. அமுதாவும் சண்முகமும் அழுது கொண்டே பிரிந்தார்கள். திருமணம் நின்றுபோன வெறுப்பில் சண்முகம் ராணுவத்தில் சேர்ந்து, காஷ்மீருக்குப் போய்விட்டான். அவன் பிரிவில் அமுதா அரையுருவானாள். இரு தரப்பினரும் தன்மானத்தைத் தலைவர்களோடு ஐக்கியப்படுத்தி, தீராப் பகை கொண்டனர்.

உறவு, பகையாக மாறிய ஒரு மாதத்திற்குள் எல்லாப் பத்திரிகைகளும் ஒரு செய்தியைக் கொட்டை எழுத்தில் வெளியிட்டன. செய்தி இதுதான்:

வேளாண்மைக் கட்சித் தலைவர் வெண்தாமரை மகனுக்கும், நல்லார் கட்சித் தலைவர் நாராயணன் மகளுக்கும் சென்னையில் திருமணம்; தலைவர்கள் வாழ்த்து"[56] என்பதிலிருந்து அரசியல்வாதிகளால் காதலர்கள் குடும்பங்கள் பகைவர்களாக மாறியதையும், ஏமாளி மகள்களும் சமுதாயத்தில் உள்ளனர். அவர்கள் மாற வேண்டும் என்பதை வெளிப்படுத்துகிறார்.

சு.சமுத்திரம் அவர்கள் தனது 'எதிர்பரிமாணம்' என்ற கதையில் கி.பி. 2140 ஆண்டுக்கு முன்னோக்கிச் சென்று, உலகம் இதுவரை கேள்விப்படாத வியாதி ஒன்று தமிழகத்தில் பரவியுள்ளதாகவும் அதுவும் குறிப்பாக உலகத்தில் உள்ள தமிழர்களுக்கு மட்டும்தான் உள்ளதாகவும் கூறுகிறார். அரசியல்வாதிகளின் காலில் விழுந்து வணங்குவதால், முதுகெலும்பில்லாமல் தவழும் தமிழர்களின் நிலையைக் கூறியுள்ளார்.

“இருபதாம் நூற்றாண்டின் இறுதியில், அதாவது நூற்றைம்பது வருடங்களுக்கு முன்னால், தமிழர் பண்பாடு தனிநபர் வழிபாடாக, துதிப்பாடலாகவே இருந்திருக்கிறது. கவிதைகள், தலைவர்களின் கால்களில் சரஞ்சரமாய்க் கொட்டப்பட்டன. ஒருவனை வீரனாக்க, முப்பது பேரைப் பேடியாக்கும் சினிமாத்தனம் இருந்திருக்கிறது. தலைவர் காலில் குனிந்து விழுந்தால் நேரமாகும். அவருக்கும் கோபமாகும் என்று தமிழர்கள், தொப்பென்று நெடுஞ்சாண்கிடையாக விழுந்ததாகப் பத்திரிகைத் தகவல்கள் கூறுகின்றன. இன்று தவழ்ந்தபடியே உயிர்வாழும் இவர்களின் மூதாதையர்களின் வாழ்க்கை முறை பற்றி விசாரித்தபோது, அவர்கள் அமைச்சர்களாகவோ, அரசியல்வாதிகளாகவோ, அரசு அதிகாரிகளாகவோ அல்லது உயர் போலீஸ் அதிகாரிகளாகவோ இருந்திருக்கிறார்கள் என்பது தெரிய வருகிறது. அப்படி அவர்கள் இருந்த சமயத்தில், தங்கள் மூளையைக் கொஞ்சமும் செலவு செய்யாமல், நெடுஞ்சாண் கிடையாகக் காலில் விழுந்து விழுந்தே ‘வளர்ச்சி’ பெற்றிருக்கிறார்கள். எவர் அதிக நேரம் தன் தலைமை, தலைவரின் கால்மாட்டில் போடுகிறாரோ, அவரே வி.ஐ.பி.க்களின் வி.வி.ஐ.பி.யாக வெற்றி மேல் வெற்றி பெற்றிருக்கிறார். இதற்கு கட்-அவுட் ஃபாஸில்களும் ஆதாரம்”[57] இன்றைய சமுதாயத்தில் தலைவர்கள் காலில் யார் விழுந்து ஆசிர்வாதம் பெறுகின்றார்களோ அவர்களுக்கு அமைச்சர் பதவி, பதவி உயர்வு கிடைப்பதையும், அதனால் எதிர்காலத்தில் தமிழர் நிலை கேள்விக்குறியாகி விடும் என்பதையும் விளக்கியுள்ளார்.

இதைத் தடுத்து நிறுத்தவும், தவழும் தமிழர்களைக் காப்பாற்றவும் என்ன செய்ய வேண்டும் என்றால், **“காலில் விழும் தலைகளை ஏற்றுக் கொள்வோரிடம் ‘கயவர்தான், தங்களைத் தாங்களே வியப்பார்கள்’ என்று வள்ளுவர் சொன்ன வாசகத்தை, காதில் குத்தும்படி சொல்ல வேண்டும். ‘கன்னித் தமிழ்நாட்டின் கயவாளியே ... எம் மக்களை, காலில் விழ வைத்துச் சிரிக்கிறியே’ என்று ஒரு பாட்டை எழுதி, அதை அந்தக் கால ஏ.ஆர்.ரஹ்மான் மெட்டில் இசையமைத்து, தமிழகத் தலைவர்கள் அனைவருடைய காதுகளிலும் ஓதவேண்டும். இந்த உணர்வு ஆழ்மனதுக்குச் செல்லும். ஜீன்களில் ஏறும். 270 கோடி தாக்கங்களை உள்ளடக்கும் மூளையின் இயக்கத்தால், இவர்களின் செல்களில் படிப்படியாய் ஜீன் மாற்றங்கள் ஏற்படும். அப்படி ஏற்பட ஏற்பட, படுத்துப்போன தமிழனின் முதுகெலும்பு மீண்டும் செங்குத்தாக ஆகும். இதற்கு மூன்று தலைமுறை ஆகும். அதுவும் இப்போதே சிகிச்சையைத் துவக்கினால் தான், இன்றைய தவழும் தமிழனின் மூன்றாவது தலைமுறை தேறும் ... மீளும்”**[58] நம் அரசியல்வாதிகளால் உலக அளவில் தமிழருக்கு ஏற்படும் நோயையும், அதைப் போக்கும் வழியையும் கூறியுள்ளார். இப்போது தொடங்கினாலும் இன்னும் மூன்று தலைமுறை ஆகும் என்று கூறியுள்ளார். இதன் மூலம் நாம் அரசியல்வாதிகள், வி.ஐ.பி.களின் கால்களில் வீழ்வதைத் தடுக்கப்பட வேண்டும். சமுதாய மாற்றம் கொள்ள வேண்டும் என்பதற்காகவும் மக்கள் விழிப்புணர்வு பெற வேண்டும் என்பதற்காகவும் எனக் கொள்ளலாம்.

## திரை உலகம்

ஆரம்பக் காலத்தில் திரைப்படத்துறையில் அறக் கருத்துகள் நிறைந்த படமாக எடுத்து வெளியிட்டனர். முதன்முதலில் வரலாற்றுப் படங்களையும் பின்பு பக்தி மார்க்கம் சார்ந்த படங்களையும் அதன் பின்பு காதல் கதைகளையும் எடுத்து வந்த இவர்கள் தற்போது நாட்டில் நடக்கும் கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற கருத்துக்களைப் படமாக எடுத்து சமுதாய மக்களுக்குத் தீமையை ஏற்படுத்துகின்றனர்.

திரைப்படம் மக்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்து விட்டதாகக் கூறலாம். சினிமாவைப் பார்த்துப் பல பேர் அதில் நடப்பது போல் கொலை, கொள்ளைச் செயல்களில் ஈடுபடுகின்றனர். தற்காலத் திரைப்படங்களில் ஐம்பது சதவிகிதம் ஆபாசமான படமாக எடுக்கின்றனர். குடும்பத்துடன் சென்று படம் பார்ப்பது சிரமமாகி விட்டது.

திரைப்படத்துறையில் தன் வியர்வைத் துளி சிறிதும் இல்லாமல் நடிப்பவர்கள் மிகச் சிறந்த இடத்திற்குச் சென்று விடுகிறார்கள். அவர்கள் நடிக்க உறுதுணையாக இருக்கும் உதவியாளர்கள் இன்றும் வறுமைக்கோட்டிற்குக் கீழே உழன்று கொண்டுள்ளனர் என்பதை சு.சமுத்திரம் அவர்கள் எடுத்துக் காட்டுகிறார். ‘ஏழை-ஆப்பிள்-நட்சத்திரம்’ என்ற கதையில் ‘எங்கள் தர்மம் - சமதர்மம்’ என்ற படப்பிடிப்பிற்காக அனைவரும் காத்து இருக்கின்றனர். லைட்பாய் நாராயணன் பரணியில் உட்கார்ந்து கொண்டு தன் குழந்தை உடல்நிலை சரியில்லாமல் இருப்பதை நினைத்துக் கொண்டு இருந்தான். அங்கு நடிகை நளினகுமாரி பாதி தின்றுவிட்டு மீதி வைத்திருந்த ஆப்பிளைப்

பார்த்து கொண்டு உள்ளான். அப்போது டைரக்டர் லைட்டைத் திருப்புடா என்று கத்துகிறார். நாராயணன் தன்னை அறியாமல் கீழே விழுந்து விடுகின்றான். இதைப் பார்த்த நடிகைக்கு மயக்கம் வந்துவிட்டது என்று கூறி இவனைப் போட்டுவிட்டு அவளை அழைத்துச் செல்கின்றனர். படம் எதிர்பார்த்த வெற்றி பெறுகிறது. ஆனால் **"தனக்கு விடிவுக காலம் பிறக்காதா என்று 'லைட்பாய்' நாராயணன் ஆஸ்பத்திரியில் ஏங்கிக் கொண்டிருக்கிறான். முறிந்திருந்த அவன் தொடை எலும்பிற்குப் பிளாஸ்திரி போட்டு அந்தக் காலை மேலேதூக்கி, நாலடி உயரத்தில் ஒரு 'ஸ்லிங்கில்' வைத்திருக்கிறார்கள்"**[59] என்பதில் இன்றைய சினிமாத் துறையில் உதவியாளர்கள் எவ்வளவு உழைத்தாலும் அவர்கள் தரம் உயரவில்லை என்பதை வெளிப்படுத்துகிறார்.

'கதையில்லா நாயகி' என்ற கதையில் தமிழ்ச்செல்வி ஒரு நாடக நடிகை, இவளை வைத்துப் புரட்சி நாடகம் நடத்திய சந்திரன், அந்தக் கதையையே சினிமாவாக எடுக்கின்றான். அதிலும் தனக்குக் கதாநாயகி வேடம் என்று எண்ணிக் கொண்டு சினிமா படப் பூஜைக்கு வருகின்றாள். ஆனால் சந்திரன், **''ஐ அம் ஸாரியம்மா. புதுமுகத்தைப் போட்டால் ... அதுவும் தமிழ்ப் பெண்ணைப் போட்டால் படம் ஓடாதாம். டிஸ்ட்ரிபியூட்டரும், பைனான்சியரும், புரட்யூஸர்கிட்டே கண்டிப்போடு சொல்லிட்டாங்களாம். ஒனக்கு செகண்ட் ரோல் கொடுக்கணுமுன்னா ஏற்கனவே மஞ்சுவை ...**

**நீங்க கொடுத்தாலும் நான் வாங்கிக்க மாட்டேன். என்னோட ஏமாற்றம் மஞ்சுவுக்கு வரப்படாது. குறைந்தபட்சம் என் மூலம்''**[60]

நாடகத் துறையும் சினிமாத்துறையும் வெவ்வேறானது என்பதையும், இளைஞர்கள் மட்டுமல்லாமல் பெண்கள் கூட இன்று திரையுலக மோகத்தால் அலைகின்றனர் என்பதையும் காட்டியுள்ளார். நமது திரைப்படங்களையும் தொலைக்காட்சி களையும் பார்க்கும்போது இந்த நாட்டில் தணிக்கைக் குழு என்ற ஒன்று இருக்கிறா என்ற கேள்வியும் எழுகிறது. இதன் விதிகளைக் கடுமையாக்கி, செயல்பாட்டைத் தீவிரமாக்க வேண்டும். இல்லையானால் இத்தகைய தணிக்கை குழு, திரைப்படத்துறை, தொலைக்காட்சி, பத்திரிகை, காவல்துறை, நீதிமன்றம் ஆகிய மாபெரும் அமைப்புகளின் சார்பில் நமது பெண்களை, அவமானப்படுத்துவது தொடர்ந்து கொண்டே இருக்கும் என்று சு.சமுத்திரம் கூறுகின்றார். இதனால் திரைப்பட அபத்தங்கள் குறையாது போனாலும் விஞ்ஞானத்திற்கும் சமூக பொறுப்புக்கும் எதிரான கருத்துகள் இடம்பெறாது என்று நம்பலாம்.

மேலும் பெரும்பாலான திரைப்படங்கள் சமுதாய முன்னேற்றத்திற்குப் பாடுபடுவதைக் காட்டிலும், பாலியல், வன்முறை போன்ற பண்பாட்டுச் சீரழிவுகளை மையமாகக் கொண்டுள்ளன.

**சாதி**

சாதி என்னும் வடசொல்லை வருணாசிரம தரும அடிப்படையில் பலர் தூக்கிப் பிடிக்கின்றனர். மனித இனப் பண்பாட்டைக் குறிக்கும் சொல்லாகத் தொல்காப்பியம் பயன்படுத்தவில்லை.

'நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய'

*(தொல்.பொரு.மரபு. 44)*

என்றும்,

*நீர் வாழ் சாதியுள் நந்தும் நாகே" (தொல்.பொரு.மரபு. 68)*

*என்றும் கூறுகிறார்.*

*சாதி என்ற சொல்லிற்குப் பிரிவு, வகை என்று பொருள். நீர் வாழும் உயிர்களை மரபியலில் பேசும் தொல்காப்பியர் இப்பொருளில் நீர் வாழ் சாதி எனக் கையாளுவார். தமிழ் இலக்கண இலக்கியங்களுள் சாதி என்ற சொல் ஆளப்பட்டுள்ள மிக பழைய இடம் இதுவே ஆகும்.*

*பெரும்பாணாற்றுப்படையில்,*

*'கருப்புடைப் பறவை சாதி அன்ன' (229)*

*என்றும், இப்பொருளிலேயே அச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

*சிலப்பதிகாரத்தில்தான் முதன்முதலாக மனிதரிடையே பிறப்பால் புகுத்தப்பட்ட பாகுப்பாட்டைக் குறிக்கும் வகையில்,*

*'நால்வகைச் சாதியும் நலம் பெற நோக்கி' (8:41)*

*என்னும் தொடர் வழங்கப்பட்டுள்ளது.*

***"சாதி என்பது மனித இனத்துள் அகமண உறவும் புற மணத் தடையும் கொண்டு வழிவழியாக வரக்கூடிய ஒரு உட்பிரிவாகும். உட்பிரிவுகளுள் சமுதாய மதிப்பீட்டில் மேல் கீழ் என்ற நிலைகளைக் கொண்டிருப்பதே சாதியாகும்"[61]***
*என்பது கலைக்களஞ்சியம் தரும் விளக்கமாகும்.*

*பண்டைக் காலத்தில் தொடங்கி மனிதர்கள் தங்களுக்குள்ளே பகுத்து வைத்துக் கொண்ட இனப்பிரிவு சாதி என்றழைக்கப்படுகிறது.*

சாலையில் உள்ள மேடு பள்ளம் வாகன ஓட்டத்தின் வேகத்தைக் கட்டுப்படுத்துவதுபோல் சாதி என்ற பாகுபாடு சமுதாய வளர்ச்சியைக் கெடுக்கும். இதனால் மக்களிடையே வேற்றுமையுணர்வு வளர்ந்துள்ளது.

சமுதாயம் முன்னேற வேண்டுமானால் சாதியுணர்வு ஒழிய வேண்டும். பெரியார் ஈ.வெ.ரா. சாதியொழிப்பைப் பற்றி, **"சாதிகள் ஒழிய வேண்டும் என்று கூறுபவர்கள் அதற்கான காரணத்தைச் சரியாக புரிந்து கொள்ளாமல் ஏதோ பொழுது போக்கிற்காகவே அனைவரும் பேசிவந்தனர். மதம் ஒழிக்கப்பட்டால்தான் சாதிகள் ஒழியும். எல்லோரும் சமம் என்பதையும் இசுலாமும் கிறித்தவமும் கூறுகின்றது. ஆனால் இந்து மதம் அப்படிக் கூறவில்லை"**[62] என்றும், மேல் சாதித் தன்மை என்பது மனித சமுதாயத்திற்கு மிகமிகக் கேடானதும் மகாக் குற்றமுடையதும் ஆகும். அது முன்னேற்றத்தையும், மனிதத் தன்மையையும் சம உரிமையையும் தடுப்பது ஆகும். அதனால் **"என்ன விலை கொடுத்தாவது சாதியை ஒழித்தாக வேண்டும்"**[63] என்றும் கூறுகின்றார்.

அண்ணா அவர்கள் சாதியைப் பற்றி கூறும்போது,

**"சாதியை எதிர்த்துப் போராடுங்கள்**
**அது ஜன நாயகத்திற்கு எதிரி என்பதால்**
**மூட நம்பிக்கையை எதிர்த்து போராடுங்கள்**
**அது அறிவியலுக்கு விரோதி என்பதால்**
**ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடுங்கள்**
**அது சுதந்திரம், சமத்துவம் மற்றும்**
**சகோதரத்துவத்திற்கு எதிரி என்பதால்"**

*(அண்ணாமலைப் பல்கலைக்கழக பட்டமளிப்பு விழா உரை, நாள் 18.11.1967)*

என்றும் கூறியுள்ளார்.

இன்றைய சமுதாயத்தில் நிலவும் சாதிக் கொடுமைகளை நன்குணர்ந்த ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் அவற்றைத் தமது படைப்புகளில் விளக்கிக் காட்டியுள்ளார்.

'ஒரு சத்தியத்தின் அழுகை' என்னும் கதையில் சட்டாம்பட்டியில் திருவிழா நடக்கவுள்ளது. அப்போது சப்பரம் காலனி தெருவுக்கும் வர வேண்டும் என்ற கோரிக்கையைக் கந்தசாமி ஊர் பெரியவர்களிடம் வைக்க அவர்கள் முடியாது என்று கூறுகின்றனர். அப்போது கந்தசாமி, **"நீங்க கும்பிடுற மாடனைத்தான் நாங்களும் கும்புடுறோம். ஹரிஜன சுடலமாடன்னு தனியா இல்ல. இது மாதிரியே மனுஷனுக்கும் மனுஷனுக்கும் வித்தியாசம் பார்க்கலாமா? எங்க பொம்புளைங்களை ஒங்களுக்குக் கட்டினால் குழந்தை குழந்தை பிறக்காதா? இல்லன்னா ... ஒங்க பொம்புளப் புள்ளைங்கள ... எங்க ஆட்களுக்குக் கொடுத்தால் குழந்தை பிறக்காதா ...?"**[64] என்னும் கூற்றால் அறியலாம். படைத்த இறைவன் சாதியைப் பார்க்கவில்லை; அவன் பிரிக்கவும் இல்லை. ஆனால் மனிதன் தான் சாதியில் பாகுபடுத்திப் பார்க்கின்றான் என்பதைக் காட்டுகின்றார்.

'இது பொது வழி அல்ல' என்னும் கதையில் அரிசனங்களின் தலைவர் சங்கலி கருப்பன் பக்கத்து ஊர்க்காரர்கள் பகை காரணமாகவும் மிராசுதாரர்களின் வசதிக்காகவும் சேரி மக்களின் எதிர்ப்புகளுக்கிடையே சேரியில் உள்ள தன் குடிசைகளை இடித்து வழி தருகின்றான். ஆனால் தன் இனத்தையும், மைத்துனரையும் மேட்டுக்குடியினர்

அவமானப்படுத்திப் பேசியதற்காகத்தான் அமைத்துத் தந்த வழியை அடைத்து விடுகின்றான். இதைக் கேட்க வந்த பஞ்சாயத்துகாரர்களிடம் சங்கிலி கருப்பன், "எங்க மாப்பிள்ள தெரிஞ்சி தெரியாம இருந்தாரு ... சொல்லப் போனால் மனுஷனுக்கு மனுஷன் வித்தியாசம் காட்டுகிறது மாபாதகம். எப்படியோ ... பழகிப் போச்சேன்னு இருந்துட்டோம். அதுக்காவ .. நீங்க இப்படிப் பண்ணுன பிறவு, சும்மா நான் இருந்தால், எனக்கு நல்ல சாவு வராது. எங்க மாப்புள்ள ... போலீஸ்ல சொல்லி ... காத்தமுத்துக்கு ஒரு வருஷம் வாங்கிக் கொடுக்கேன்னார். நான்தான் மாட்டேன்னுட்டேன். அந்த ஏழ ... வெறும் அம்புதான். ... எங்களுக்கு ... எய்தவங்கதான் முக்கியம். அவரு இல்ல ... நீங்க ... எங்களத் தள்ளி வச்சா நாங்க ஒங்களத் தள்ளி வைக்கதுல தப்பில்ல ... டீக்கடையில கீழ உட்காருற விவகாரமும், தனியா வட்டக்கப்புல டீ குடிக்கிற விவகாரமும் தீருறது வரைக்கும் இந்த வழி அடத்தே கிடக்கும்"[65] என்று கூறுவதில் தவறில்லை.

இரட்டைக் குவளை முறை ஒழிய வேண்டும், உயர்ந்தோர் தாழ்ந்தோர் கிடையாது. மனிதர்களை மனிதர்களாக மதிக்க வேண்டும் என்பதையும் இந்த உலகத்தில் அனைவரும் சமம் என்பதையும் காட்டுகிறார்.

'கொடி காய்ச்சி மரம்' என்ற கதையில் சேரிக்குச் சென்று அனைத்துக் கட்சி தலைவர்களும் கொடி ஏற்றி இனிப்பு வழங்கி வருகின்றனர். கீழ்சாதி பையன் கருப்புசாமி சைக்கிளில் நின்றபடி பேசியதால் மேல்சாதிக்காரர் அடித்து விடுகின்றார். இதற்கு நியாயம் கேட்க சேரிக்காரர்கள் அனைவரும் ஒன்று திரண்டு சென்று கேட்கும்போது, "நீங்க சேரிகாரங்கன்னு ஒன்னாய்

**திரளும்போது ... நாங்க ஜாதிக்காரங்க ஒன்னாப் பேசப்படாதோ ... ஒன் கண்ணு உறுத்துதோ ... எங்களுக்குள்ள ஆயிரம் கட்சி இருக்கும். அதுக்காக ஒங்களுக்கு விட்டுக் கொடுக்கணும் ... ஜனநாயகத்தைப் பற்றி தப்பா நினைக்காத ... ஒழுங்காய் இருக்கணுமுன்னா இருங்க ... இல்லன்னா சேரியையே பொசுக்க வேண்டியது வரும்''**[66] இதுதான் இன்றைய சமுதாயத்தின் நிலையும். எந்த விதத்திலும் சாதியை ஒழிக்கமுடியாது என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

'புதிய விதைகள்' என்னும் கதையில் பண்ணையார் மகன் ராஜதுரையை ஏழையாய் இருக்கும் கீழ்சாதியைச் சார்ந்த மாடசாமி மகன் வேலாயுதம் தன்னை 'டே' என அழைத்ததற்காக அவன் கன்னத்தில் அறைந்தான். வேலாயுதம் பதிலுக்கு அவன் முகத்தில் குத்துவிட்டான். இவனை அடிக்க வந்த அன்னம்மாள் கையையும் பிடித்துக் கொண்டான். இதைப் பார்த்த மாடசாமி வேலாயுதத்தை அடிக்க கையை ஓங்கி அடிக்கப் போனார். மாடு மேய்க்கும் இசக்கிமுத்து தடுத்துக் கொண்டார். மாமா ஒம்ம பையனை அடிசிங்கா நல்ல இல்லா என்று கூறினான். பின்பு, **"ஏன் ... அடிக்கக்கூடாது ... ஏழைங்கள ... அடிக்கிரது இவன் அப்பா காலத்தோடயும் ... உம்ம காலத்தோடயும் முடிஞ்சிட்டு ... இனிமேல் அடிச்சா ... முப்பித்திரண்டும் கீழே விழும்''**[67] என்ற இசக்கியின் பேச்சில் இருந்து அடிமையாக இருந்த காலம் மலையேறி விட்டது என்றும் அனைவரும் சமம் என்பதையும் யாரையும் யாரும் கேள்வி கேட்கலாம் என்பதையும் காட்டுகின்றார். வர்க்க முரண்பாடு காரணமாக ஆதிக்கச் சமுதாயம் என்றும் அடிமைச் சமுதாயம் என்றும் இரு பிரிவுகள் தோன்ற வாய்ப்பு ஏற்படுகின்றது என்பதையும் சுட்டுகிறார்.

காலப்போக்கில் அடிமைச் சமுதாயம் விழிப்புணர்வு பெறக்கூடிய வாய்ப்பும் ஏற்படும் என்பது ஆசிரியர் கருத்தாக காணமுடிகிறது. இதனை 'ஒரு சத்தியத்தின் அழுகை' என்னும் கதையில் நாடாரும் தேவரும் சேர்ந்து காலனியைச் சேர்ந்த காத்தாயி கணவன் கந்தசாமியை வெட்டியவர்கள், பின்பு இருவரும் கோவில் முதல் மரியாதைத் தகராறில் தங்களுக்குள் வெட்டிக் கொண்டவர்கள். ஓர் ஆண்டிற்கு பின் இருவரும் குளத்தங்கரையில் சந்திக்கின்றனர். அப்போது காத்தாயி இவர்களைப் பார்த்து அண்ணன் மாறோ இங்கே வாருங்கள் என்று கூறி "உங்கள் நாடாரே, தேவரேன்னு கூப்புடாமல், அண்ணன்னு கூப்புட்டதுக்கு அர்த்தம் தெரியுமா? இப்ப பாத்தீங்களா? வுங்க கோயிலும் பந்தல் போட, எங்க சேரிக்காரர்தான் காண்டிராக்ட் எடுத்திருக்கார். ஒங்க ... சாதிக்காரங்க அங்க ... கூடிக் கும்மாளமாடுறாங்க ... என் புருஷன் சொன்னதைத்தான் ஒங்ககிட்ட சொல்லப் போறேன். உலகத்துலெ ... ரெண்டே ரெண்டு சாதிதான் உண்டு. ஒண்ணு பணம் இருக்கிறவங்க சாதி. இன்னொண்ணு அது இல்லாதவங்க சாதி. இந்த ரெண்டு ஜாதிங்க தவிர, வேற சாதிங்க இருக்கப்படாது. நினைச்சிப் பார்த்தால், இல்லவும் இல்லை. பணக்காரன் என்னைக்கும் பணக்காரன் கூடத்தான் சேருவான். பணக்காரன் சாதி பார்க்காதபோது ... நாம ஏழைங்க ... சாதி பார்க்கலாமா? நாடார் அண்ணாச்சி ... ஒம்ம வண்டிமாட்ட எதுக்காக வித்தீரு? தேவர் அண்ணே ... ஒம்ம நிலம் போனதாலே ... ஒம்ம நிலைமையை நினைச்சிப் பாத்தீரா? என் புருஷன் ஒங்களுக்கு என்ன கெடுதல் செய்தாரு? சொல்ல முடியுமா"[68] என்றாள். இதன்மூலம் சாதிய முரண்பாடுகளை அறியலாம்.

சாதிகள் கிடையாது என்றும், ஒன்று பணக்கார சாதி, மற்றொன்று ஏழை சாதி (இருக்கிற சாதி, அது இல்லாத சாதி) மட்டும் தான் உள்ளது என்கிறார். சாதி வெறி ஒழியவும் எல்லோரிடமும் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற எண்ணம் ஏற்பட வேண்டும் என்றும் முயற்சி செய்கிறார்.

நெடுங்காலமாகச் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள், வர்க்க வேறுபாடுகள் இருந்து வருகின்றன. எத்தனையோ புரட்சிகள், புதுமைகள், போராட்டங்கள் ஏற்பட்டும் கூட இவை முற்றிலும் மாறாமல் ஆங்காங்கே நிலவி வருகின்றன.

மேற்காட்டிய சான்றுகளின் வழி எதிர்காலத் தலித்திய போராட்டத்திற்கான விதை உள்ளடங்கி இருப்பதாக குறிப்பிட்டுள்ளார்.

**மூடநம்பிக்கை**

மனித வாழ்வு முன்னோர் சொல்லிக்கொடுக்கும் வழியிலும், நம்பிக்கையின் அடிப்படையிலும், பட்டறிவின் வளர்ச்சியிலும் செயல்படக்கூடியதாகும். ஆய்வுக்கும், அறிவியலுக்கும் இடம் தராத எண்ணங்கள், செயல்கள் மூடநம்பிக்கையாகக் கருதப் படுகின்றன. மூடநம்பிக்கை அறியாமையின் விளைவு என்றாலும் அறிஞர்கள், மேதைகள், கற்றவர்களும் அதற்கு விதிவிலக்கானவர் அல்ல என்கிறார். அச்ச உணர்வே காலப்போக்கில் அற உணர்வாக மாறியது என்பதைக் காணமுடிகிறது.

**பரிசுச்சீட்டு**

சமுதாயத்தில் ஏழை, கூலி வேலை செய்யும் தொழிலாளி, கற்றவர்கள், கல்லாதவர்கள் அனைவரும் உடனடி பணக்காரர்களாக வேண்டும் என்ற எண்ணம் அனைவருக்கும்

உண்டு. அதுபோல் மாத ஊதியம் பெறும் தொழிலாளி முதல் பிச்சை எடுக்கும் ஏழை வரை பரிசுச் சீட்டு வாங்கும் பழக்கம் உண்டு. அதிஷ்டத்தின் மீது நம்பிக்கை கொண்ட பலபேர் தாம் உழைத்துப் பெற்ற பொருளை இழந்து வறுமையில் வாழ்வோர் பல பேர். இது சீட்டு ஆட்டத்தை விட மோசமான ஒன்று. இன்று பரிசு விழவில்லை என்றால் நாளை பரிசு விழும் என்ற மூட நம்பிக்கையில் தன்னிடம் உள்ள பொருளை இழந்து நடுத் தெருவில் நிற்போர் பல பேர் உண்டு.

சமுதாயத்தில் காணப்படும் இந்த இழிநிலைக்கு அரசுதான் காரணம். பரிசுச் சீட்டு வாங்குவதால் ஏற்படும் பேரிழப்பைப் பற்றி ஏழைகள் சிந்திப்பதில்லை. இதனால் பாதிக்கப்படுவோர் நடுத்தர மக்களும், ஏழை மக்களும் ஆவர். குறிப்பாக அன்றாடம் கூலி வேலைக்குச் செல்பவர்கள்தான் பைத்தியம் பிடித்தவர்கள் போல் தனது உழைப்பில் ஒரு பகுதியைப் பரிசுச் சீட்டுக்கு ஒதுக்குவார்கள். வாங்கிய சீட்டுக்குப் பரிசு விழ வேண்டும் என்று கடவுளை வேண்டுகின்றனர்.

'நாணயம்' எனும் கதையில் பரிசுச் சட்டு வாங்கும் பாட்டி, பரிசு விழுந்தால் உனக்கும் பணம் தருகின்றேன், என் மகள்கள் துன்பமும் போய்விடும் என்று கூறினாள். அத்துடன் இல்லாமல் **"குருவி ஜோஸ்யம் சரியா வரும் போலகீது கண்ணு ... ஒன்னோட அட்ரஸ் எழுதிக்குடு ... லட்சம் விய்ந்தா ஆயா ஒன்ககு பத்தாயிரம் தாரேன். நம்புடா கண்ணு ... இது சத்தியமான வார்த்தை அடியே மாரியாத்தா வீட்ல போயி அரிசி வாங்கிச் சமைக்கறதுக்காக வச்சிருந்த ஒரு ரூபாயை முழுசா எடுதது வாங்கறேண்டி ... நீயே இந்தப் பிள்ளையாண்டானா வந்து பேசறதா நினைச்சு வாங்குறேண்டி ... மோசம்**

பண்ணிடாதடி ஆயிரம் கண்ணாத்தா"[69] என்பதில் ஏழை மக்கள் அரிசி வாங்க வைத்திருக்கும் காசைக் கொடுத்துப் பரிசுசீட்டு வாங்குகின்றனர். அதிஷ்டம் நமக்கு உண்டு என்ற மூடநம்பிக்கையில் மூழ்கிக் கிடக்கிறார்கள். இதனால் இன்றைய சமுதாயத்தில் அமைதியற்ற குடும்ப சூழ்நிலை உருவாவதற்கு அதிஷ்டம் என்னும் மூட நம்பிக்கையும் ஒரு காரணமாகிறது என்பதை சு.சமுத்திரம் எடுத்துரைக்கின்றார்.

### வேலையில்லா திண்டாட்டம்

வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில் இருக்கக் கூடிய முக்கிய பிரச்சினையில் ஒன்றாகும். படித்துப் பட்டம் பெற்ற இளைஞர்கள் பலர் உள்ளனர். ஆனால் அவர்களுக்கு வேலை தர வேண்டியது அரசின் கடமையாகும். படித்துப் பட்டம் பெற்ற இளைஞர்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே உள்ளனர். ஒருபுறம் மக்கள்தொகைப் பெருக்கமும், மறுபுறம் இவர்களும் உள்ளனர். இந்த இரண்டு பெருக்கமும் சமுதாயத்தில் பல சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றன. வேலையில்லாப் பிரச்சினை சமுதாயத்தில் ஒரு பெரிய சமூகப் பிரச்சினையாகத் தோன்றியுள்ளது. இந்தச் சமூகப் புரட்சியை ஆசிரியர் சு.சமுத்திரம் தம் கதைகளுக்குக் கருவாகக் காட்டுகிறார்.

'ஆப்பசைத்த கார்த்தி' எனும் கதையில் கார்த்தி என்ற பட்டதாரி வேலையில்லாதவன். வங்கி மேலாளர் வேலைக்குத் தேர்ச்சி பெற்று நேர்முகத் தேர்வுக்குத் தயாராகிக் கொண்டுள்ளான். அப்போது அரசியல்வாதியான பலவேசத்திடம் வேலைக்காக வேண்டுகோள் விடுப்பதையும் அவர் தன் தலைவரிடம் கார்த்திக்கை அழைத்துச் சென்று அறிமுகம் செய்து வைக்கின்றான்.

அரசியல் தலைவரோ கார்த்திக் கூறும் வார்த்தைகளைக் காதில் வாங்காமல் அவனை அலட்சியப்படுத்துவதைப் பின்வரும் உரையாடல் விளக்குகிறது.

**"மிஸ்டர் .... பலவேசத்தோட ஸிஸ்டர்ஸ் சன் நான்**

**யாரு பலவேசம்**

**அதுதான் காலையில ... ஒங்ககிட்ட என்னைப் பற்றி பேசினாரே**

**என்னப்பா நீ எத்தனையோ பலவேசம் இருக்காங்க ... எந்த பலவேசமுன்னு கண்டேன்**

**அவரு உங்களுக்கு ரொம்ப நெருக்கமானவரு**

**எல்லாப் பயலும் ... அப்படித்தான் சொல்லுவாங்க ... பார்த்தால் தெரியும்**

**பேங்க் ஆபீஸர்ஸ்**

**உன்கிட்ட என்னால மாரடிக்க முடியாது ... முதல்ல கூட்டி வந்த பயலைக் கூட்டிவா. மற்ற விஷயம் அப்புறம்**

**தலைவர் காரில் பறந்தார் ... கையாளான மீசைக்காரன் ... இன்னுமாடா நிற்கே என்பது மாதிரி கார்த்தியைப் பார்த்தான்"**[70] இந்த சான்று மூலம் வேலையில்லா பட்டதாரியின் நிலையும் அவர்களை அரசியல்வாதிகள் ஏமாற்றுவதையும், அலட்சியப்படுத்துவதையும் ஆசிரியர் காட்டியுள்ளார்.

**வறுமை**

வறுமையை பற்றிக் கூறாத கவிஞர்கள் கிடையாது. வறுமையைப் பற்றி ஔவையார்,

“கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினும் கொடிது
இளமையில் வறுமை”

என்று கூறியுள்ளார்.

வறுமை மனிதனுக்கு எல்லா கலைகளையும் கற்றுத் தந்து விடும் என்றும் கூறுகின்றனர்.

**“இன்றைய சமுதாயத்தின் ஒழுக்கம், நேர்மை ஆகிய அறவழிகளைச் சீர்குலைக்கும் புல்லுருவிகள் இரண்டு. ஒன்று வறுமை, மற்றொன்று மிக மிஞ்சிய செல்வம்”**[71] என்கிறார் ஈழம்.செ.கணேசலிங்கம்.

**“நாகரிகம் என்ற பெயரால் பிறர் சுகத்தைப் பறிக்கக் கூடாது. ஒருவனுடைய சுதந்திரத்தை மற்றவன் பறிப்பது தகாது. யந்திரம் பெருகினாலும் மனிதனிடம் வறுமை நீங்கவில்லையே. புகை வண்டியின் வேகத்தைவிட வறுமையின் வேகம் இந்நாட்டில் மிகுதி எனக் கூறி வறுமையை ஓட்டச் சுதந்திர இயக்கம் தேவை”**[72] என்பதை வற்புறுத்துகிறார் தா.வே.வீராசாமி.

வறுமை பல சமுதாயக் கொடுமைகளுக்குக் காரணமாக அமைகின்றது. முக்கியமாக கொலை, கொள்ளை சம்பவங்களுக்கு வழிவகுக்கின்றது. சமுதாயத்தைக் கேடு அடைய செய்கிறது. அரசு வறுமை ஒழிப்புத் திட்டத்தைச் செயல்படுத்தி வருகிறது. இருந்தும் பெரும்பான்மை மக்கள் வறுமையில் வாடுவதால் இது இந்திய தேசிய பிரச்சினையாக உள்ளது. வறுமையின் காரணமாக நாட்டின் வளர்ச்சி தடைபடுகின்றது. குறிப்பாக கவிஞர்கள், அறிஞர்கள், படைப்பாளர்களில் பலர் வறுமையின்

வளர்ச்சியில் தோன்றியவர் எனலாம். சமுதாயப் பற்றுடைய படைப்பாளர்கள் வறுமையில் வாடும் மக்களின் உரிமைக்காகவும், சலுகைகளுக்காகவும் குரல் கொடுத்து வருகின்றனர். ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் தனது கதைகளில் கதைமாந்தர்கள் மூலம் வறுமையின் கொடுமையை விளக்குகிறார்.

'பிறக்காத நாட்கள்' என்னும் கதையில் வறுமையின் காரணமாகத் தன் குழந்தைக்குக் கூட பிறந்த நாள் கொண்டாட முடியவில்லை. முதலாளியிடம் கடன் வாங்குகின்றான். கடன் வாங்கிய பணத்திற்கு வட்டியாக, **"இன்னிக்கு நாளக்கி மறுநாளக்கி, காத்தாலயே வந்துடுறதாச் சொன்னால்தான் ... மொதலாளி கடன் குடுத்தான் ... சீக்கிரமாபோய் லேட்டா வாரது ... கடனுக்கு வட்டி ... புரியுதாமே"**[73] என்று கூறுகின்றார். அப்படி கடன் வாங்கிய பணத்தில் காத்தாயி தன் மகனுக்குக் கேக் வாங்க கடைக்குப் போக வெளியே வருகின்றாள். அப்போது வாடகைப் பாக்கி தரவில்லை என்று வாங்க வந்தவன்.

இதனால் அவனுக்கு வாடகைப் பாக்கியாக கையில் இருந்த பணத்தைக் கொடுத்துவிட்டு தன் மகன் முனுசாமியின் முகத்திலும் முதுகிலும் அடித்து விட்டு அவனும் அழுதாள்.

சமுதாயத்தில் ஏழைகள் கடன் வாங்கி தன் மகனுக்குப் பிறந்த நாள் கொண்டாடுவதை எடுத்துக்காட்டுகிறார். அந்த அளவு அவன் வறுமையில் உள்ளதையும், ஏழைகளுக்கு இந்த நிகழ்ச்சியெல்லாம் இன்றும் எட்டாக் கனியாக உள்ளது என்பதையும் எடுத்துக்காட்டுகிறார்.

'புதிய விதைகள்' எனும் கதையில் மாடசாமி ஒரு ஏழ்மையான விவசாயி. அவர் தன் மகன் வேலாயுதத்திற்கு,

போட்டுக் கொள்ளவே துணியில்லை. அதனால் ஒரு சட்டை வேண்டும் என்று கேட்கின்றான். அழுது கொண்டே தூங்கி விடுகின்றான். "அவன் குப்புறம் குப்புறப்படுத்திருப்பது போல் தெரிந்தது. கால் சட்டையில் ஒட்டு போட்டுத் தைத்திருந்த வெள்ளைகைத்துணி மட்டும் லேசாக கண்ணுக்குத் தெரிந்தது. அவன் தீபாவளிக்கு துணி கேட்டபோது பொங்கலையும், பொங்கல் வந்தபோது வருஷப் பிறப்பையும், வருஷம் மற்றவர்களுக்கு விடிந்தபோது, அம்மன் கொடையைக் காரணமாகக் காட்டினார். இப்போது எதைச் சொல்லலாம்? ஆவணி அவிட்டமுன்னு சொல்லலாமா ... அது பாப்பாங்களுக்குத்தானே ... அவிட்டமுன்னா ... என்னது ... மொதல்ல டவுர்சனா என்னன்னு தெரிஞ்சுக்க முடியல ... அவிட்டத்துக்கு போயிட்டோம்"[74] என்றார்.

ஒரு மனிதனுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் அடிப்படைத் தேவையாகும். இந்த அடிப்படை தேவையைக் கூட பூர்த்தி செய்ய முடியாத நிலையில் வறுமையில் சிக்கித் தவிக்கும் மக்கள், ஒரு புதுச்சட்டை எடுத்துக் கொடுக்கப் பல விழா நாட்கள் சொல்லி ஏமாற்ற வேண்டிய நிலையில் உள்ளதையும் உடை வாங்க முடியாத ஏழ்மை நிலையையும் உணர்த்துகிறார்.

வறுமையில் மேலுமானது பசி. 'பசி வந்தால் பத்தும் பறந்து போதும்' என்பது பழமொழி. பசியைப் பற்றித் தமிழில் தோன்றிய பௌத்த காப்பியமான மணிமேகலையில், பசியால் ஏற்படும் துன்பங்களைப் படம்பிடித்துக் காட்டுகிறார் சாத்தனார்.

"குடிபிடிப்பு அழிக்கும், விழுப்பம் கொல்லும்,
பிடித்த கல்விப் பெரும்புண் விடுஉம்;

*நான்அணி களையும்; மாண் எழில் சிதைக்கும்*

*பசிப்பிணி என்னும் பாவி'' (மணி. 11:78-80)*

*என்று கூறியுள்ளார்.*

**“உயிர்கள் வாழ வேண்டுமானால் உடலுக்குத் தேவையான உணவை வயிற்றுக்குத் தர வேண்டும் என்று அடிக்கடி நினைவூட்டும் கடமையைச் செய்வதே பசி”[75]** என்கிறார் சதாசிவம்.

‘நாணயம்’ என்னும் கதையில் ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் பசியின் தன்மையைக் கூறுகின்றார். கோவிந்தன் தன் சொந்த ஊரை விட்டு, சென்னைக்குப் பிழைக்க வந்தான். அவன் காலில் அடிபட்டதால் நடக்க முடியவில்லை. இதனால் வேலைக்கும் போகவில்லை, இதனால் கோவிந்தனுக்குப் **“பசியால் வயிறு பிய்த்துக் கொண்டு போய்விடக் கூடாது என்று நினைத்தவன் போய் முட்டிக் கால்களை வயிற்றுக்கு அணைகட்டி, முழங்கால்களைக் கையால் பிடித்துக் கொண்டும், முட்டிகளில் மார்புக் கூட்டை வைத்து அழுத்திக் கொண்டும், எல்லாவற்றையும் பார்ப்பவன் போலவும் உமிழ்நீரைச் சுரக்கவைத்து, வயிற்றுக்குள் அனுப்பிக் கொண்டிருந்தான். தாங்க முடியாத பசியில், அவனைத் தாங்கிய தரைவட்டம் சுழல்வது போல் தோன்றியது. நேற்று மத்தியானத்திலிருந்தே பட்டினி. கார்ப்பரேஷன் தண்ணீரைக் குடித்துப் பார்த்தான். அது, அவன் குடலைக் கழுவியதே தவிர, பசிக்கு மருந்தாகவில்லை. எப்படியோ மாலை நான்கு மணிவரை பல்லைக் கடித்துக் கொண்டு பசியை கடித்துக் கொண்டிருந்தான்”[76]**

உணவுக்கு வழியில்லாத வறுமை நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

நம் நாட்டில் நகரங்களைக் காட்டிலும் சிற்றூர்கள்தான் அதிகம். இங்கு வாழும் மக்கள் பெரும்பாலானோர் வறுமையில் உழல்பவர்களாகவே உள்ளனர். வறுமையைப் போக்க முற்படாதவரை சமுதாயத்தில் நாம் பொருளாதார சமன்பாட்டை அடையமுடியாது.

அரசின் வறுமை ஒழிப்பு திட்டம், மக்களுக்கு முழு பயனடைய வேண்டும். இப்போது குறைந்தபட்ச ஊதிய நிர்ணயம், வேலை உறுதி சட்டம் போன்றவை அரசின் நல்ல திட்டங்கள். இவை யாராலும் தடைபடாமல் இருக்க வேண்டும் என்பதை சு.சமுத்திரம் விளக்கிக் காட்டுகிறார்.

## பெண்ணியம்

'Feminism' என்ற ஆங்கிலச் சொல் பெண்ணியம் என்ற தமிழ்ச் சொல்லை விளக்கும் சொல்லாகும். 'Femina' என்ற இலத்தீன் மொழிச் சொல்லின் திரிபுதான் 'Feminism' என்பது. 1889 வரை 'Womanism' என்ற சொல் பெண்களின் உரிமைப் பிரச்சினையையும் அதன் அடிப்படையிலான போராட்டத்தினையும் உணர்த்தியது. பெண்ணியம் என்ற சொல்லுக்குப் பல விளக்கவுரைகள் வந்தாலும் இறுதியில் 'Feminism' என்ற சொல்லே நிலைபெற்றது.

## பெண்ணியம் விளக்கம்

பெண்ணியம் என்னும் கொள்கை மேலை நாட்டுச் சிந்தனையின் தாக்கமாகும். 19ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் கால் கொள்ளத் தொடங்கிய இப்பெண்ணியக் கொள்கை,

இந்திய விடுதலைப் போராட்ட வரலாற்றோடு பின்னிப் பிணைந்தது. பெண்ணியத்தின் தோற்றம் மேலை நாடுகளில் பகுத்தறிவின் அடிப்படையில் அமைந்தது. இந்தியாவில் சமூகச் சீர்திருத்தத்தின் அடிப்படையில் அமைந்தது எனலாம்.

பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல; சமுதாயத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும் என்று சார்லட் பன்ச் குறிப்பிடுகிறார்.

பெண்ணியம் என்பது பெண்களின் நிலையை மாற்றுகின்ற இயக்கம் (A Movement for change in the position of women) என்பது ரோஸிலின்ட்டெல்மர் கருத்து என்று பிரேமா கூறுகிறார்.

**"பெண்ணியம் என்பது பெண்கள் ஆண்களுக்கு இணையாக சம அந்தஸ்து பெறுதல், தங்களின் வாழ்க்கை முறைகளையும், எதிர்காலத்தையும் தாங்களே சுதந்திரத்துடன் நிர்ணயித்துக் கொள்ளுதல் ஆகியவற்றில் ஆண்களுக்கு இணையாகச் சம உரிமை கோரி வரும் சமுதாய இயக்கமாகும்."**[77] என்கிறார் சு.புவனேஸ்வரி.

**"சமூகத்திலும் வேலைத் தளத்திலும் குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்கு முறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்மையின் உணர்வு நிலைகளும் இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும், ஆண்களும், எடுக்கும் உணர்வுப் பூர்வமான நடவடிக்கையுமாகும்"**[78] என்பர் தேவ தத்தா.

**பெண்ணியத்தைப் பற்றி இக்கால சான்றோர்கள் கருத்து**

விவேகானந்தர் பெண்களை அனைத்து நிலையிலும் உயர்த்தப் பாடுபட்டவர். விதவைகள் பிரச்சினை பற்றி ஒருமுறை

அவரிடம் கருத்து கேட்டதற்கு, "நீர் யார் விதவைகளைப் பற்றிக் கேட்பதற்கு? உமக்கு அவர்களுடைய உணர்ச்சிகள் எப்படிபட்டதென்று தெரியுமா? நீர் என்ன கடவுளா? தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்வதற்குரிய உரிமைகளை மட்டும் அவர்களுக்கு கொடுங்கள் அது போதும் என்று கண்டித்தவர். மேலும் ஐந்நூறு இளைஞர்களைத் தந்தால் இந்த இந்தியாவை மாற்றுவதற்கு எனக்கு ஐம்பது ஆண்டுகள் தேவைப்படும். ஆனால் ஐந்நூறு பெண்களைத் தந்தால் சில வாரங்களிலேயே இந்தியாவை மாற்றிக் காட்டுவேன் என்று மானிட சக்திக்கு மீறிய சக்தியாக பெண்சக்தியின் மீது நம்பிக்கை கொண்டு பேசியவர் விவேகானந்தர்"[79] என்று கி.இராசா கூறுகிறார்.

பெண்களைப் பற்றி வள்ளலார் கூறும்போது, "பெண்கள் அனுபவிக்கும் எல்லா துன்பங்களையும் ஆண்களும் அனுபவிக்க வேண்டும் என்று கூறுகிறார். ஒரு பெண் தன்மானத்துடன் உரிமை வாழ்வு வாழ்ந்தால்தான் வீடும் நாடும் விடுதலை வாழ்வை வாழமுடியும் என்கிறார். ஆண்களும் பெண்களும் இயற்கையில் சமமானவர்கள் என்றும் அதனால் ஆண்கள் கற்பது போல பெண்களுக்கும் கல்வியளிக்க வேண்டும் என்றும் வலியுறுத்தியவர் வேதநாயகம்பிள்ளை அவர்கள். அதுபோல் பெண்ணினத்தை உயர்நிலையில் வைத்துப் பார்த்து அடக்கம், பொறுமை, தியாகம், பாநலம், இரக்கம், அழகு, ஒப்புரவு, தொண்டு முதலியன அமைந்த ஒனறே பெண்ணியம் எனத் திரு.வி.க. பெண்மைக்கு விளக்கம் அளிக்கிறார். அத்துடன் இல்லாமல் உலகில் உள்ள அழகெல்லாம் ஒன்று திரண்டு பெண்ணாகியது என்று தனது பெண்ணின் பெருமையில் கூறியவர்.

பெண்களின் விடுதலைப் பற்றி பாட வந்த பாரதியார் ஆணும் பெண்ணும் சமம் என்றார்.

"கற்பு நிலையன்று சொல்லவந் தாலிரு
கட்சிக்கு மஃது பொதுவில் வைப்போம்"

என்று சமநீதி பேசியவர். சமுதாய விடுதலைக்கு இன்றியமையாதது பெண் விடுதலை என்பது பாரதிதாசனின் கருத்தாகும். இதனை 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' என்னும் நூலில்,

"பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற் கொம்பே" (அடிகள் 56-57)

என்று கூறியவர். சமூகத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் நீதி ஒன்றே எனக் கூறியவர்.

**"மங்கையராகப் பிறப்பதற்கே - நல்ல**
**மாதவம் செய்திடல் வேண்டுமம்மா - அவர்**
**பங்கயக் கைநலம் பார்க்கதலவோ - இந்தப்**
**பாரில் அறங்கள் செழிக்குதம்மா"[80]**

என்று கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை கூறுகின்றார்.

பெண்களைப் பற்றி பெரியார் ஈ.வெ.ரா. கூறும்போது பெண்களுக்குப் படிப்பு, தொழில் ஆகிய இரண்டும் பெற்றோர்களால் கற்பிக்கப்படும்போது, சொத்து சம்பாதிக்கும் சக்தி தானாக வந்துவிடும் என்றார்.

**"பெண்கள் விடுதலைப் பெறுவதற்கு இப்போது ஆண்களைவிடப் பெண்களே பெரிதும் தடையாக இருக்கிறார்கள். ஏனெனில் இன்னமும் பெண்களுக்குத் தாங்கள் ஆண்களைப் போல முழு விடுதலைக்குரியவர்கள் என்கின்ற எண்ணமே தோன்றவில்லை"[81]** என்கிறார்.

அம்பேத்கர் அவர்கள் "கணவனுக்கு மனைவி அடிமை என்ற நிலையை ஒழித்து வாழ்க்கைத் துணைவியாக சம உரிமை உள்ளவர்களாக வாழ வேண்டும்"[82] என்று சட்ட அமைச்சராக இருந்தபோது இந்தச் சட்ட மசோதாவைக் கொண்டு வந்தார். இந்த மசோதா மூலம் பெண்களுக்குத் திருமண உரிமை, மறுமண உரிமை, சொத்துரிமை ஆகியவை உள்ளடக்கியதாகும்.

பெண்ணியம் என்னும் சொல் பெண்மையின் நளினத்தையும் அழகுணர்ச்சி கலந்த ஆற்றலை முழுமையாக வெளிப்படுத்துவது ஆகும் என்றும், "பெண்கள் சமுதாயத்தின் அச்சாணி போன்று விளங்குபவர்கள், ஒரு சமுதாயம் பெண்களுக்கு எந்த அளவிற்கு உரிமைகள் வழங்கியிருக்கிறது. மதிப்பளித்திருக்கிறது என்பதைக் கொண்டே அதன் நாகரிக, பண்பாட்டு மேன்மைகளை மதிப்பிட முடியும். பெண்கள், ஆண்களுக்கு நிகராக அனைத்துச் சமூக உரிமைகளையும் பெற வேண்டியவர்கள், தனித்துவம் வாய்ந்தவர்கள், உயர்ந்த சமுதாயத்தை உருவாக்க வல்லவர்கள். எனவே சமுதாயத்தில் பெண்களின் கல்வி, வேலைவாய்ப்பு பொருளாதார நிலைகள் உயர வேண்டும், அப்பொழுதுதான் சமுதாயத்தின் நிலை உயரும்"[83] என்கிறார் அ.குழந்தைசாமி.

10ஆம் நூற்றாண்டில் இருந்து 19ஆம் நூற்றாண்டு வரை பெண்களின் நிலை மிகவும் அவல நிலையாக இருந்தது. 19ஆம் நூற்றாண்டில் மக்கள் தொகையில் ஏறத்தாழ பாதி அளவினைக் கொண்டதாக இருந்தது பெண்களின் எண்ணிக்கை. அவர்களுக்குச் சமுதாயத்தில் அடிப்படை உரிமைகள் மறுக்கப்பட்டன. எல்லாத் துறைகளிலும் பெண்கள் முன்னேறுவதற்கு வாய்ப்பு அளிக்கப்படுகிறது என்றாலும் பெண்கள் முன்னேற்றம் எதிர்பார்த்த

இலக்கை அடையவில்லை என்பதே உண்மை. சமுதாயத்தில் பெண்களுக்குரிய உரிமைகளை உறுதி செய்வதற்குச் சமுதாய விழிப்புணர்ச்சி தேவைப்படுகிறது. இதனால் இலக்கியவாதிகள் தங்கள் படைப்பின் மூலம் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள், பாலியல் தொல்லை, வரதட்சணைக் கொடுமை போன்றவற்றைப் படைத்துக் காட்டுகின்றனர். ஆசிரியர் சு.சமுத்திரம் அவர்கள் தன் படைப்புகளில் பெண்களின் அடிப்படைத் தேவைகள், அவர்களின் உரிமை, அவர்களுக்கு ஏற்படும் கொடுமைகளையும், பிரச்சினைகளையும் முன்னிறுத்திப் புதியதொரு சமுதாயத்தைக் காண விழைகின்றார்.

**புதுமைப்பெண்**

'தர்மத்தின் தற்காப்பு' எனும் கதையில் நடராசனின் மனைவி மங்கம்மாவிற்குப் புல்லுகட்டு தூக்கிவிடும் சாக்கில் தப்பான எண்ணத்தில் அவளைத் தொடுகின்றான். இதை ஊரில் அனைவரிடமும் முறையிடுகின்றான் நடராஜன். ஆனால் யாரும் அவனுக்கு உதவவில்லை. அதனால் பழிக்குப் பழி அவன் மனைவியின் கையை வீட்டிற்குள் புகுந்து கையைப் பிடித்து இழுக்கப் போவதாகக் கூறுகின்றான். அப்போது மங்கம்மா, **"ஒமக்குக் கொஞ்சமாவது மூள இருக்கா? இத ஒம்ம பெண்டாட்டிக்கு வந்த அவமானமாக நினையாம ஒரு பெண்ணுக்கு வந்த அவமானமா நெனையும். அப்படி நெனச்சா அந்த அக்காகிட்ட அப்படி நடக்கணுங்கிற எண்ணமே வராது. என்ன வார்த்தை பேசிப்பிடீரு. வாய சீவக்கா போட்டு கழுவும்"**[84] என்று கூறும் பகுதி ஒரு பெண் தனக்கு நேர்ந்த கொடுமைபோல் இன்னொரு பெண்ணுக்கு நேரக்கூடாது என்றும் மன்னிக்கும் மனமும், இரக்கக் குணமும்

பெண்ணுக்குண்டு என்பதையும் சமுதாயத்தில் பெண்கள் பரந்த உள்ளத்தோடு திகழ வேண்டும் என்கிற ஆசிரியரின் கருத்து வெளிப்படுகிறது.

'உறவுக்கு அப்பால்' என்னும் கதையில் தன் அண்ணன் தியாகராஜன் இறந்த நிலையில் அத்தைகாரி மீனாட்சி, அண்ணன் மகள் வித்தியாவுக்கு மாப்பிள்ளை பார்த்துள்ளதாகவும், மாப்பிள்ளை நிறுவனத்தில் வேலை செய்வதாகவும், வயது நாற்பது என்றும், இரண்டாம் தாரமாகக் கொடுக்கலாம் என்று வித்தியாவின் அம்மா காமாட்சியிடம் கூறுவாள். அப்போது காமாட்சி **"உங்க பெண்ணுக்கே அப்படி நடக்கிறாக இருந்தாலும், அதை தடுக்கிற முதல் ஆள் நானாகத்தான் இருப்பேன். தப்பா நினைக்கப்படாது. ஒங்க பொண்ணு வேறே. எம் பொண்ணு வேறயா? ஒங்களுக்கு இந்த ஐம்பது வயதுல, நாற்பது வயசுக்காரன், பையனாத் தெரியுது நியாயந்தான் ஒரு இருபத்திரண்டு வயதுக்காரிக்கும், அவன் பையனா தெரிய முடியுமா?"**[85] என்று கூறுவதிலிருந்து ஒரு பெண்ணுக்கு இந்த சமுதாயத்தில் எதையும் எதிர்த்துப் போராடும் உரிமை உள்ளது என்பதைப் புதுமைப் பெண்ணாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

**வரதட்சணை**

பண்டைகாலத்தில் மணமகன் மணமகள்களுக்குத் திருமணம் முடிந்ததும் மணமகள் வீட்டார் குடும்பம் நடத்துவதற்கு (அன்பளிப்பாகவும்) தட்சணையாகப் பணம், பொருள் தந்ததாகவும், அது காலப் போக்கில் தர தட்சிணையாக இருந்தது இப்போது வரதட்சணையாக மாறியதாகக் கூறுகின்றனர்.

வரதட்சணை என்பதற்குக் கொலம்பியா கலைக்களஞ்சியம் பின்வருமாறு பொருள் கூறுகிறது. ‘‘**இது திருமணத்தின்போது மனைவி கணவனுக்குக் கொண்டு வரும் சொத்தாகும். பிள்ளை வீட்டார் பெண் வீட்டாருக்கும், பெண் வீட்டார் பிள்ளை வீட்டாருக்கும் ஒருவருக்கொருவர் திருமணப்பரிசு கொடுப்பதோடு தொடர்புடையதாகவே தொடக்க காலத்தில் வரதட்சணைப் பழக்கம்தோன்றியது**”[86] என்று சசிரேகா கூறுகிறார்.

வரதட்சணை பழக்கமானது சமுதாயத்தில் பெண்ணின் மனித மாண்பினை அடியோடு அழித்து விடுகின்றது. வரதட்சணைக் கொடுமை காரணமாக இன்று சமுதாயத்தில் கருவில் இருப்பது பெண்குழந்தை என்றால் அதைக் கருவறையிலேயே கல்லறையாக்கி விடுகின்றனர். “**பெண்கள் மட்டும் பேசுவதால் பெண்களுக்கான உரிமைகள் பிறந்துவிடாது. பரந்த மனம் கொண்ட பெருந்தன்மையான ஆண்களின் மனதிலும் பெண்களின் உரிமைகளுக்கான நியாயங்கள் பதியனிடப்பட வேண்டும். அப்போதுதான் பெண்ணுரிமைகள் எங்கும் மலரும்**”[87] என்கிறார் இராஜ முத்திருளாண்டி.

வரதட்சணை இன்று பெண்ணினத்தை வேரோடு சீரழிக்கும் ஒரு சமூகக் கொடுமையாகத் திகழ்கின்றது. வரதட்சணைக் கொடுமையை ஒழிக்க அரசால் பல சட்டங்கள் இயற்றப்பட்டு, கடுமையாகக் கடைபிடிக்கப்பட்டு வருகின்றது. வரதட்சணை காரணமாக பல பெண்களுக்குத் திருமணம் நடக்காமல், பிறந்த வீட்டிலேயே உள்ளனர். சமூக அமைப்பில் ஆணுக்கு ஒரு நீதி பெண்ணுக்கு ஒரு நீதி என்று இருக்கும் வரை பெண்களுக்குச் சமுதாயத்தில் சமத்துவம் கிடைக்க வாய்ப்பில்லை.

பெண்ணடிமை பற்றி பேசுபவர்கள் அவர்கள் சுதந்திரமாக செயலாற்ற விடவேண்டும். அப்போதுதான் சமுதாய முன்னேற்றம் ஏற்படும். சமுதாய முன்னேற்றமே பெண்கள் முன்னேற்றமாகும். இதைத்தான் பாவேந்தர் அவர்கள் 'பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திருநாட்டு மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற் கொம்பே' என்று கூறுகிறார்.

வரதட்சணை பெறத் துடிக்கும் இன்றைய இளைஞர்கள், தன் தாய், தந்தையின் சொல்லை மீறாதவர்களாக உள்ளனர். தட்டிக் கேட்கும் உரிமை இல்லாதவர்களாகத் திகழ்கின்றனர்.

வரதட்சணையைப் பற்றி சு.சமுத்திரம் அவர்கள் 'மானுடத்தின் நாணயங்கள்' என்னும் கதையில் மார்த்தாண்டம் தன் மனைவி சிவகாமியிடம் எனக்கு வரவேண்டிய வரதட்சணை பணம் இரண்டாயிரத்தை வாங்கிக் கொண்டுதான் வரவேண்டும் என்று வீட்டை விட்டு வெளியே இரயில் ஏற்றி அனுப்பி விடுகின்றான். சிவகாமியோ பிறந்த வீட்டிற்குப் போய் அவர்களின் துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் நிலையில் இல்லை. படுத்த படுக்கையில் உள்ள தாய் தன் நிலையைப் பார்க்கக் கூடாது என்பதால், மீனாட்சி அம்மன் கோவிலில் ஒரு கோபுர வாசல் முன்னே வந்து நின்றாள்.

"கண்ணறியாப் பையன், கண் தெரியாக் கிழவி; ரோகக்காரர்கள்; ஊனமுற்றவர்கள்; ஞானம் பெற்றவர்கள். முதுமையில் தள்ளாடுபவர்கள் - முதலியவர்களை உள்ளடக்கிய அந்தப் பிச்சைக்காரக் கூட்டத்தைப் பார்த்தாள்; பிறகு துக்கத்தைச் சுமந்து, இப்போது துக்கத்தால் சுமக்கப் பட்டவள்போல் -

**சிவகாமி, அந்தக் கூட்டத்தில் ஒரு மூலையில் அவளுக்கென்றே ஒதுக்கப்பட்டது போலிருந்த இடத்தில் குழந்தையைத் துணியோடு சேர்த்துத் தரையில் கிடத்தினாள். குத்துக் காலிட்டு உட்கார்ந்தாள். கைகளைக் கிண்ணம் போல் குவித்துக் கொண்டாள்.**

**மானுடத்தின் 'நாணயங்கள்' குழந்தை கிடந்து துணியில் - கீழே விழுந்து கொண்டிருந்தன"[88]** வரதட்சணையின் கொடுமை, அனைவரும் இருந்தும் இந்த பெண் பிச்சை எடுத்துப் பிழைப்பு நடத்தும் பெண்ணாக உள்ளாள். இந்தச் சமுதாயத்தில் சாவைத் தேடி செல்லாமல் பிச்சை எடுத்தாவது உயிர் வாழ வேண்டும் என்ற கொள்கை உடைய இலட்சிய பெண்ணாகக் காட்டுகிறார்.

**வரதட்சணை தீர்வு**

'திருடராய்ப் பார்த்துத் திருந்தா விட்டால் திருட்டை ஒழிக்க முடியாது' என்ற கண்ணதாசனின் பாடலுக்கு ஏற்ப, ஆண் மகன் தன்னிடம் உள்ள பொருள் போதும். எனக்கு எதுவும் வேண்டாம் என கூறும் காலம் வரும் வரையிலும், இந்த கொடுமையை ஒழிக்க முடியாது. இந்த சமூகக் கொடுமையைக் களைவதற்கு அரசு பல சட்டங்கள் இயற்றியுள்ளது. தகவல் தொடர்பு சாதனங்கள், மூலமாகவும் படைப்பு இலக்கியங்கள் மூலமாகவும், மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும். மக்களின் விழிப்புணர்வு மூலமாகவே இக்கொடுமையைக் களைய முடியும். படைப்பாளர் என்ற முறையில் சு.சமுத்திரம் வரதட்சணை கொடுமைகளைப் பற்றிப் பல கதைகளில் கருவாகப் படைத்துள்ளார். வரதட்சணைக் கொடுமை நீங்க, 'பனையேறி குடும்பத்தைச் சேர்ந்தவன்' எனும் கதையின் மூலம் தன் கருத்தை முன்னிறுத்துகிறார்.

நடராஜனின் திருமணத்தின்போது அவனது அப்பா, ஒவ்வொரு செயலிலும் தான் கூறிய நகை வரவில்லை என்று திருமணத்தைத் தடுத்து நிறுத்துகின்றார். அதுவும் ஒரு காலகட்டத்தில் ஆசாரியை அழைத்து வந்து எடைபோட்டு எடை குறைகின்றது என்று பார்த்தவர். அப்பா சொல் மீறாத மகனாக நடராஜன் இருந்தான். திருமணம் நடந்து நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன. இப்போது மனைவி சொல்லே மந்திரம் என்று இருந்தான். வேலாயுத நாடார் மருமகளைப் பார்க்கச் செல்கின்றார். அப்போது கல்யாண நேரத்தில் இவர் கூறியதைச் சொல்லிக் காட்டுகிறாள் கனகவல்லி. வேலாயுத நாடார் கூனிக் குறுகி உட்கார்ந்து சிந்தித்தார். அதுவும் **"மருமகளிடம் போக வேண்டிய காலம் வரும். ஒரேயடியாய் கல்யாண சமயத்துல தாம்தூம்முன்னு குதிக்காதிங்கடா. மருமகளோட மனசு உடையும்படியா எதுவும் பண்ணாதிங்க ... கடைசி காலத்துல அவள்களோட தயவு தேவையென்பதை மறந்து கல்யாண சமயத்துல தயவு காட்டாம இருந்தீங்கன்னா அப்புறம் ஒன்றும் நடக்காது. ஊருக்குப் போனதும், வயதுப் பையன்களை வைத்திருக்கும் வருங்கால மாமனார்க்குப் புத்திசொல்ல வேண்டும் என்று அந்த இக்கட்டான சமயத்தில் வேலாயுத நாடார் நினைத்துக் கொண்டே, பேரனின் கையை பிடிக்கப் போனார்"**[89] எனும் கருத்து மூலம் பெண் என்பவள் நினைத்தால், வரதட்சணையை ஒழித்து விடலாம் என்று புரட்சிப் பெண்ணாக கனகவல்லியைக் காட்டியுள்ளார். பெற்றோர்கள் பொறுப்புடன் செயல்பட்டால் வரதட்சணைக் கொடுமையைப் பெருமளவு ஒழித்து விடலாம் என்பதும் ஆசிரியர் கருத்தாகும்.

## பெண்ணுரிமை

பெண்கள் ஆண்களைச் சார்ந்து வாழ்வது இயல்பு என்றாலும், ஒவ்வொருவரும் தன்னம்பிக்கையுடன் வாழ்வது அவசியமாகிறது. தன் கணவனைத் தான் தேர்ந்தெடுக்கும் உரிமை ஒரு பெண்ணுக்கு வழங்க வேண்டும்.

உரிமையற்ற வாழ்வு, அடிமை வாழ்வு. பெண்கள் கடமையாற்றவே பிறந்தவர்கள், உரிமை கூறும் தகுதி அவர்களுக்கு இல்லை என்னும் எண்ணங்கள் ஆண்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்துள்ளன.

'அம்மையப்பன்' எனும் கதையில் பாமா தன் கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பற்றித் தன் அம்மாவிடம் கூறும்போது, **"போம்மா ... மொத்தல அந்த 'பெல்லோ' எனக்குப் பிடிக்குதான்னு பார்க்கணும். அதுக்கு ... நான் பிடிக்குதான்னு பார்க்கணும். நான் எப்படி இருப்பேனோ அப்படித்தான் இருக்கணும் ... சும்மா சேரியைக் காட்டி, சீட் பண்ணப்படாது ... டாடியும் இதைத்தான் சொல்வார். ஆனால் நீங்க அசல் கூஸ் ..."**[90] என்ற கூற்றின் மூலம் இன்றைய மாறி வரும் புதிய சமுதாயத்தில் தனது கணவனைத் தானே தேர்ந்தெடுக்கும் உரிமையுள்ள பாரதி காட்டும் புரட்சி பெண் போன்று படைத்துள்ளார்.

## பாலியல் கொடுமை

இன்றைய சமுதாயத்தில் முதல் இடம்பெறுவது இதுதான். அன்றாடம் செய்தித்தாளைப் பார்த்தால் பாலியல் தொந்தரவு செய்தி அவசியம் இருக்கும். இந்தப் பாலியல் தொந்தரவு குறிப்பாக ஏழை மக்களிடம் தான் நடைபெறுகின்றது. படித்த

மேல்மட்டத்தில் உள்ளவர்களும், சிற்றூர்களில் பெரிய பதவியில் உள்ள பெரிய மனிதர்களாலும் தான் குறிப்பாக நிகழ்கின்றன.

பாலியல் கொடுமைகளில் இருந்து பெண்களைக் காப்பாற்றுவதற்குப் பல சட்டங்களை அரசு இயற்றியுள்ளது. இந்தச் சட்டங்களைச் செயல் அளவில் நடைமுறைப்படுத்துவதில் பல தடங்கல்கள் உள்ளன.

பாலியல் கொடுமைக்கு ஆளாகும் ஏழை பெண்களின் நிலையை சு.சமுத்திரம் அவர்கள் தன் படைப்பின் மூலம் சமுதாயத்திற்குக் காட்டுகிறார்.

'போதும் உங்க உபகாரம்' எனும் கதையில் காத்தாயி, உடல் ஊனமுற்றவள், பிச்சைக்காரப் பெண். தன் பாட்டியின் அரவணைப்பில் வளர்ந்து வருகின்றாள். மழை பெய்வதால் தங்க இடமில்லாமல், தவிக்கின்றனர். தெரு ஓரம் தன் இனத்துடன் ஒதுங்குகின்றனர். அப்போது ஒருவன் காத்தாயிக்குத் துணி போர்த்தி விடும் சாக்கில் அவள் உடலை உரசிப் பார்க்கின்றான். உடனே தன் பாட்டியிடம் **"காத்தாயி, துள்ளிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். கர்மம், அந்த பணக்கார புள்ளதான் கவல இல்லாம திங்ற ஜோர்ல கஸ்மாலமா நடந்துகின்னான்னு நெனச்சா, இங்க கூடவா? ஆயா, எழுந்துடு, இந்த இடத்துல ஒரு செகண்ட் கூட இருக்கப்படாது.**

**தூங்கிக் கொண்டிருந்த கிழவி எழுந்தாள். நிலைமையை ஊகித்தவள் போல், 'ஏண்டாப்பா, அனாதையா, பட்டமரம் மாதிரி நிக்றோம். வாலாட்றதுக்கு நாங்கதானா வாச்சோம்? வாத்தியாரு பிள்ளையாண்டான் இரக்கமுள்ளவனாக்த தோணுது. இருந்தும் எதுக்காக இங்க தங்க சௌகரியப்படாதுன்னு**

சொன்னான்னு நான் குழம்புனதுக்கு அர்த்தம் இப்போதான் புரியுது ... நீங்க சோதாப் பசங்கங்கறது"[91]

ஒரு பிச்சைக்கார பெண், அதுவும் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, உறங்க இடமின்றி, ஒட்டுத் திண்ணையில் ஒண்டி வாழும் ஏழைப்பெண், காந்தியடிகள், 'எப்போது பெண் ஒருத்தி நள்ளிரவில் இந்தியத் தெருக்களில் அச்சமின்றி நடமாட முடிகின்றதோ அப்போதுதான் உண்மையான சுதந்திரம் கிடைத்ததாக மகிழ்வேன்' என்றார். ஆனால் ஒரு உடல் ஊனமுற்ற பிச்சைக்கார பெண் அவள் கூட நடமாட முடியவில்லை என்ற கருத்தை ஆசிரியர் சு.சமுத்திரம் எடுத்துரைக்கின்றார்.

**விதவைகள்**

இளம் விதவைகளின் மனப் போராட்டங்கள், உடல் சிக்கல்கள், உள்ள சிக்கல்கள், அவர்கள் சமுதாயத்தில் படும் இடர்ப்பாடுகள் இன்னல்கள் பற்றி எண்ணிப் பார்த்தால், ஆண்களின் மனமே அழுதுவிடும் அவ்வளவு கொடுமைகள்.

விதவையானவள் தன் தாயே ஆனாலும் விழித்தவுடன் எதிரில் வந்தாலும் வெளியே செல்லும்போது எதிரில் வந்தாலும் சகுனம் சரியில்லை என்று கூறும் சமுதாயம் இது.

கணவனை இழந்த பெண் கலை இழந்த பெண்ணாகவே கருதப்பட்டாள். விதவையைப் பற்றி கவிஞர் தமிழ் அம்பி கூறும்போது,

> **"கன்று முட்டி எச்சில் பட்ட பசுவின் பாலை**
> **கறந்து வந்து குடிப்பதற்கு மனிதர் உண்டு**
> **வண்டு வந்து சுவைத்திட்ட மலரை தேடி**
> **வாங்கி வந்து கூந்தலிலே வைப்பர் உண்டு.**

அன்றவளை தன் உயிரினுள் உயிராய் எண்ணி
அணைத்தவனே 'விதவை' என ஆக்கி சென்றான்
இன்று மிக நலிந்து விட்டாள் அவளை ஏற்று
இதயத்தை தேற்றுவதற்கேன் எவரும் இல்லை"

என்கிறார். இன்றைய சமுதாயத்தில் விதவைகளின் நிலைமை இதுதான். இந்த நிலையில் உள்ள பெண்களும் சமுதாயத்தில எதையும் சாதிக்க முடியும் என்பதை சு.சமுத்திரம் 'பழத்தை தாங்கிய சருகு' எனும் கதையில் திருமலையாச்சிக்குத் திருமணம் ஆகி, முதல் குழந்தை பிறந்த உடன் கணவன் இறந்து விடுகின்றான். இருந்தாலும் மனம் தளராமல், "திருமலையாச்சி. கணவனின் நினைவாக ஆறுமுகத்தைப் பார்த்துப் பார்த்து தன்னை தேற்றிக் கெக்டாள். பிறந்த வீட்டிற்குப் போக மறுத்து, கணவன் வீட்டிலேயே தங்கினாள். 'கொழுந்தன்மார்கள்' சொத்தைக் சுருட்ட நினைத்தார்கள். ஆனால் நாட்டாண்மைக் காரரும், சொந்தக்காரர்களும் தலையிட்டு கணவன் பாகத்துச் சொத்தை அவளுக்குப் பிரித்துக் கொடுத்தார்கள். பறிபோன தாலியை விற்று, அவள் ஒரு காரை வீடு கட்டினாள். இதர நகைகளை விற்று பசுமாடுகள் வாங்கி, வீட்டில் இருந்தே பால் விற்றாள். இப்போது யாரையும் எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இல்லாதபடி, சுயதேவைப் பூர்த்தியோடு வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது"[92] என்பதன் மூலம் ஒரு பெண் இந்த சமுதாயத்தில் எதிர்த்துப் போராடி வாழலாம் என்பதையும், நாம் விதவை என்ற எண்ணம் இல்லாமல், எதையும் சாதிக்கலாம் என்பதையும், குறிக்கோளுடைய எண்ணத்தோடும் திகழ வேண்டும் என்பதையும் வெளிப்படுத்துகிறது.

பெண்ணியம், பெண்ணியல், பெண்ணியவாதம் என்ற சொற்களால் வழங்கப்படும் பெண்ணியம் என்பது சமுதாய இயக்கமாகவும், தத்துவக் கோட்பாடாகவும் இனம் காட்டப்பட்டுள்ளது. இருந்தாலும் சமுதாயத்தில் பால் வேறுபாடுகள் பார்க்காமல் ஆணுக்கு இணையாகப் பெண்ணுக்கும் உரிமைகள் கிடைக்க வேண்டும் என்பதை அடிப்படை கருத்தாக எண்ண வேண்டும் என்கிறார்.

**நீதிமன்றங்கள்**

நாட்டில் நீதியை நிலைநாட்டக் கூடியதும் செய்த தப்புக்குத் தண்டனை வழங்கக் கூடியதும் நீதிமன்றங்கள். இல்லையென்றால், தவறுகள் தடுத்து நிறுத்த வழியில்லாமல் போய் இருக்கும். நாட்டின் நிருவாகத்தில் முக்கிய பொறுப்பு வகிக்கக் கூடியது நீதிமன்றங்கள் தான். நீதிமன்றத்தின் முன் அனைவரும் சமம். இங்கு உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பாகுபாடு கிடையாது. அப்படிப்பட்ட நீதிமன்றங்களின் தற்கால அவலநிலையைப் பற்றி சு.சமுத்திரம் கதைகளின் மூலம் பாமர மக்களும் புரிந்து கொள்ளும்படி படைத்துள்ளார்.

'வாய்தா' எனும் கதையில் இருசப்பனின் தாய் முருங்கக்காய் பறிந்து வந்ததாக மேலத் தெரு வீட்டுக்காரர்கள் அவள் மடியைப் பிடித்து இழுத்து அரிசியைக் கொட்டி விடுகின்றனர். இதைப் பார்த்த இருசப்பன் கையில் அரிவாளை எடுத்துக் கொண்டு வெட்ட ஓடுகின்றாள். அவர்கள் ஓடி விடுகின்றனர். இந்நிகழ்ச்சி நடந்தபோது இருசப்பன் 20ஆவது வயது, இப்போது 30 வயது ஆகிறது. இதுதான் கடைசி வாய்தா இந்த முறை தீர்ப்புச் சொல்லி விடுவதாகக் கூறினார் நீதிபதி.

"என்ன ஸார் அநியாயம் ... ? போன வாய்தாவுல, இந்த வாய்தாதான், வாதிக்கு கடைசின்னு ... அய்யா சொன்னாருக ... எதிர் பார்ட்டி வராட்டால், கேஸ தள்ளுபடி செய்யப்போறதாய் வேற, கோபம் கோபமாய் பேசினாரு ... ஆனால், இப்போ என்னடான்னா?

இதெல்லாம் கோர்ட்ல சகஜம்

எது ஸார் சகஜம் ...? எருதுக்கு நோவு ... காக்கைக்கு கொண்டாட்டம் என்கிற சகஜமா ...? சாதாரண மனிதன்கூட, தான் சொன்ன வார்த்தையை காப்பாற்றணும். அய்யாவோ, பெரிய நீதிபதி. யாருக்கும் இல்லாத அதிகாரம் கொண்டவர். இவர் சொன்ன வார்த்தையை இவரே மதிக்கலன்னா, அதுக்கு பேரு சகஜமா? நல்ல கோர்ட்டு ... நல்ல அய்யா ...?"[93] என்பதில் நீதித்துறை இப்போது நிதித்துறை ஆகிவிட்டது என்பதும் சட்டத்தின் மூலம் திருடுபோன ஆட்டை அடைய வேண்டும் என்றால், மாட்டை விற்று தான் செலவு செய்ய வேண்டும் என்ற பழமொழி போல் இவனது நிலையும் ஆகிவிட்டது. ஒரு ஏழைத் தாய் மீது கூறப்பட்ட பழியைப் போக்கப் பத்து வருடம் நீதிமன்றம் நடந்தும் இன்னும் வழக்கு முடிந்தபாடில்லை. இன்றைய சமுதாயத்தில் ஏழைகளுக்கும் பொருள் இல்லாதவர்களுக்கும் நீதி கிடைப்பது எட்டாக் கனியாகி விட்டது என்பதை ஆசிரியர் தெளிவுபடுத்துகிறார்.

**மனிதநேயம்**

தனக்காக வாழ்பவன் சுயநலக்காரன், பிற உயிர்களுக்காக வாழ்பவன் கருணையுள்ளவன். அவனே கடவுள். அவனே மனிதன். இவன் கரைந்த பின்னும் மனிதர்களோடு வாழ்பவன்.

## மனித நேயம்

மனித நேயம் என்பது அடுத்த மனிதனிடத்தில் அன்பு காட்டுதல், மற்றவரையும் தன்னைப்போல் ஒருவன் என மதித்தல் ஆகும். சாதி, மதபேதமின்றி அனைவரிடத்திலும் அன்புணர்வை ஏற்படுத்துதல் ஆகும். மனிதனை மனிதனாகப் பார்ப்பது மனித நேயம் என்று கொள்ளலாம்.

தனக்காக மட்டும் வாழ்பவன் சுயநலவாதி ஆவான். அவனே, பிறருக்காக வாழ்ந்தால் கருணையுள்ளவன் ஆகின்றான். கருணையும் அன்பும் உள்ளவன் எவனோ அவனே கடவுள் ஆகின்றான். எனவே பிற உயிர்களிடத்தில் அன்பு செலுத்துபவன் கடவுளுக்கு ஒப்பாகின்றான். இந்த மனித நேயமானது சமுதாய மேன்மைக்கும் உறவுமுறைக்கும் ஓர் பாலமாக அமைகின்றது.

மனிதனுக்குத் துன்பம் நீங்கிய இன்பமான, வளமான வாழ்வு அவசியமாகிறது. இதனைப் பூர்த்தி செய்வதற்கு மனித நேயம் அவசியம் தேவை. மனிதன் மனிதனாக வாழ வேண்டும் என்பதே சங்ககாலம் முற்கொண்டு தற்காலம் வரை அனைவருடைய எதிர்பார்ப்பும் ஆகும். அந்த வகையில் அரசும் இதனைச் செயல்படுத்த பல திட்டங்களைப் போற்றி வருகின்றது. மனிதன் காவல்துறையினர் மீது வெறுப்புக் கொண்டுள்ளான். அவர்களைக் கண்டால் அஞ்சுகின்றான். இதனைப் போக்க 'மக்கள் நேச காவல்' என புதிய முறையை அரசு கையாண்டுள்ளது.

மனிதனுடைய வாழ்க்கையில் பணம் ஓர் அங்கமாகத் திகழ்கிறது. மனிதனுடைய இன்றியமையாத தேவையாகவும் அமைந்து விட்டது. இந்த ஆசையின் காரணமாக அவன் மனிதனை இழிவுபடுத்தத் தொடங்கி விட்டான். எனவே

பணத்தைப் பணமாகவும், குணத்தைக் குணமாகவும் கையாண்டால் மனிதநேயம் வளரும், நாடு செழித்தோங்கும். ஆகவே ஒவ்வொருவரும் மனிதநேயம் காக்க வேண்டும்.

மனிதன் மனிதனை மதித்தல் வேண்டும். உண்மையான அன்பு கொள்ளல் வேண்டும். சமுதாயத்தில் வாழும் ஒவ்வொரு மனிதனும் நாம் விரும்புகின்றவனாகக் காணமுடியவில்லை. தன்னலம் பேணுபவர்களாக உள்ளனர். இத்தன்னலப் போக்கே சமுதாயத்தில் பல தீய சக்திகள் தோன்றுவதற்குத்துணைபுரிகின்றது.

மனிதநேயம் உயிர்களின் இயல் புணர்ச்சியாகும் மதம், மொழி, இனம் பார்க்காமல் ஒருவருக்கொருவர் அன்புடனும், பண்புடனும் பழகுதல் மனித இனத்திற்கு வேண்டுவதாகும். எளியோர் முதல் செல்வந்தர் வரை மனித நேயத்துடன் நடந்து கொள்வது சமுதாய வளர்ச்சிக்கு உகந்தது. ஏழை, எளியவர், பொருள் உள்ளோர், பொருளற்றோர், ஆண், பெண் என்று இகழாமல் அவர்களும் நம்மைப் போன்று மனிதர்கள் என்ற எண்ணத்துடன் செயல்பட வேண்டும்.

சிலரின் மனித நேயமற்ற செயல் சமுதாயத்தில் எத்தகைய தீய விளைவுகளை ஏற்படுத்துகிறது என்பதை சு.சமுத்திரம் 'இலவு காத்த பலவேசம்' என்னும் கதையில் காட்டுகிறார். பலவேசம் தன் மகனுக்குக் கிடைக்காத பெண்ணின் வாழ்வைச் சிதைக்க எண்ணி வண்ணாத்தியான செல்லகிளியிடம் "சாயங்காலம் என் வீட்டுக்கு வாராரு. நான் தங்கமான பொண்ணுன்னு சொல்லிட்டு எதுக்கும் வண்ணாத்திகிட்ட கேளுமுன்னு சொல்லுவேன் ... நீ மூணுமாசமா ... தீட்டுச் சீல வெளுக்கலன்னு சொல்லிடு. அவரு, பொண்ணுக்கு

மூணுமாசமுன்னு தீர்மானிச்சிடுவாரு. சாயங்காலம் அவர இங்க கூட்டி வரட்டுமா?"[94] என்று மனிதநேயமற்ற கொடுஞ்செயலை குறிப்பிடுகின்றார்.

மனித நேயத்தின் மதிப்பை உணர்த்துவதற்காக செல்லக்கிளி என்னும் பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்துவிடல்' (குறள். 314)

என்ற மனித மாண்புடன் படைத்துள்ளார்.

இன்றைய சமுதாயத்தில் மனித நேயமற்ற மனிதர்களும் உண்டு என்பதையும் அவர்களைப் பற்றியும் அவர்களின் செயல்களைப் பற்றியும் படைத்துள்ளார்.

'உடன் பிறவா உறவுகள்' எனும் கதையில் மேலாளர் தனக்குக் கீழே பணிபுரியும் பியுன் ராமனைத் தன் சொந்த நலனுக்குப் பயன்படுத்துவதற்காக அவனுக்கு வரவிருந்த பணியிடமாற்றத்தையும் கொடுத்து விட்டார். ராமன் மனைவி உடம்பு முடியாமல் இருப்பதாக அவனுக்குக் கடிதம் வந்துள்ளது. அதுவும் எப்படி என்றால், என்னைப் பார்க்க வரவில்லை என்றாலும் பரவாயில்லை, என் கரும காரியத்திற்காவது வந்து விடு என்று எழுதி இருந்தாள். இந்த நிலையை எம்.டி.யிடம் கூறி தனக்குத் தன் சொந்த ஊருக்கு மாறுதல் கேட்டிருந்தான். அவரும் சரி என்று கூறிவிட்டார். ஆனால் மேனேஜர் எம்.டி.இடம் "அவன் ஒரு மாதிரி ரப்பியன் டைப் ஸார் ... இப்போ நம்ம கண்காணிப்பில் இருக்கதால ஒழுங்கா இருக்கான் ... இல்லன்னா ஆட்சளை அடிச்சி போட்டுருவான் ... சாதுவா இருக்கதுபோலத் தெரிஞ்சாலும், அசல் அரக்கன் ... பட் ஒன் திங் ... ஆறு

மாதம் வாட்ச் பண்ணிட்டு .... அப்புறமாய் யோசிக்கலாம்"[95] என்பதில் மனித நேயமற்றோரின் கொடுஞ்செயலைக் குறிப்பிடுகின்றார்.

பணிபுரியும் ஊழியர்களிடையே மனிதநேயமின்மையால் ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையில்லாதிருக்கின்றனர். தன் சொந்த நலனுக்காக, பிறர் வருத்தத்தைப் புரிந்து கொள்ளாமல், மனம் புண்படும்படி நடந்து கொள்கின்றனர். இன்றைய சமுதாயத்தில் மனித நேயமின்மையால் ஏற்படும் சிக்கல்களை இக்கதை மூலம் வலியுறுத்துகின்றார்.

**சமுதாய மாற்றம்**

பண்டைய சமுதாயத்திலிருந்து இன்றைய சமுதாயம் பெருமளவில் மாற்றம் நிறைந்ததாகக் காணப்படுகின்றது. இதற்கெல்லாம் மனிதனுடைய வாழ்வில் கலந்துள்ள நாகரிகம் என்று கொள்ளலாம். நாகரிகத்தின் வளர்ச்சியால் சமுதாயம் மாற்றம் அடைகின்றது.

ஒரு நாட்டின் பண்பாடு, கலாச்சாரம் ஆகியவை போற்றி பேணிக்காக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் நாடு வளமான நாடாக இருக்க முடியும். இவற்றில் மாற்றங்கள் ஏற்படின் சமுதாயத்தில் மாற்றங்கள் ஏற்படும். சமுதாயத்தின் மீது மனிதன் அக்கறை கொள்ள வேண்டும். நாட்டின் பொருளாதாரத்தை மட்டுமே பார்க்கக் கூடாது. பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம் ஆகியவற்றின் மீதும் அக்கறை கொள்ள வேண்டும்.

சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழும் கூட்டமைப்பு ஆகும். ஆகையினால் அவனது வாழ்வியலை அடிப்படையாக

கொண்டது ஆகும். அவன் தான் வாழும்போது எப்படி வாழ்கின்றோம், எவ்வாறு வழிநடத்தப்படுகின்றோம். அடுத்தவரை எவ்வாறு வழிநடத்துகின்றோம் என்பதை ஆராய்ந்து பார்த்தால் சமுதாய மாற்றமானது புலனாகும். சமுதாயமானது மாற்றங்களைக் கொள்ள வேண்டும். கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் மாற்றங்கள் நிகழலாம். பண்பாடு, கலாச்சாரங்களில் அதிக மாற்றங்கள் கொள்ளாமல் இருந்தால் நாடு வளமானதாக அமையும்.

### சமுதாய வளர்ச்சி

இவ்வுலகில் வாழும் மக்களே 'சமுதாயம்' எனப்படுகின்றனர். இந்தச் சமுதாயத்தில் வாழும சூழ்நிலையில் பல சிக்கல்களை ஏற்க வேண்டியுள்ளது. ஆகவே, இன்பமும் துன்பமும் நிறைந்ததே சமுதாயம். தனிமனிதன், குடும்பம், அதனைத் தொடர்ந்தே சமுதாயம் உருவாகின்றது.

**"சமுதாயம் செம்மையும் முன்னேற்றமும் அடைய வேண்டும் என்பதும் அதற்கு இலக்கியம் உதவ வல்லது என்றும் கருதும் இலக்கிய கர்த்தா சமுதாயத்திற்கு அவசியமும் அர்த்தமும் பொருந்தியதை ஏற்ற ஊடகத்தின் வாயிலாகவே சொல்ல முனைவான் என்றில்லை"**[96] என தில்லைநாதன் சமுதாய முன்னேற்றம் பற்றி கருத்துக் கூறுகின்றார்.

சமுதாயத்தில் யாரும் தனித்து வாழ்ந்துவிட முடியாது. தனது தேவைகளுக்காக ஒருவர் மற்றவர்களுடன் உறவாடுவது உலக இயற்கை. மனிதன் தன் தேவைகளைத் தன் உழைப்பினால் மட்டுமே பெற்றுவிட முடியாது. தான் வாழும் சமூகத்தின் உறுப்பினர்களிடையே உழைப்பையும் சார்ந்தே வாழ வேண்டிய சூழலில் இருக்கின்றான்.

27 மேலது, பக்.107-108.

28 மேலது, ப.355.

29 மேலது, பக்.373 - 374.

30 மேலது, பக்.270 - 271.

31 மேலது, பக்.56 - 57.

32 மேலது, பக்.604 - 605.

33 கி.இராசா, இந்திய பெண்ணியம், ப. 20.

34 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், ப. 190.

35 மேலது, ப. 194.

36 மேலது, ப. 331.

37 பாரதியார், பாரதியார் கவிதைகள்

38 ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், ப. 119.

39 அப்துல் ரகுமான், மகரந்த சிறகு, ப. iii

40 குமுதம் வார இதழ், நாள் 20.1.1994, ப. 6.

41 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், ப. 18.

42 மேலது, ப.354.

43 மேலது, பக். 631-632.

44 மா.சிங்காரவேலன், பொதுவுடமை விளக்கம், ப. 19.

45 கோ.குலோத்துங்கன், உழைப்போம் உயர்வோம், ப. ii.

46 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், ப. 610.

47 மேலது, ப. 625.

48 மேலது, ப.414.

49 மேலது, ப.286.

50 மேலது, ப.290.

51 மேலது, ப. 191.

52 மேலது, ப.217.

53 மேலது, ப.543.

54 மேலது, பக். 130-131.

55 மேலது, ப.4 407.

56 மேலது, ப.18.

57 மேலது, பக். 89-90.

58 மேலது, ப. 91.

59 மேலது, ப. 42.

60 மேலது, ப. 423

61 Encyclopaedia, Volume III, ப. 254.

62 ஏ.எஸ். வேலு, பெரியார் ஒரு சரித்திரம், பக். 182-183.

63 பெரியார், ஈ.வெ.ராமசாமி, அய்யா மொழி, ப. 60.

64 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், ப. 80.

65 மேலது, ப. 512

66 மேலது, ப. 228.

67 மேலது, ப. 231.

68 மேலது, ப. 83.

69 மேலது, ப. 559.

70 மேலது, பக். 583-584.

71 செ.கணேசலிங்கம், ச.செந்தில்நாதன் தமிழ் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு - ப. 95.

72 தா.வே.வீராசாமி, தமிழில் சமூக நாவல்கள், ப. 69.

73 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், ப. 174.

74 மேலது, ப. 524.

75 சதாசிவம், வளரும் தமிழ் உலகம், ப. 12.

76 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், பக். 552-553.

77 சு.புவனேஸ்வரி, திலகவதி படைப்புகள் ஓர் ஆய்வு, ப. 64.

78 சண்முக சுந்தரம் (தொ.ஆ), பெண்ணியமும் கலை இலக்கிய பிரதிகளும், ப. 13.

79 கி.இராசா, இந்திய பெண்ணியம், ப. 92.

80 தேசிய விநாயகம் பிள்ளை, மலரும் மாலையும், ப. 143.

81 ஏ.எஸ். வேலு, பெரியார் ஒரு சரித்திரம், ப. 127.

82 அன்னம் இறையியல் சிற்றேடு, ப. 30.

83 அ.குழந்தைசாமி, இருபதாம் நூற்றாண்டிற்குள் கிறிஸ்துவ புதினங்களால் மனித விடுதலை, ப. 109.

84 சு.சமுத்திரம், சு. சமுத்திரம் சிறுகதைகள், பக். 163, 164.

85 மேலது, ப. 351.

86 சிவ.சசிரேகா, தமிழ் இலக்கியங்கள் காட்டும் மகளிர் நிலை, பக்.209-211.

87 ராஜ முத்திருளாண்டி, *மனித உரிமைகளும் இலக்கியங்களும்*, ப.78.

88 சு.சமுத்திரம், *சு. சமுத்திரம் சிறுகதைகள்*, பக். 145-146.

89 மேலது, ப. 577.

90 மேலது, ப. 252.

91 மேலது, பக். 205-206.

92 மேலது, பக். 600-601.

93 மேலது, ப. 468.

94 மேலது, ப. 75.

95 மேலது, ப. 457.

96 சி.தில்லைநாதன், *இலக்கியமும் வாழ்க்கையும்*, ப. 20.

# முடிவுரை

- கதைசொல்லும் பழக்கம் தமிழரிடம் தொன்றுதொட்டு வழக்கிலிருப்பினும், ஆங்கிலேயர் வருகையால் தமிழுக்குக் கிடைத்த புது இலக்கிய வடிவம் சிறுகதையாகும்.
- நறுக்குத் தெரித்தார்போல் பொருண்மையை அளவான பாத்திரங்களுடனும் சொற்கட்டுடனும் போதுமான உத்திகளைக் கொண்டு வெளிவருவது இவ்விலக்கிய வடிவத்தின் தனிச்சிறப்பாகும்.
- தமிழில் சிறுகதை எழுத்தாளர்கள் ஏராளம் உள்ளனர். இருப்பினும் குறிப்பிடத்தக்க எழுத்தாளர்களுள் ஒருவர் சு.சமுத்திரம்.
- தனக்கென சில பாணிகளைக் கொண்டு எழுதுபவர் இவர். இவருடைய கதைகளில் உள்ளடக்கக் கூறுகளில் சில தனித்தன்மைகள் வெளிப்படுகின்றன.
- திருநெல்வேலி மாவட்டம் திப்பணம்பட்டியில் 15.12.1941இல் பிறந்தவர். தந்தை சுப்பையா நாடார். தாய் திருமலை ஆச்சி. உடன்பிறந்தவர்கள் யாரும் இல்லை. சிறுவயதிலேயே தந்தை, தாயை இழந்து வறுமையில் சித்தியிடம் வளர்ந்தவர். 01.04.2003இல் விபத்தொன்றில் இயற்கை எய்தினார்.
- சிற்றூரிலும், சென்னைப்பட்டினத்தில் சேரிப்பகுதியிலும் வாழ்ந்ததால் ஏழைகள், விளிம்புநிலை மக்களின் வாழ்வியலைத் தாய்மை உணர்வுடன் நோக்குபவர்.

யதார்த்தக் குணம் உடையவர். அதே வேளையில் போராட்டக் குணமும் இவரிடம் இயல்பாக இருந்துள்ளது.

❖ கவிதை, கட்டுரை எழுதும் ஆற்றலும் இவருக்குண்டு என்பது பெறப்படுகின்றது.

❖ வில்லுப்பாட்டு, நாடகக்கலைஞராகவும் திகழ்ந்தவர்.

❖ இதழியல் துறையில் பணிபுரிந்த சிறப்பும் உடையவர். இவரது படைப்புகள் பல இதழ்களில் வெளிவந்துள்ளன.

❖ பல்வேறு அரசுப் பணிகளில் பணியாற்றியதால் தமது பணி அனுபவங்களைப் பல்வேறு படைப்புகளில் ஆங்காங்கே பதிவு செய்திருக்கின்றார்.

❖ இவரது படைப்புகள் பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றிலும் வெளிவந்துள்ளன. சில படைப்புகள் திரைப்படமாகவும் எடுக்கப்பட்டுள்ளன.

❖ சிறந்த படைப்புகளுக்காக பல்வேறு பாராட்டுக்கள், விருதுகள், பரிசுகள் பெற்றவர்.

❖ சு.சமுத்திரத்தின் படைப்புகள் பல கல்லூரிகள் பல்கலைக்கழகங்களில் பாடநூலாக இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

❖ நா.வானமாமலை, க.கைலாசபதி, கா.சிவதம்பி, அகிலன், வல்லிக்கண்ணன், சிதம்பர ரகுநாதன், ச.மெய்யப்பன், ராமகுருநாதர் மற்றும் பல திறனாய்வாளர்கள் இவரது படைப்புக்களைத் திறனாய்வு செய்திருப்பது இவரது படைப்புத்திறனுக்குச் சான்றாகும்.

- அன்பு, மனிதநேயம், நட்புணர்வு, உண்மை நாட்டம், நியாய மனப்பான்மை, மெய்த்துணிவு, கடுமையான உழைப்பு, தன்னம்பிக்கை போன்றவை இவரது கதைகளில் கருப்பொருளாக இடம்பெற்றுள்ளன.
- பெண்ணியச் சிந்தனை கொண்டவர் என்பதும் வெளிப்படுகின்றது. மத நல்லிணக்கவாதியாகவும் திகழ்ந்துள்ளார்.
- இளைஞர்கள், தொழிலாளர்கள், திரைப்படக் கலைஞர்கள், அரவாணிகள், அடித்தளமக்கள் பற்றி எழுதியுள்ளமை இவரது சமூக நோக்கிற்குச் சான்றுகளாகும்.
- கதைகளில் அரசு அலுவலகங்கள், நீதித்துறை, காவல்துறை போன்றவற்றையும், விஞ்ஞானிகள் பற்றியும் விமர்சித்திருப்பது இவரது துணிவுக்குச் சான்றாகும். அதிகார வர்க்கத்தின் போலித்தனத்தை,ஆடம்பரத்தைச் சாடியுள்ளார்.
- அரசு ஊழியர்களுக்கு எல்லா நாட்களும் பணி நாட்கள் தான் என்று கூறியுள்ளார்.
- நிலவுடைமையாளர்கள், முதலாளிகள், அரசு அதிகாரிகள் போன்றவர்களின் அடாவடிச் செயல்களையும் ஏழைகளுக்கு நீதி எட்டாக்கனியாக இருப்பதையும் தெளிவுபடுத்தியி இருக்கிறார்.
- குடும்பப் பிரச்சினைகள், சமூகத்தில் நிலவும் வரதட்சணை, லஞ்சம், விவசாயிகள் பிரச்சினை போன்றவற்றையும் தனது படைப்புகளில் எடுத்துக்காட்டியிருக்கின்றார்.

❖ சமூகத்தில் நிலவும் சாதிய ஏற்றத்தாழ்வுகளையும் இரட்டைக் குவளை முறையையும் கண்டு வருந்தி, இவை ஒழிய வேண்டியவை என்பதை வலியுறுத்துகிறார்.

❖ இவரது கதைமாந்தர்கள் நடப்பியல் தன்மை கொண்டவர்களாகவும் குறிக்கோள் மாந்தர்களாகவும் வெளிப்படுகின்றனர். குணங்கள், கொள்கைகள் அடிப்படையிலும் இவர்களை வகைப்படுத்தியும் காணலாம்.

❖ இவரது பாத்திரங்களில் ஆசிரியரின் சுயசரிதை, ஆளுமை திருநெல்வேலி வட்டாரத்தன்மை போன்றவை பளிச்சிடுகின்றன. அஃறிணைப் பாத்திரங்களையும் படைத்துள்ளார்.

❖ அறநிலை மாந்தர்கள், இரக்கக்குணம் கொண்டவர்கள், மனநோயாளிகள், விளிம்புநிலை மனிதர்கள், நாடக நடிகர்கள் போன்றோர்களைப் படைத்து, அவர்களுள் குறிக்கோள் மாந்தர்களையும் காட்டியிருக்கிறார்.

❖ தம் கதைகளில் கருத்துப் புலப்பாட்டிற்குத் தொடக்க உத்தி சூழல் வர்ணனை, உரையாடல், பின்னோக்கு, நோக்குநிலை, தன்மைக் கூற்றுநிலை, கதைமுடிப்பு உத்தி போன்ற உத்திகளைக் கையாண்டு இருக்கின்றார்.

❖ நாட்டுப்புற மக்களின் வாழ்வியலையும் நகர மக்களின் வாழ்வியலையும் சிறப்பாக வெளிப்படுத்தும் ஆற்றல் இவருக்குண்டு.

## மேலாய்வுக் களங்கள்

இவரது படைப்புகள் பல கோணங்களில் கோட்பாடுகளைக் கொண்டு ஆய்வு செய்வதற்குரியவை. இருப்பினும் இவரது சிறுகதைகளைக் கீழ்க்கண்ட தலைப்புகளில் தனித்து ஆராயலாம்.

- சு.சமுத்திரம் சிறுகதைகளில் வட்டாரத்தன்மை
- சு.சமுத்திரம் சிறுகதைகளில் அமைப்பியல் பார்வை
- சு.சமுத்திரம் சிறுகதைகளில் விளிம்புநிலை மாந்தர்கள்
- சு.சமுத்திரம் கதைகளைப் பிற சிறுகதைகளுடன் ஒப்பாய்வு

# துணைநூற்பட்டியல்

**முதன்மை நூல்கள்**


சமுத்திரம், சு., **சு.சமுத்திரம் கதைகள் - 1**
ராஜராஜன் பதிப்பகம்,
10, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017,
முதற்பதிப்பு - 2000.

----------- **சு.சமுத்திரம் கதைகள் - 2**
ராஜராஜன் பதிப்பகம்,
10, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017,
முதற்பதிப்பு - 2000.


**துணை நூல்கள்**


அகத்தியலிங்கம், சு.பெ., **சு.சமுத்திரம் நானும் என் எழுத்தும்,**
ஏகலைவன் பதிப்பகம்,
சென்னை - 41,
பதிப்பு - 1999.

அகிலன் **எனது நாவல்களில் சமுதாயச் செய்தி,**
(கட்டுரை),
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு - 1985.

அப்துல் ரகுமான் **மகரந்த சிறகு,**
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு - ஜுலை, 2002.

அறிவுநம்பி, அ., **இலக்கியங்களும் உத்திகளும்**
அமுதன் நூலகம்
புதுச்சேரி - 605 011
முதற்பதிப்பு - நவம்பர், 2001.

இளம்பூரணர்
(உ.ஆ)

**தொல்காப்பியம் - பொருளதிகாரம்,**
கழக வெளியீடு,
திருநெல்வேலி - 5,
மறுபதிப்பு - 1969.

இராசா, கி.,

**இந்தியப் பெண்ணியம்**
பார்த்திபன் பதிப்பகம்,
ஏ-12, எல்.ஐ.சி. காலனி
திருச்சிராப்பள்ளி - 21
பதிப்பு -

இராமலிங்கம், மா.,

**நாவல் இலக்கியம்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
பை கிராப்ட்ஸ் ரோடு,
சென்னை - 5,
முதற்பதிப்பு - 1975.

இராமலிங்கம், மா.,

**தமிழ் உரைநடை வரலாறு,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 5,
முதற்பதிப்பு - 1978.

இராமலிங்கம், மா.,

**நோக்குநிலை,**
ராசி பதிப்பகம்,
கும்பகோணம்,
முதற்பதிப்பு - டிசம்பர் 1984.

இராஜமுத்திருளாண்டி

**மனித உரிமைகளும் இலக்கியங்களும்,**
சூர்யா பதிப்பகம்,
திருச்சி,
முதற்பதிப்பு - 2000.

இளவரசு, சோம.,

**இலக்கிய வரலாறு,**
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
தி.நகர், சென்னை - 5,
மறுபதிப்பு டிசம்பர் - 2000.

கணேசலிங்கன், செ., **கலையும் சமுதாயமும்,**
குமரன் பப்ளிஷர்ஸ்,
3, மெய்கை விநாயகர் தெரு,
குமரன் காலன், வடபழனி, சென்னை -20,
முதற்பதிப்பு - டிசம்பர் 2000.

கமலக்கண்ணன், வ., **இக்கால இலக்கியம் ஒரு நோக்கு,**
வ.கே. பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1985.

கல்கி **அலை ஓசை,**
பாரதி பதிப்பகம்,
சென்னை - 17,
முதற்பதிப்பு - 1955.

கனகசுந்தரம், வெ., **ஜெகசிற்பியின் சமூகப் புதினங்கள்**
வானதி பதிப்பகம்
சென்னை - 17
முதற்பதிப்பு - 1985.

கனகராசு, க., **அண்ணன்மார்சாமி கதை வடிவங்களும் வழிபாடும்,**
தி பார்க்கர், சென்னை - 14,
முதற் பதிப்பு - மார்ச் 2004.

கீதா, கோ.வெ., **தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம்,**
அணியகம், சென்னை,
முதல் பதிப்பு 1979.

குமாரவேலன், இரா., **கவிதை நாடகம் ஒரு கண்ணோட்டம்,**
அரசு பதிப்பகம்,
சென்னை - 600 001.

குலோத்துங்கன், கோ., **உழைப்போம் உயர்வோம்,**
குகன் பதிப்பகம்,
ஜீவாநகர், சென்னை - 82,
முதற்பதிப்பு ஜூலை - 1989.

குழந்தைசாமி, அ., **இருபதாம் நூற்றாண்டு கிறித்துவ புதினங்களில் மனித விடுதலை,**
*தி பார்க்கர், சென்னை - 14,*
*பதிப்பு நவம்பர் - 2004.*

சசிரேகா, சிவ., **தமிழ் இலக்கியங்கள் காட்டும் மகளிர் நிலை**
*பார்த்திபன் பதிப்பகம்,*
*மதுரை,*
*முதற்பதிப்பு - 1988.*

சண்முகசுந்தரம் (தொ.ஆ) **பெண்ணியமும் கலை இலக்கியப் பிரதிகளும்**
*வைகை அச்சகம்,*
*சென்னை,*
*முதற்பதிப்பு - 1994.*

சமுத்திரம், சு., **சு.சமுத்திரம் சிறுகதைகள் (அணிந்துரை),**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*சென்னை - 98,*
*முதற்பதிப்பு - 1983.*

சமுத்திரம், சு., **மண் சுமை (அணிந்துரை),**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*பாரிமுனை, சென்னை - 600 018,*
*முதற்பதிப்பு - 1991.*

சமுத்திரம், சு., **ஏவாத கணைகள்,**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*சென்னை - 600 098,*
*மூன்றாம் பதிப்பு - நவம்பர் 1995.*

சமுத்திரம், சு., **எனது கதைகளின் கதைகள்,**
*ஏகலைவன் பதிப்பகம்,*
*டாக்டர் இராதாகிருஷ்ணன் நகர்,*
*சென்னை - 600 041,*
*முதற்பதிப்பு - 1996.*

*சமுத்திரம், சு.,* **மூட்டம் (அணிந்துரை),**
*ஏகலைவன் பதிப்பகம்,*
*டாக்டர் இராதாகிருஷ்ணன் நகர்,*
*சென்னை - 600 041,*
*இரண்டாம் பதிப்பு - 1996.*

*சமுத்திரம், சு.,* **எனது கவிதைகளின் கதைகள்**
*ராஜராஜன் பதிப்பகம்,*
*தியாகராய நகர், சென்னை - 600 017,*
*பதிப்பு - 1997.*

*சமுத்திரம், சு.,* **சமுத்திரம் கட்டுரைகள்,**
*ஏகலைவன் பதிப்பகம்,*
*டாக்டர் இராதாகிருஷ்ணன் நகர்,*
*சென்னை - 600 041,*
*முதற்பதிப்பு டிசம்பர் - 1999.*

*சிங்காரவேலர், மா.,* **பொதுவுடைமை விளக்கம்,**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*சென்னை,*
*மூன்றாம் பதிப்பு - 1985.*

*சிவஞானமுனிவர் (உ.ஆ)* **நன்னூல்,**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை - 108,*
*மறுபதிப்பு - 1992.*

*சிவத்தம்பி, கா.,* **தமிழில் சிறுகதை தோற்றமும் வளர்ச்சியும்,**
*தமிழ் புத்தகாலயம்,*
*சென்னை - 600 005.*
*பதிப்பு -*

*சுப்ரமணியன், ச.வே.,* **இளங்கோவின் இலக்கிய உத்திகள்,**
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை - 13.*

செந்தில்நாதன், ச., **தமிழ்ச் சிறுகதைகளில் ஒரு மதிப்பீடு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை,
இரண்டாம் பதிப்பு - 1993.

செல்லப்பன், தி.சு., **வளரும் தமிழ்,**
அருணோதயா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1987.

செல்வராசன், மா., **பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர்,**
வண்ணமலர் வெளியீடு,
சென்னை,
பதிப்பு - 1979.

சோமசுந்தரம், ச., **தமிழ் இலக்கியக் கொள்கைகள்,**
அணியகம்,
சென்னை - 30,
முதற்பதிப்பு - 1981.

சையத் அகமது பிரோசு **இசுலாமியச் சிறுகதைகளில் வாழ்வியல்,**
மகாகவி பாரதியார் நூலகம்,
கோயம்புத்தூர்,
முதற்பதிப்பு - டிசம்பர் 2002.

ஞானசம்பந்தன், அ.ச., **இலக்கியக்கலை,**
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் பி (லி),
சென்னை - 600 108,
ஒன்பதாம் பதிப்பு - மே, 1989.

ஞானமூர்த்தி, தா.ஏ., **இலக்கியத் திறனாய்வியல்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
திருவல்லிக்கேணி, சென்னை - 5,
இரண்டாம் பதிப்பு - 1986.

ஞானி — **ஞானியின் பார்வையில் ச.சமுத்திரம்,**
ஏகலைவன் பதிப்பகம்,
டாக்டர் இராதா கிருஷ்ணன் நகர்,
சென்னை - 600 041,
முதல் பதிப்பு - 1918.

தண்டாயுதம், இரா., — **தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 5,
முதற்பதிப்பு - 1975.

தண்டாயுதம், இரா., — **நாவல் வளம்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 5,
முதற்பதிப்பு - 1975.

தயானந்தன் பிரான்சிஸ், தி., — **டாக்டர் தயாவின் இலக்கியப் பார்வைகள்,**
கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்,
பார்க் டவுன்,
சென்னை - 600 003.

தாயம்மாள் அறவாணன் — **உறவுமுறைகள்,**
பாரி நிலையம்,
பிராட்வே, சென்னை,
முதற்பதிப்பு - 1987.

தாயம்மாள் அறவாணன் — **தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 13.

திருமலை, ம., — **தமிழ் - மலையாள நாவல் ஓர் ஒப்பாய்வு,**
(ஜெயகாந்தனும் - தகழியும்),
மதுரை காமராசர் பதிப்புத்துறை,
மதுரை - 21,
முதற்பதிப்பு - 1987.

நடராசன், தி.சு., **திறனாய்வுக் கொள்கைகள்,**
அன்னம் புத்தக மையம்,
மதுரை,
பதிப்பு - 1979.

நடராஜன், தி.சு., **திறனாய்வுக் கொள்கைகளும் அணுகுமுறைகளும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை - 98,
நான்காம் பதிப்பு - மே, 2006.

பார்த்தசாரதி, நா., **தமிழில் சிறுகதை - மணிக்கொடி 1935**
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை - 13,

பாரதியார் **பாரதியார் கவிதைகள்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
பதிப்பு - 1992.

பாலச்சந்திரன், அ., **இலக்கியத் திறனாய்வு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர், சென்னை - 98,
ஆறாம் பதிப்பு - ஜூலை, 2003.

பாலசுப்ரமணியன், இரா., **நாவல் கலையியல்,**
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை - 113,
முதற் பதிப்பு - 2004.

பாலசுப்ரமணியன், கு.வெ., **ஆய்வியல் நெறிகள்,**
உமா நூல் வெளியீட்டகம்,
தஞ்சாவூர் - 613 004,
மூன்றாம் பதிப்பு - ஜூலை, 2004.

*பாஸ்கரதாஸ், ஈ.கோ.,* **மானிட மதிப்புகள்,**
*திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக (பி) லிட்., சென்னை - 18,*
*முதற்பதிப்பு - 1978.*

*பிச்சமுத்து, ந.,* **டாக்டர் மு.வ.புதினங்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம் (ஆய்வேடு),**
*சென்னைப் பல்கலைக்கழகம்,*
*பதிப்பு - 1978.*

*பிச்சமுத்து., ந.,* **திறனாய்வும் தமிழ் இலக்கிய கொள்கைகளும்**
*சக்தி வெளியீடு,*
*திருவல்லிக்கேணி, சென்னை - 5,*
*மறுபதிப்பு - 1998.*

*பிரேமா, மூ.,* **பெண்ணியம்,**
*உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,*
*தரமணி, சென்னை - 113,*
*முதற்பதிப்பு - 1994.*

*புவனேஸ்வரி, சு.,* **திலகவதி படைப்புகள் ஓர் ஆய்வு,**
*தி பார்க்கர்,*
*இராயப்பேட்டை நெடுஞ்சாலை,*
*சென்னை - 14.*

*பியூலா மெர்சி, தா.ஏ.,* **இருபதில் சிறுகதை,**
*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை - 17,*
*முதற்பதிப்பு - 1974.*

*மணிமாறன், த.,* **இலக்கிய கலை,**
*அருவி வெளியீட்டகம்,*
*சென்னை,*
*முதற்பதிப்பு - 1970.*

| | |
|---|---|
| மதியழகன், ம., | **தமிழியல் ஆய்வு வரலாறு,**<br>*ப்ரீத்தி வெளியீட்டகம்,*<br>*குறிஞ்சி நகர், புதுச்சேரி - 605 008,*<br>*முதற்பதிப்பு மார்ச் 1996.* |
| மறைமலை, சி.இ., | **புதுக்கவிதை முப்பெரும் உத்தி,**<br>*மணிசவாசகர் பதிப்பகம்,*<br>*பாரிமுனை, சென்னை - 600 108,*<br>*முதற்பதிப்பு - 1985.* |
| மறைமலை, சி.இ., | **இலக்கியமும் சமூகவியலும்,**<br>*மணிசவாசகர் பதிப்பகம்,*<br>*பாரிமுனை, சென்னை - 600 108,*<br>*முதற்பதிப்பு - 1991.* |
| மீனாட்சி முருகரத்தனம் | **கல்கியின் சிறுகதைக் கலை,**<br>*சர்வோதயா இலக்கியப் பண்ணை,*<br>*மதுரை - 1,*<br>*முதற்பதிப்பு - 1978.* |
| முத்துச்சண்முகம்<br>பெரியகருப்பன், இராம.,<br>(ப.ஆ) | **அகிலன் நாவல்களில் தலைமை மாந்தர்,**<br>*அகிலன் கருத்தரங்கம் ஆய்வுரைகள்,*<br>*6, பல்கலை கழகத்*<br>*தமிழ்த் துறை வெளியீடு,*<br>*மதுரை - 21,*<br>*முதற்பதிப்பு - சனவரி 1976.* |
| மோகன், இரா., | **டாக்டர் மு.வா.வின் நாவல்கள்,**<br>*சர்வோதயா இலக்கியப் பண்ணை,*<br>*மதுரை - 1,*<br>*பதிப்பு - 1976.* |
| மோகன், இரா., | **கு.ப.ராவின் சிறுகதைத் தொடக்கங்கள்,**<br>*எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை*<br>*தொகுதி - 1.* |

| | |
|---|---|
| மோகன், இரா., | **கு.ப.ராஜகோபாலன் சிறுகதைகள்,**<br>சர்வோதயா இலக்கியப் பண்ணை,<br>மதுரை - 1,<br>பதிப்பு - 1978. |
| ராமசாமி, ஈ.வெ., | **பெரியார் (அய்யா மொழி),**<br>திராவிடர் கழகம்,<br>சென்னை,<br>முதற்பதிப்பு - 1991. |
| வீராசாமி, தாவே.வ., | **தமிழ் சமூக நாவல்கள்,**<br>தமிழ்ப் புத்தகாலயம்,<br>திருவல்லிக்கேணி, சென்னை - 5,<br>முதற்பதிப்பு - 1978. |
| வெங்கட்ராமன், சு., | **அகிலன் சிறுகதைகள் ஓர் திறனாய்வு,**<br>தமிழ்ப் புத்தகாலயம்,<br>சென்னை - 5,<br>முதற்பதிப்பு - 1977. |
| வெங்கடேசன், மே., | **தமிழ்ச் சமுதாயம்,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை - 98. |
| வேணு, ஏ.எஸ்., | **பெரியார் ஓர் சரித்திரம்,**<br>பூம்புகார் பதிப்பகம்,<br>சென்னை,<br>இரண்டாம் பதிப்பு - 1996. |
| ஜெயகாந்தன் | **சில நேரங்களில் சில மனிதர்கள்(முன்னுரை)**<br>மீனாட்சி புத்தக நிலையம்<br>மதுரை, முதற்பதிப்பு - 1980. |
| சென்னை பல்கலைக்கழகம் | **இலக்கியக் கொள்கைகள்,**<br>பாடத்தொகுப்பு - ஐ,<br>சென்னைப் பல்கலைக்கழகம்,<br>சென்னை - 600 005. |

## இதழ்கள்

குருநாதன், இரா., — **கரந்தை மலர்,**
மருதம் பதிப்பகம்,
கரந்தை தமிழ்ச் சங்கம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு - 2002.

சண்முகவேலன், இரா., (க.ஆ) — **தமிழ்பொழில்,**
கரந்தை தமிழ்ச் சங்கம் வெளியீடு,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு 1988.

சதாசிவம் — **வளரும் தமிழ் உலகம்,**
7, வள்ளியம்மை 2ஆம் தெரு,
பெரிய வலது, ஈரோடு - 638 004,
பதிப்பு

**குமுதம் (வார இதழ்)**
நாள் : 20.1.1994.

**அன்னம் இறையியல் சிற்றேடு,**
ஏடு. 4, சிற்றேடு : 2,
வைகறைப் பதிப்பகம்,
திண்டுக்கல்,
1991.

**உலகத் தமிழ் ஆய்வுக் கோவை**
**தொகுதி** VII

## அகராதி

The New Encyclopeadia Britannica
Micropedia Vol. 9
The University of Chicago
Chicago
1982

## ஆய்வேடுகள்

இரஞ்சனா, சௌ., **கம்பராமாயணத்தில் எதிர்நிலை மாந்தர்கள்,**
*முனைவர் பட்ட ஆய்வேடு,*
*பாரதிதாசன் பல்கலைக்கழகம்,*
*திருச்சிராப்பள்ளி,*
*மார்ச் - 2001.*

செல்வம், சி., **எம்.வி.வெங்கட்ராம் கதைகள் ஓர் ஆய்வு,**
*பாரதிதாசன் பல்கலைக்கழகம்,*
*திருச்சிராப்பள்ளி,*
*2002.*

மனோகரன், மா., **பாரதிதாசன் சிறுகதைகள் ஓர் ஆய்வு,**
*ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,*
*பாரதிதாசன் பல்கலைக்கழகம்,*
*ஆகஸ்டு 2004.*

## ஆங்கில நூல்

Robert Heder Hage Dorn Robert - Sociology
Holt Richart and Windston of
Canador Ltd, Tovento,
First Edition - 1982.

